# 50% வரை தள்ளுபடி

பட்டு, ரெடிமேட்ஸ்
மற்றும் அனைத்து
ஜவுளிகளுக்கும்

ஃபான்ஸி ஸாரிகளுக்கு
தனி பிரிவு.

ஆடி வரும் அழகு ரதமாய்...

**குமரன் சில்க்ஸ்**
**வழங்கும்**
**ஆடி தள்ளுபடி**

# 10% - 50%

**ஜூலை 1 முதல்**
**ஆகஸ்ட் 17 வரை**

கிரெடிட் கார்டுகளும்,
ஃபாரின் கரன்சிகளும்
ஏற்கப்படும்.

---

எல்லா ஞாயிறும்
கடை உண்டு



ஆடைகளில் எல்லோருக்கும் எல்லாமுமே



# குமரன் சில்க்ஸ்

558-560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. போன் : 391555
73-74, புதுமார்க்கெட் வீதி, திருப்பூர் - 4. போன் : 742888

ஜனரஞ்சகமான ஜவுளி மாளிகை

Visit us at : www.kumaransilkscbe.com

SASI /40/ 99

மிகச் சிறப்பாகத்
தயாராகிறது!

# அமரர் கல்கி நூற்றாண்டு மலர்



**விவரங்கள் விரைவில்**

# மறுபடியும்

## போர்க் கால மேகங்கள்

மும்பையின் வழக்கமான கார்கால கிளுகிளுப்பை, போர்க்கால சூழல் கொஞ்சம் குறைத்திருப்பது ஒரு குறைதான். முக்கிய இடங்களிலெல்லாம் பாதுகாப்பு தீவிரப் படுத்தப்பட்டிருக்கிறது. எண்ணெய் வளமிக்க 'பாம்பே ஹை'யில் ஒரு நோட்டம் விட்ட இந்திய கப்பற் படையும், விமானப் படையும் அரபிக்கடல் வழி செக்யூரிட்டியை அதிகரித் திருக்கின்றன. பாகிஸ்தானிய கப்பற் படையிடம், அமெரிக்கர்களால் வழங்கப்பட்டிருக்கும் "ஹார்பூன் மிஸைல்ஸ்" இருப்பது, தாராபூர் அணுசக்தி நிலையம், பாம்பே ஹை போன்ற இடங்களுக்கும், பொதுவாகவே மும்பைக்கும் தலைவலி என்று கருதப்படுகிறது. பாபா அணுமின் மையத்திலும் படை வீரர்கள் அணி வகுத்து நிற்கிறார்கள். மந்திர், மஸ்ஜித்துகளில் பிரார்த்தனைகள் ஆரம்பித்து விட்டன. ஆங்காங்கே 'அமைதி ஓட்டம்' அது இது வென்று ஆளாளுக்கு ஜரூராக நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஹூம்... கார்கில் இப்படி கார் காலத்தைக் 'கில்' பண்ணுகிறதே!




• வீட் வேண்டும்...

## உழைப்புக்கேற்ற ஊதியம்

சகன்புஜ்பல் இரவு பகல் விழித்திருந்து, சிவாஜி பார்க்கில் பெரும் பேரணி நடத்திக் காட்டி, பவாருக்காக 'உழைத்தது' வீண் போக வில்லை! NCPயின் மாநில தலைமைப் பதவியை பரிசாகக் கொடுத்துவிட்டார் பவார். புஜ்பலின் வீடே என்சிபியின் மாநில ஆபீஸாக மாறிவிட்டது! அவருக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் ஒரே வேலை - தாக்கரேவுக்குத் தலைவலியைத் தருவிப்பது! கணேஷ் நாயக், குலாப் ராவ் கவாண்டே போன்ற சிவசேனை அதிருப்தியாளர்களைச் சேர்த்துக்கொண்டு, இருக்கும் முப்பது சுயேச்சை எம்.எல்.ஏ.க்களையும் வளைத்துப் போட்டு, எப்படியாவது சிவசேனை - பி.ஜே.பி அரசைக் கவிழ்த்து, என்.சி.பியை அரியணை ஏற்ற வேண்டும்! அவ்வளவுதானே... இதற்கு விட்டமின் 'எம்' இருந்தால் போதுமே... அனாவசியமாக உழைத்து, களைத்து, மக்கள் மத்தியில் என்.சி.பிக்கு ஒரு இமேஜை உருவாக்க வேண்டும் என்றெல்லாம் கட்டாயப்படுத்தாமல், பவார் விட்டாரே! எல்லாம் புஜ்பலின் பூஜா பலன்!

## வீட்டுக்கு 'வீடு'

ஒரு வீட்டுக்காக, ஒரு குடும்பமே 'வீடு' பேற்றை எய்திய கன்ராவிக் கதை மும்பையில் அரங்கேறியிருக்கிறது. விக்ரோலியில், "சந்தோஷி மாதா சாலி"ல் (ஒரு ரூம் வீடுகள்) ஏழு வருடங்களாகத் தன் குடும்பத்துடன் வசித்து வந்த சசிகாந்த் மோரேவை (35), ஒரு வருட காலமாக இடத்தைக் காலி பண்ணச் சொல்லி, அவரது அம்மாவும் சகோதரனும் வற்புறுத்தி வந்திருக்கின்றனர். அவர்களுக்கு அதை வாடகைக்கு விட வேண்டும்! மோரேவுக்கு, அவரது சொற்ப சம்பளத்தில் வாடகை வீடேதும் கிடைக்கவில்லை! எரிச்சலடைந்த மோரே, மனைவி, மகள் (3), மகன் (6), மாமனார்(!) எல்லோரையும் கெரஸின் விட்டுக் கொளுத்திவிட்டு, தானும் தீக்கிரையாகி விட்டார். மும்பையில், வானமே கூரையாக எத்தனை மக்கள் வாழ் கிறார்கள்? இப்படி வானுலகத்துக்கே குடி பெயர வேண்டுமா என்ன?

## நூற்றுக்கு நூறு

மார்க்குகளில்லை; மாணாக்கர்கள்! இனி ஒவ்வொரு கல்லூரியிலும், ஒரு கிளாசில் 100க்கு மேற்பட்ட மாணாக்கர்கள் இருக்கக் கூடாது என்ற புதுச்சட்டத்தை யுனிவர்ஸிடி

இயற்றினாலும் இயற்றியது, காமர்ஸில் பெருவாரியாகப் போய் விழும் கூட்டத்துக்கு பெரும் சங்கடமாகிவிட்டது. ஜூனியர் காலேஜில், ஒரு வகுப்புக்கு 120 என அனுமதி வழங்கி விட்டு, டிகிரியில் 100 என்று குறைத்தால் எப்படி? என்ன மார்க் வாங்கினாலும் அதே காலேஜில் நிச்சயம் இடமுண்டு என்று அசால்டாய் இருந்தவர்களுக்கு (கிட்டத்தட்ட 15,000) இது பெரும் பாடாகிவிட்டது! இவர்களுடன் பெற்றோருக்குமல்லவா தலைவலி? ஆனால், அண்மையில் ஸ்டூடண்ட்ஸ், பெற்றோர் எல்லோருமாகச் சேர்ந்துகொண்டு, ஆஜாத் மைதானில் பெரும் போராட்டமெல்லாம் நிகழ்த்தினார்கள். அமெரிக்கா, ஆஸ்திரேலியா, யு.கே, ஃப்ரான்ஸென்று, அந்நியக் கல்விக் கூடங்களிலிருந்து ஒரு படையே திரண்டு வந்து மும்பையில் கூடாரமடித்திருக்கிறதே? அந்தப் பக்கமாகப் பார்வையைத் திருப்ப வேண்டியதுதானே?

# 'கற்'காலம்?

## 'கற்'காலம்

மும்பை படுவேகமாக கற்காலத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. ரயிலடியோரக் குடிசைக் குடியிருப்புகளிலிருந்து விர் விர்ரென்று சரமாரியாக கற்கள் பறந்து வந்து, மும்பைக்காரர்களைப் பதம் பார்த்த வண்ணமிருக்கின்றன. சென்ற ஆண்டில் 80 கேஸ்கள், இந்த ஆண்டில் இதுவரை ஒரு டஜன் ட்ராஜடிகள். லேடஸ்ட், 19 வயது அர்ச்சனா ஜாதவ் என்ற கல்லூரி மாணவியுடையது. புகைப்படக் கலைஞராகும் விருப்பத்துடன், தானே சென்று, "கலர் டெவலப்பிங்" கோர்ஸில் சேர்ந்திருக்கிறார். திரும்பி வரும்போது, டோம்பிவிலி ஸ்டேஷனில் இறங்க இருந்தவரின் இடது கண்ணை, ட்ராக்குகளை ஒட்டிய குடிசைப் பகுதியிலிருந்து வீசப்பட்ட கல், பெயர்த்துவிட்டது! வழக்கம்போல ரயில்வே மந்திரி ராம்நாயக், யந்திரத்தனமாக வருத்தம் தெரிவித்து, நஷ்டஈடு ஏதாவது வழங்கி விடுவார்! ஆனால், கல்லெறிபவர்களைக் கண்டிக்கவென்றே அமைச்சரால் பிரத்யேகமாக நியமிக்கப்பட்டு, கொஞ்ச காலத்துக்கு சுறுசுறுப்பாய் இயங்கிய போலீஸ் ஸ்குவாடுக்கு என்ன ஆயிற்று? ஏற்கெனவே ரயில்வே லைனை ஒட்டி 50,000 மக்கள் வாழ்வது போதாதென்று, குர்லாவுக்கும் திலக் நகருக்கும் இடையே வேறு புதிதாக நூறு குடிசைகள் முளைத்திருக்கின்றனவே? திறப்பு விழாவுக்கு ராம்நாயக்கை அழைத்திருப்பார்களோ?

**டெவில் பீஸ்:-** கப்பை என்றோ கோட்டை விட்ட பிறகும், MTVயும் V சானலும் "கம் ஆன் இண்டியா..." வகையறா பாடல்களை விடாமல் ஒலிபரப்பிக் கொண்டிருப்பது எரிச்சலாயில்லை? மும்பையின் கிண்டலிஸ்ட் வட்டாரங்கள், "ஹேய்... ஸெமி ஃபைனலில் இந்தியா வந்துடுச்சு போய்.." என்று அம்பயராக வந்த வெங்கட்ராகவனைப் பார்த்து வயிற்றெரிச்சல் தீர முழங்கியது. இன்னும், கொஞ்சம் தீவிர நாட்டுப்பற்று கேஸ்கள், பெல்ஜியம், பிரான்ஸ், ஹாலந்து போன்ற நாடுகளிலெல்லாம் ஏற்கெனவே தடை விதிக்கப்பட்டுள்ள கோகோ கோலாவை, (குடித்த உடனே வயிற்றுப் போக்கு, வாந்தியாமே?) இந்திய கிரிக்கெட் வீரர்களுக்கு வேணுமென்றே ஊற்றிக் கொடுத்து, 'ஊத்திக்க' வைத்து விட்டதாக ரீல் விடலாமா எனத் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறார்களாம்.

— ஜெயஸ்ரீ ராஜ்



• முஸ்லீம்களும் இந்துக்களும் அஜுமார் கோயிலில் பிரார்த்திக்கிறார்கள்.

# மும்பை மசாலா

ஹே ராம்! மூன்று மாதங்களுக்கு முன்பு கமல், தன் மருதநாயகம் பட வேலைகளைத் தள்ளி வைத்து விட்டு, இந்தப்படத்தை ஆரம்பித்தபோது, பத்திரிகைகளில் தம் எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டார். அப்புறம், படப்பிடிப்பில் பிசியாகி விட்டார். இப்போது மறுபடி, படம் பற்றி ரொம்ப விலாவாரியாகப் பேசக்கூடாது என்ற எச்சரிக்கையுடன் பேசினாலும், நமது கேள்விகளுக்கு விளக்கமாகவே பதிலளித்தார் கமல்.

**கல்கி** : தலைப்பு ஹே ராம்; காந்தியும் படத்தில் ஒரு கேரக்டர் என்கிறபோது, காந்தியாக நடிக்கப் போகிறவர் யார் என்ற சஸ்பென்ஸ் ஏற்படுகிறது. அதைச் சொல்லுங்கள் முதலில்.

**கமல்ஹாசன்** : காந்தி சம்பந்தப்பட்ட காட்சிகளை எடுத்து முடித்தாகி விட்டது. நசுருதீன் ஷாதான் காந்தியாக நடித்திருக்கிறார்.

**கல்கி** : ரிச்சர்டு அடன்பரோ, தமது காந்தி படத்தில், நசுருதீன் ஷாவைப் பரிசீலித்துவிட்டு கடைசியில், பென் கிங்ஸ்லியை நடிக்க வைத்தாரே! நீங்கள் எந்த அடிப்படையில் அவரைத் தேர்ந்தெடுத்தீர்கள்?

**கமல்** : ரிச்சர்ட் அடன்பரோவுக்கு இந்தியா தெரியாது. ஆனால் எனக்கு நசுருதீன் ஷாவைத் தெரியும். அவர்கள், கீழ்வெண்மணியைப் பற்றி ஒரு படம் எடுத்தால் கூட, அந்த ஊர் நடிகர்களுக்குக் கறுப்பு பூசித்தான் நடிக்க வைப்பார்கள். காந்தி பற்றிய நாடகத்தைப் பார்த்தால் அவர் அந்தக் கதாபாத்திரத்துக்கு எத்தனை பொருத்த மானவர் என்று தெரியும்.

**கல்கி** : காந்தி வரும்பட்சத்தில், படத்தில் கோட்ஸேவும் வருவாரில்லையா? அந்த நடிகர் யார்?

**கமல்** : நிச்சயமாக வருகிறார்.



படம் : பிரவீன்குமார்

ஒரு மகாராஷ்டிர நடிகர், கோட்ஸேவாக நடித்திருக்கிறார்.

**கல்கி :** இந்தப் படத்தில் நடித்துக் கொண்டிருந்த போது, மோகன் கோகலே என்ற நடிகர் இறந்து விட்டாரே, அதனால் ஏதேனும் சிக்கல் ஏற்பட்டதா?

**கமல் :** பெரிசாய் ஒன்றுமில்லை. அவரை வைத்து ஏழெட்டு நாட்கள் ஷூட்டிங் முடிந்து விட்டது. அதனால் கொஞ்சம் பண விரயம். ஆனாலும், பணம் பெரிசில்லை. சம்பாதித்துக் கொள்ளலாம். ஆனால் அவர் ஒரு அற்புதமான மனிதர். மகாராஷ்டிர மாநிலத்துக்காரர் என்றாலும், அவரே தமிழ் பேசி நடித்தார். அதுவும் புரிகிற மாதிரி தமிழ்! அதுவுமில்லாமல், பதினெட்டு வருடங்களாக ஒரு திறமையான, நல்ல நடிகருக்கு நல்ல பிரேக் கிடைக்காமல் இருந்தது. இந்த வருடம் அவர் நடித்த அம்பேத்கர் படத்தில், அவருக்கு காந்தி வேடம். இதிலே, அவருக்கு வேறு விதமான கேரக்டர்; நேர் எதிரான கேரக்டர் என்று கூடச் சொல்லலாம். (கோட்ஸே?)

**கல்கி :** அவரது எதிர்பாராத மரணத்தை யடுத்து, அவரது குடும்பத்தினருக்கு ஆறுதல் சொல்வதில் ஆரம்பித்து, அவரது உடலை மும்பைக்கு அனுப்பி வைப்பது வரை மிகவும் பொறுப்புடன் நீங்கள் செயல்பட்டது பற்றி மும்பை பத்திரிகைகள் எழுதின....

**கமல் :** அவர் என் நல்ல நண்பர். என் மனைவி, ஒரு திரைப்பட சொஸைடி நடத்திய நாட்களிலிருந்தே பழக்கமானவர். நான் இறந்தால், என்னுடைய நண்பர்கள் இதுபோலத்தான் உதவுவார்கள் என்று நான் நம்புகிறேன்.

**கல்கி :** மருதநாயகத்துக்கு இந்துத்வா சக்திகளிடமிருந்து எதிர்ப்பு எழுந்தது. அதுபோல, இப்போது ஏதாவது பிரச்னை எழுமா?

**கமல் :** பத்திரிகைகளில் கூட அது ராணி பைனான்ஸ்; இது ராமர் ஃபைனான்ஸ் என்று எழுதினார்கள். எனக்கு ராணியும் பைனான்ஸ் பண்ணவில்லை; ராமரும் பண்ணவில்லை. நான் அது பற்றியெல்லாம் கவலைப்படவில்லை. நான் வட்டி தரத் தயார்! ராணி, ராமர் யார் பணம் கொடுத்தாலும் தாராளமாக வாங்கிக் கொள்வேன். எனக்குத் தெரிந்ததை நியாயம், நேர்மை என்று நான் நினைப்பதைப் படம் எடுக்கிறேன். மற்றபடி, எந்தப் பிரச்னையும் இடையாது.

**கல்கி :** ஹே ராம் ஆரம்பித்தவுடன் அளித்த பேட்டியில், காந்தியை மகாத்மாவாக உங்களால் பார்க்க முடியவில்லை என்று சொல்லியிருந்தீர்கள். ஆனால், அது பற்றி விரிவாக விளக்கம் தரவில்லை. இப்போது பதில் சொல்லுங்கள்!

**கமல் :** காந்திஜியை, மகாத்மாவாகப் பார்ப்பதில் பல இடைஞ்சல்கள் இருக்கின்றன. நான் பாரதியாரையே வெறும் கவிஞராகத்தான் பார்க்கிறேன். மகா கவியாக்கி விடுவதன் மூலம், இன்னொருவர் நல்ல கவிஞராக வராமல் தடுக்கப்பட்டு விடுகிறார். கால் ஊனமுற்றவர்களுக்கு ஊனமுற்ற ஒருவர் ஒலிம்பிக் வீரரான கதையைச் சொல்லி, ஊக்கம் கொடுப்பார்களே, பார்வை இல்லாதவர்களுக்கு ஹெலன் கெல்லர் கதை சொல்லுவார்களே, அதுபோல, திறமையானவர்கள் வளருவதற்கு அவர்களை முன்னுதாரணமாகக் கூற வேண்டும். காந்திஜி போன்றவர்கள், என்னுடைய ஹீரோக்களாகாமல் போனதற்கு இப்படி மகாத்மாக்களாக்கியது தான் காரணம் என்பேன்.

ஆக, நான் சொல்ல வருவது காந்தியை மகாத்மாவாக்கி, தனிமைப் படுத்தி விடாமல், இன்னும் நிறைய காந்திகள் உருவாக வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுங்கள் என்பதுதான்.

இந்தியாவில் நிறையப் பேர் காந்தியைப் போல வரமுடியும். அதற்கான 'தில்' வேணும்.

## பிரச்னை கிளப்பும் மகராசன்கள்!



காந்தியைப் போல இந்த நாட்டில் நிறையப் பேர் இருக்கிறார்கள். ஆனால் அப்படி எண்ணு வதே ஒரு அபகாரியம் போல நினைத்து விடு கிறார்கள். ராஜா மாதிரி வர வேண்டும் என்று சொல்லுவது எப்படி ராஜ துரோகம் ஆகும்?

**கல்கி :** பூணூலுடன் பிராமண இளைஞன், கையில் துப்பாக்கி. இப்படித்தான் ஹே ராம் படத்தின் முதல் கட்ட விளம்பரம் வெளியா னது. அது ஆரம்ப கால பரபரப்புக்கான விஷ யமா? இல்லை படத்தின் அங்கம்தானா?

**கமல் :** பரபரப்புக்காகச் செய்யப்பட்டது அல்ல; படம் பார்த்தால் உங்களுக்கே புரியும்.

**கல்கி :** கமல் என்றாலே, டூயட், டான்ஸ் என்று ரசிகர்கள் எதிர்பார்ப்பது சகஜம். ஹே ராமிலும் டூயட் உண்டா?

**கமல் :** டூயட் என்று கிடையாது. அதே நேரம் இது நான் மக்களுக்குப் போய்ச் சேர வேண்டும் என்று எடுக்கிற படம்தான். எனவே பாடல் காட்சிகள், காதல் காட்சிகள், கோப வசனம், கவிதை எழுதுவது இதையெல்லாம் நான் அந்நியமாக நினைக்கவில்லை. நான் ஏதோ சினிமாவை மேம்படுத்த முயற்சி செய்து கொண்டிருப்பதாக நினைக்கவில்லை. என்னை நானே மேம்படுத்திக் கொள்ள முயல்கிறேன் என்பதுதான் சரி! உண்மை! அதில் நான் ஏதா வது வித்தியாசமாகச் செய்கிறபோது 'நல்லா யிருக்கிறதே இந்த சினிமா' என்று பாராட்டுகிறார் கள். நான் அறிவு ஜீவி அல்ல; வெறும் ஜீவி.

**கல்கி :** காந்தியிடம் உதவியாளராக இருந்த கல்யாணம் என்பவரை நீங்கள் சந்தித்துப் பேசி னீர்களாமே!

**கமல் :** கல்யாணத்தை நான் சந்திக்க வில்லை. ஆனால் காந்தியைப் பற்றி ஏராள மானவர்கள் புத்தகம் எழுதியிருக்கிறார்கள். எனவே நான் நேரில் சந்தித்துப் பலரைத் தொந் தரவு செய்யாமல் விட்டு விட்டேன். அதே சமயம், காந்தியின் கொள்ளுப் பேரரான துஷார் காந்தியுடன், படத்துக்கான ரிசர்ச் என்று ஆரம்பித்த அறிமுகம், இன்று நல்ல நட் பாகவே வளர்ந்திருக்கிறது. காந்தி ஸ்மிருதி என்ற இடத்தில் ஏகப்பட்ட புத்தகங்கள் இருக் கின்றன. அவற்றில் ஒரு பத்து புத்தகங்களைப் படித்தாலே போதும். இப்படி ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைத்தது என்பதுதான் பெருமைக் குரிய விஷயம்.

**கல்கி :** காந்தி சாகிறபோது, 'ஹே ராம்!' என்று சொல்லவே இல்லை என்று ஒரு சர்ச்சை கிளப்பியர் கல்யாணம். உங்கள் படத்துக்கு அதையே தலைப்பாக்கியிருக்கிறீர்களே!

**கமல் :** படம் பார்த்தால் தெரியும்! அதைப் பற்றி நான் இப்போது ஒன்றுமே சொல்ல விரும் பலை. நான் இப்போது எது சொன்னாலும், இவர் எப்படி இதுபோல சொல்லலாம்? என்று பிரச்னை கிளப்ப சில மகராசன்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே என் பதில் மௌனம்தான்.

**கல்கி :** எல். சுப்ரமணியம் இசையமைப்பில், டி.கே. பட்டம்மாள் ஒரு பாடல் (வைஷ்ணவ ஜனதோ) பாடியிருக்கிறாரே! நீங்கள் நினைத் திருந்தால், அவர் இளம் வயதில் பாடிய அதே பாட்டைப் பயன்படுத்தியிருக்கலாம். அப்படி யில்லாமல், இந்தத் தள்ளாத வயதில் மறுபடி பாடச் செய்தது ஏன்?

**கமல் :** கதைக்கு அப்படி ஒரு பாடல் மிக அவசியமாக இருந்தது. பட்டம்மாளைக் கேட்ட போது, அவர் மறுத்திருக்கலாம். ஆனால், அவருடைய பெருந்தன்மை, ஒப்புக் கொண்டு பாடிக் கொடுத்தார். அந்தப் பாடல் அந்தக் காலத்தின் எதிரொலியாக இருக்க வேண்டும் என நினைத்தேன். அவரது குரலில் இப்போது, தள்ளாமையும், கரகரப்பும் இருந்தால் கூட ஓர் இனிமை இருப்பதை நான் காண்கிறேன். அது எனக்கு அவர் அளித்த கௌரவம் என்றுதான் நான் நினைக்கிறேன்.

**கல்கி :** இன்று இந்தியாவில் இருக்கிற சுயநல அரசியல், லஞ்ச ஊழல், போன்ற வற்றைப் பார்த்து வருத்தப்படுகிற இந்தியக் குடி மகன்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். அத் தகையவர்களின் உணர்வை, தேசபக்தியை, ஆதங்கத்தை வெளிப்படுத்தும் முயற்சிதான் ஹே ராம் என்று சொல்லலாமா?

**கமல் :** நான் ஒரு கருத்து சொல்கிறேன், இதற்கு மாற்றுக் கருத்துகள் கூட இருக்கலாம். லஞ்ச ஊழல் என்பது இந்தியாவுக்குப் புதி தல்ல. காந்தி காலத்திலும் லஞ்சம், ஊழல் இருந்தது. அன்றும் காசு கைமாறியது. இன்று புது வடிவம்; காந்திப் படம் போட்ட பணம் கைமாறுகிறது. அப்போதும் விபசாரம் இருந் தது. ஆபாச ரசனையை வெளிப்படுத்தும் போக்கு இருந்தது. அப்போது வேறு தொனியில் இருந்தது. இப்போது தொனி மாறிவிட்டது. இன்று மக்கள் தொகை பெருக்கத்துக் கேற்ப அத்தகையவர்கள் எண்ணிக்கையும் பெருகி யிருக்கிறது. இதில் என்ன ஒரு விஷயம், அன்று இது போன்ற விஷயங்களை எதிர்த்துக் குரல் கொடுக்கும் 'வில்லவர்' இருந்தது. அதை காலப் போக்கில் வளர விடாமல் தடுத்து விட்டார்கள்.

**கல்கி :** இந்தப் படம் ரிலீஸ் ஆகிறபோது எப்படிப்பட்ட ஒரு அங்கீகாரம் கிடைத்தால் நீங்கள் திருப்தியடைவீர்கள்?

**கமல் :** மக்கள் நிறையப் பேர் பார்க்க வேண்டும். அதுதான் நான் எதிர்பார்ப்பது, விரும்புவது. அது நடந்து விட்டால் தன்னா லேயே பணம் வந்துவிடும். கிராமத்துக்குப் போன முதல் அரசியல்வாதியே காந்திதான். கமல்ஹாசன், ரஜினி காந்த் சினி மாக்களை

விட, பி. அண்டு சி சென்டர்களுக்குள்ளே ஊடுருவியவர் அவர்தான். அதனால், அதில் பாதியளவு என் படம் போனால் போதும். என் படம் மாபெரும் வெற்றி பெற்றதாக அர்த்தம்.

**கல்கி :** படம் எப்போது ரிலீஸ் ஆகப் போகிறது?

**கமல் :** அநேகமாக என் பிறந்த நாள் அன்று. ஏன் பிறந்த நாள் என்று சொல்கிறேன் என்றால், அதுதான் என் தந்தையின் இறந்த நாளும் கூட! உபரியாக இந்த வருடம் தீபாவளியும் அதே நாளில் வருகிறது. (நவம்பர் 7).

**கல்கி :** இந்தப் படத்துக்காக, காந்தியைப் பற்றி நிறைய ரிசர்ச் பண்ணியிருக்கிறீர்கள். அப்போது ஏற்பட்ட நெகிழ்ச்சியான அனுபவம் ஏதாவது சொல்ல முடியுமா?

**கமல் :** சிறு வயதில் காந்தி மீது எனக்கு ஆர்வம் ஏற்படுவதற்குக் காரணம் என் அப்பா. ஆனால், இந்தப் படம் சம்பந்தப்பட்ட ரிசர்ச் ஆரம்பித்தபின் நான் தெரிந்து கொண்டவை, புரிந்து கொண்டவை ஏராளம். சபாக்ஹசன் மன்சூர் என்ற எழுத்தாளரைப் பற்றித் தெரிந்து கொண்டபோது நான் நெகிழ்ந்து போனேன். அவர் பாகிஸ்தானுக்குப் போய், உருது மொழியில் எழுதியதால், நம்நாடு, குறிப்பாக தமிழ்நாடு மிக அற்புதமான படைப்பாளியைப் பற்றி அறிய வாய்ப்பு இல்லாமலேயே போய் விட்டது. மத வேறுபாடுகளையெல்லாம் கடந்து, என்னைப் பற்றி, உங்களைப் பற்றி எல்லாரையும் பற்றி எழுதியிருக்கிறார். அவரது படைப்புகளுக்காக, அவரைப் பாகிஸ்தானில் கைது கூட செய்திருக்கிறார்கள். அற்புதமான உலகத் தர எழுத்தாளர். காந்தியைக் கூட அப்படித்தான் நம் ஊரில் ஆக்கிவிட்டார்கள். கஸ்தூர்பா, போர்பந்தர் என்று சொல்லி பாடப் புத்தகத்துக்குள்ளே அவரை அடக்கிவிட்டார்கள். வீர சவர்க்கரின் எழுத்துக்களைப் படித்தபோது பிரமித்துப் போனேன்.

• காந்தியாக நசுருதீன் ஷா

படம் : யோகா

**கல்கி :** இந்தப் படத்தைப் பொறுத்தவரை உங்களுக்கு ஏற்பட்ட மிக முக்கியமான அனுபவம் என்று எதைச் சொல்லுவீர்கள்? இந்தப் படம் எடுப்பதே ஒரு புதிய அனுபவம்தான் என்று ஒரே வரி பதில் வேண்டாமே!

**கமல் :** என்னைப் பொறுத்தவரை ஒவ்வொரு படமுமே ஒவ்வொருவிதமான அனுபவம். இந்தப் படத்தில் என்ன அனுபவம் என்றால், இந்தியாவைப் பற்றிப் புரிந்து கொள்ளுவதற்கான ஒரு வாய்ப்பு. இன்று இருக்கும் எல்லா சோகங்களுக்கும் என்றைக்கோ விதை ஊன்றப்பட்டு விட்டது. இன்று மரம் என் தலைமீது விழுந்தாலும், அதற்கு விதை போட்டவர் என் அப்பா அல்லது தாத்தா. அதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. என்னை நடு நிலைமையில் வைத்துக் கொண்டு பல தரப்பு வாதங்களையும் நான் தெரிந்து கொண்டேன். எல்லா கோணங்கள், வாதங்களையும் மீறி விரிடும் குரல் ஒன்று ஒலிக்கிறதே! அதுதான் மனித நேயம்! அது எல்லா எல்லைகளையும் கடந்தது. அதுதான் மனிதனுக்கு விழி!

**கல்கி :** சற்றே சப்ஜெக்டிலிருந்து விலகி ஒரு கேள்வி. உங்களை சமீப காலமாக ஒரு கறுப்புச் சட்டைகாரராக அடையாளம் காட்டிக் கொள்ளுவதன் காரணம் என்ன?

**கமல் :** நான் தி.க.காரன் இல்லை. பெரியாரின் சில கொள்கைகள் பிடித்திருக்கின்றன. எனக்கு காந்தியைப் பிடித்திருக்கிறது என்பதால், நான் காங்கிரஸ்காரனும் அல்ல. வாஞ்சிநாதனை எனக்குப் பிடித்திருக்கிறது என்பதால் என்னைத் தீவிரவாதி என்று சொல்லிவிட முடியாது. இன்றுள்ள சூழ்நிலையில் சுதந்தரத்துக்காகவே ஒரு கவர்னரைச் சுட்டாலும், அவன் டெரரிஸ்ட்தான். பாரதியாரை எனக்குப் பிடித்திருக்கக் காரணம் அவரது கவிதை. ஒரு விஷயம் பிடித்திருக்கிறது என்பதற்காக ஒருவரை முழு மையாக ஏற்றுக் கொண்டு விட முடியாதே! அப்படிச் செய்தால் பாரதியாருக்கு ஏற்பட்டது போல, வேறு ஏதாவது யானை என்னை முட்டிக் கொன்றுவிடும்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படம் : **ஸ்ரீஹரி**

# வாஜ்பாய் Vs பாசு: சந்திக்கு

• ஜோதிபாசு

● பி.ஜே.பி. தகவல் தொடர்புத் துறைத் தலைவராக ராஜ்ய சபா உறுப்பினர் அருண் ஷௌரி நியமிக்கப்பட்டிருக்கிறார். ஷௌரி, பி.ஜே.பி.யின் மூன்று செயலாளர்களுடன் ஒருங்கிணைந்து பணியாற்றுவார். ஷௌரியின் முதல் பணி கார்கில் பற்றிய பல நுணுக்கமான விவரங்களை அவருக்கே உரித்தான 'பார்வையில்' திரட்டுவது. அதைப் பற்றி எழுதுவது. பின் பல இடங்களில் விவரங்களை (அதாவது எப்படி தொடர்ந்த காங்கிரஸ் அரசுகளின் தோல்வி அது என்று) 'விதைப்பது'. அதற்காக இப்போது ஷௌரி முழு மூச்சுடன் நேருவின் முப்பாட்டனார் காலத்திலிருந்து விவரங்களைத் திரட்டுகிறார். தமது 'வியூ பாயிண்ட்டில்.' அப்படி அவர் 'விதைத்த' சில விவரங்கள் பல பத்திரிகைகளில் 'அச்சு' பரப்பப்பட்டன. செய்தி ஒலிபரப்பு அமைச்சர் பிரமோத் மஹாஜன் உடனடியாக தூர்தர்ஷனில் ஒரு குழு விவாதம் நடத்த வேண்டுமென்று ஷௌரி கட்டளையிட்டார். மஹாஜனின் மௌனம் ஷௌரியை வெறுப்பேற்ற, கட்சி மீடியா செல் தலைவர் பதவியை ஒப்புக்கொண்டு கையெழுத்தின் ஈரம் உலர்வதற்குள் ராஜினாமா செய்து விட்டாரென்று பேசப்பட்டது. மஹாஜன் தமது மித்திரர் சுதான்ஷு மிட்டலின் உதவியில் ஒரு 'இணை' மீடியா செல்லைத் தமது வீட்டில் துவங்கி விட்டார். இன்றைய தேதியில் மிகச் சிறந்த கம்ப்யூட்டர்களும், டெக்னாலஜியும் அடங்கிய ஒரு முழு யூனிட் மகாஜனின் பங்களாவில் அமைக்கப்பட்டிருக்கிறது. ஷௌரி அதைப் பார்வையிட அழைக்கப்பட்டார். வேண்டா வெறுப்பாகப் பார்வையிடவும் செய்தார். ஆனால் ஹரியானாவில் நடந்த மீடியா பயிற்சி முகாமின் துவக்க நாளன்று ஷௌரி ஆப்ஸென்ட்!



• வாஜ்பாய்

கோவிந்தாச்சார்யா, ஜனா கிருஷ்ணமூர்த்தி, ஜே.பி. மாத்தூர் போன்றோர் கலந்து கொண்ட பயிற்சி முகாமை நடத்தியவர் தினாநாத் மிஷ்ரா. இவர்தான் அருண் ஷௌரிக்கு முன் பி.ஜே.பி. தகவல் தொடர்புத் துறைத் தலைவராக இருந்தவர்.

ஆர்.எஸ்.எஸ். தன் பங்கிற்கு ஒரு மீடியா செல்லை அமைத்திருக்கிறது. 'விஷ்வ சம்வாத் கேந்திரா' என்றழைக்கப்படும் இந்தச் செய்தி மையம் கரோல் பாக்கில் மையம் கொண்டுள்ளது. இதில் ஈடு

பட்டுள்ளவர் எம். குருமூர்த்தி என்ற தமிழர். காரியங்கள் ஆற்றுவதில் மிகவும் நிபுணர் என்று பெயரெடுத்தவர். ஆனால் இந்த மீடியா செல்லிற்கு இன்னும் 'ப்ரொஃபஷனல்' பத்திரிகைக்காரர்களின் உதவியைச் சங்கம் நாடவில்லை. சோனியா கட்சியும் இப்போது விளம்பரத்துக்காகத் தனது மீடியா செல்லைத் தூர் வாரிக் கொண்டிருக்கிறது. இப்போது ஆளும் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ஆக தேர்தல் நெருங்க, நெருங்க கட்சிகளின் மீடியா மையங்கள் மசாலா இரிக்க ஆரம்பித்து விட்டன. பல பத்திரிகைகளுக்கும் இனி நல்ல கரம் மசாலா செய்தி மீல்ஸ்கள் விநியோகம் ஆகும்!

● மூப்பனார் சோனியாவைச் சந்தித்த பிறகு, மேலும் குழம்பிப் போயிருக்கிறாராம். மீண்டும் அகில இந்தியப் பொறுப்பு எதுவும் கொடுக்கக் கூடாது என்கிறாராம்.

● புதிய தமிழகம் தலைவர் கிருஷ்ண சாமி டெல்லிக்கு ரகசியமாக வந்து விட்ட தாக நினைத்தார். ரகசியமாகவே சோனியா வைச் சந்தித்தாக நினைத்தார். ஆனால் டெல்லியில் கேரளா அரசு பங்களாவில் தங்கியிருந்தவர்(?) சில பத்திரிகையாளர் களிடம் பிடிபட்டார். "நீங்கள் சோனி யாவைச் சந்தித்தீர்களா?" என்றதற்கு, "அது எப்படி உங்களுக்கு விஷயம் வந்து விட்டது" என்று எதிர்க்கேள்வி கேட்டார். "ஐயா இது டெல்லி. தர்பாரில் நடப்பது தெரியாமல் எந்த ஜர்னலிஸ்ட் பொழப்பை நடத்த முடியும்'' என்றதற்கு, ''ஒன்றுமில்லை சும்மா...'' என்று மென்று விழுங் கினார். ஆனால் தொடர்ந்து வலது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் சிலரைச் சந்தித்தவர், அ.இ.மு.க. நீங்கலான ஒரு மூன்றாம் அணி குறித்துத் தீவிரமாகப் பேசி னாராம்! "பி.ஜே.பி. - தி.மு.க அணியை எதிர்க்க வேண்டும்" என்றாராம் வ.கம்யூனிஸ்ட் களிடம். ஆனால் இவர் கேட் கும் அளவு இடங்கள் கொடுத் தால் மூன்றாம் அணி தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு போக வேண்டியதுதான் என்றார் நம்மிடம் விவரங்களைக் கக்கிய வலதுசாரி மார்க் ஸிஸ்ட் ஒருவர். ஆனால் கி.சாமியுடன் வந்த ஒருவர் கடலோரப் பகுதியில் சந்தே காஸ்பதமான தொழில் செய்து வருபவர். இவரை உளவுத்துறை கண்காணித்தது. "இப்படி நண்பர்களை வைத்துக்கொண்டு

• மூப்பனார்

• கோவிந்தாச்சார்யா

• அருண்ஷௌரி

• கிருஷ்ண சாமி

• ராமதாஸ்

# வந்த சண்டை!

சோனியா மீண்டும் மீண்டும் கூறியது: "த.மா.கா.வை மேலும் தடுமாற வைத்து விடாதீர்கள். தாய்க் கட்சியுடன் இணைத்து விடுங்கள்." இந்த புது ஃபார்முலாபடி, மூப்பனார் ஒட்டுமொத்த தமிழ் நாடு காங்கிரஸின் தலைவராவார். தேர்தல் முடிந்து, மீண்டும் பழையபடி அகில இந்தியக் கட்சியின் பொதுச்செயலாளரா வார். மூப்பனார் விரோத அணியையும் தேர்தல்வரைதான் மூப்பனார் தலைவர் என்று சொல்லிச் சமாளித்துக் கொள்ளலாம். ஆனால் அர்ஜுன்சிங், மூப்பனாருக்கு



"வாசல்ல ரொம்ப நேரமா ஒரு பிச்சைக்காரன் நின்னுகிட்டிருக்கானுங்க தலைவரே..."

"ஒரு ரூபா காசைப் போட்டு அனுப்ப வேண்டியதுதானேய்யா..."

"அவனுக்குக் காசெல்லாம் வேண் டாமாம். அவனோட பையனுக்கு மெடிக்கல் காலேஜ் சீட் வேணுமாம்! என்ன விலைன்னு கேக்குறான்!"

— ஸ்ரீதர்

எவரின் நம்பிக்கையைப் பெறுவார் இவர்" என்றார் அந்த மார்க்ஸிஸ்ட். மேலும் அந்தக் காம்ரேட் கி. சாமியிடம் "உங்கள் கட்சியில் உட்கட்சி முறை என்ன? அல்லது கன்ஷிராம் போல் நீங்களும் வைத்தது சட்டம் என்று கட்சி நடத்துகிறீர்களா" என்றெல்லாம் கேட்டாராம். கி.சாமியும் எங்கள் கட்சியில் உட்கட்சி ஜனநாயகம் முதுகெலும்பு போன்றது. தேசியச் செயலாளர், மாவட்ட நிர்வாகிகள் எல்லாம் உண்டு என்றாராம்.

● ரகசியமாக வந்து சென்ற இன்னொரு நபர் டாக்டர் ராம்தாஸ். சௌத் அவென்யூ எம்.பி.க்கள் குடியிருப்பில் தங்கியிருந்தவர், அங்கு மின்சார ட்ரான்ஸ்ஃபார்மர் எரிந்து மின்சாரமில்லாமல் போக, ஒரு ஹோட்டலுக்குச் சென்று விட்டார். எந்த ஹோட்டல் என்று சொல்லக்கூட மறுத்து விட்டனர் டாக்டரின் விருந்தோம்பிகள். அவருக்கு நெருக்கமான பத்திரிகையாளர்களுக்கே டிமிக்கி கொடுத்து விட்டு, அவர்களை முற்றிலும் நிராகரித்து விட்டார் ராம்தாஸ். 'தி.மு.க. எட்டு தொகுதிகளைக் கொடுக்காதென்று நொந்து போய், இப்போது மாற்றணிக்குத் தாவி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார் தாஸ்' என்றார் அவருக்கு ஆரம்ப நாளில் பல உதவிகள் செய்த ஒரு டெல்லி நிருபர்.

● நல்லிணக்கப் பேருந்து டாக்கா சென்று பங்களாதேஷ் - இந்திய நல்லுறவை வளர்த்ததோ இல்லையோ, ஜோதிபாசு - அடல் பிஹாரி உறவு விரிசல் அயல் மண்ணிலும் சிரிப்பாய் சிரித்தது. முதலில் பாசுவும் பிரதமரும் பேருந்திலேயே ஒன்றாகப் பயணம் செய்வதாக இருந்தனர். பின் பாதுகாப்பு கருதி, இருவரும் டாக்கா சென்று பேருந்து இந்திய எல்லையைத் தாண்டி வருவதை வரவேற்பதென்று தீர்மானமாயிற்று. பாசு ஒருநாள் முன்னதாகவே டாக்கா சென்று சேர்ந்து விட்டார். சென்றவர் 'ப்ரோட்டகால்' அவசியமிருந்தும், பங்களாதேஷ் அதிபர் ஷேக் ஹஸீனாவுடன் இணைந்து பிரதமரை வரவேற்க மறுத்து விட்டார்! பேருந்துப் பயணம் பல பிரச்னைகளுக்கிடையே துவங்கியது. பாசு 66 பேர் அடங்கிய பட்டியல் ஒன்றைக் கொடுத்தார். இதென்ன பள்ளிச் சுற்றுலாவா என்றது பிரதமர் அலுவலகம். பின் ஒரு சிலருக்கு மட்டும் பாசுவுடன் வர அனுமதி கொடுத்தது. வங்கக் கவிஞர் சுனில் கங்கோபாத்யாயா அனுமதி மறுக்கப்பட, பாசு பிரதமரை ஒரு பிடி பிடிக்க, பின் அளிக்கப்பட்ட அனுமதியை மறுதலித்தார் வங்கக் கவிஞர். மாக்ஸேஸாய் விருது பெற்ற எழுத்தாளர் மஹாஸ்வேதா தேவி, "கங்கோபாத்யாயா மறுத்ததால் அவரிடத்தில் என் பெயரைப் பட்டியலில் சேர்த்திருக்கிறீர்கள்" என்று கூறி பயணத்திலும் கலந்து கொள்ள மறுத்து விட்டார்.

பாசுவை இறுதி நேரத்தில் பிரதமர் போகும் விமானத்திலேயே டாக்கா செல்லும்படி பிரதமர் அலுவலகம் கோர, "நானென்ன நூறோடு ஒன்றா" என்று மறுத்து விட்டார்!

பாசு ஒரிஜினல் பங்களாதேஷ்காரர். அவரால்தான் இந்த நல்லிணக்கப் பயணமே சாத்தியமானது என்றனர் 'காம்ரேட்ஸ் இன் ஆர்ம்ஸ்'. "அங்குள்ள ரிக்ஷாக்காரனுக்குக் கூட பாசுவைத் தெரியும். யாரிந்த சங்கி (வாஜ்பேயி) உலக வங்காளிகளின் மூத்த அண்ணனை ஆணையிட!" என்றனர் செஞ்சட்டையினர். ஆக, டாக்காவில் இருவரும் முகத்தைத் திருப்பிக் கொள்ளும் காட்சி புகைப்படங்களாய், தொலைக்காட்சி ஒளிப் பிம்பங்களாய் சந்திக்கு வந்தது.

— இந்த்ரப்ரஸ்தன்



• செம்மங்குடி

தமிழ்ச் சங்கத்தில் நடந்தது ரவுண்ட் - 1 என்றால், ஷண்முகானந்தாவில் நடைபெற்றது ரவுண்ட் - 2! நாவலுக்கு முதல் பாகம் இரண்டாம் பாகம் என்றிருப்பது போல், விழாக் கொண்டாட்டங்களிலும் இது ஒரு புது மரபு!

ஹரிஹரபுத்ர சங்கரநாராயண கணபதி



• விழா மேடையில்....

சுப்ரமணியம் என்று திருநெல்வேலிக்காரர்கள் பல பெயர்களை இணைத்து ஒரே நபருக்குப் பெயரிடுவது போல், இங்கே ஷண்முகானந்தா, பாரதீய வித்யாபவன், S.I.E.S. (South Indian Educational Society), ராஜ ராஜேஸ்வரி நாட்டிய கலா மந்திர் என்ற வெவ்வேறு அமைப்புகள் ஒருமித்து, நூற்றாண்டின் தலைசிறந்த எழுத்துலக மேதைக்கு விழா எடுத்திருந்தன. (உவமை உபயம் - செம்மங்குடி!)

தமிழ் கூறும் நல்லுலகத்துக்கே இது ஒரு தனிப் பெருமைதான்! ஆன்மிகம் என்ற ஒரே கொள்கையை வைத்துக் கொண்டு, ஆயிரத்தெட்டு அமைப்புகள், (பக்த சங்கம், பஜன சமாஜம், ஆஸ்திக சமாஜம், கைங்கர்ய சபை etc... etc...) தனித்தனியாக இயங்கி வரும் மும்பையில் (ஒரே ஐயப்ப பூஜை, ஒரே இடத்தில், எட்டு முறை வெவ்வேறு இயக்கங்களால் கொண்டாடப்படுமே?), நுண்கலை, ஆன்மிகம், கல்வி, நாட்டியம் என்ற வெவ்வேறு இலக்குகளை உடைய அமைப்புகளை ஒருங்கிணைத்து விழா எடுக்க வைத்திருக்கிறதென்றால், கல்கியின் எழுத்துக்கு எவ்வளவு வலிமை இருக்க வேண்டும்?

வருணபகவானும் முந்தைய தினமே தன் வேலையை ஜரூராக முடித்துக் கொண்டு, விழாவன்று ஓய்வெடுத்துக் கொண்டு ஒத்துழைத்தார்!

சிறப்பு விருந்தினர்களுக்கென்று காலங்கடத்தாமல், வந்திருந்த விருந்தினர்களை சிறப்பிக்கும் வகையில் சரியாக 6.30 மணிக்கு நிகழ்ச்சியைத் துவக்கியதும் ஒரு சிறப்பே!

திருமதி அலமேலு மணியின் மணியான மினிக் கச்சேரியுடன் விழா துவங்கியது. ஹரிஹரனின் அம்மாவாயிற்றே? 'வண்டாடும் சோலை'யில் தேனுண்ட வண்டின் ரீங்காரமே கேட்டது போல் கூட்டத்தினர் அந்த மதுரமான இசையில் மயங்கினர்.

அடுத்து, அன்று கல்கி தன் விமர்சனங்களால் பரதக்கலைக்கு கௌரவத்தைத் தேடித் தந்ததற்கு மானசீகமாக நன்றி தெரிவிப்பது போல், ராஜ



• டாக்டர் சிதம்பரம்



• ஜி. கிருஷ்ணமூர்த்தி



• டாக்டர் வி. சுப்ரமணியம்



• ஆர்.விக்குப் பூர்ணகும்ப வரவேற்பு

வந்து நிறுத்தினர்.

இதையடுத்து சிறப்பு விருந்தினர்கள் உரையாற்றினார்கள். சிறப்புரைக்கு முன் கல்கியின் மகள் ஆனந்தியும், மருமகள் விஜயாவும் (நோட் பண்ணிக்குங்க – ஒற்றுமை ரவுண்ட் - 2) கல்கியின் சொற்களால் முருகனை வணங்கினர். உடனே சுப்ரமணியம் மேடையில் பிரசன்னமானார் – அட, நம்ம ஷண்முகானந்தா பிரசிடெண்ட் தாங்க!

வரவேற்புரையை அவர் வழங்க, S.I.E.S. சார்பில் பிரத்யேகமாகக் காஞ்சியிலிருந்து வரவழைக்கப்பட்ட பொன்னாடைகள் சிறப்பு விருந்தினர்களுக்கு வழங்கப்பட்டது. வழக்கம் போல் அதை உடனே கழற்றிவிடாமல், ஏ.ஸி. குளிருக்கு அடக்கமாக, நிகழ்ச்சி முழுவதும் போர்த்திக் கொண்டு அமர்ந்திருந்தது செம்மங்குடியார்தான்! அவர்தான் முதலில்

# அரபிக் கடலோரம் அமரர் கல்கி விழா!

ராஜேஸ்வரி நாட்டிய கலா மந்திரின் மாணவிகள் கல்கியின் பாடல்களுக்கு அதி அற்புதமாக அபிநயித்து, அவர் நினைவுகளை கௌரவித்தனர். அவர் கனவில் கண்ட காட்சிகளை நம் கண் முன்னே கொண்டு



• வந்திருந்தோரில் ஒரு பகுதி



• வாணி கணபதி

பேச எழுந்தவர்!

வெறும் சங்கீத சபாவாகத் துவங்கி, படிப்படியாக, நாட்டியம், நாடகம், இன்னும் பல நுண்கலைகளைத் தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொண்டு, இன்று "ஸ்ரீ ஷண்முகானந்தா ஃபைன் ஆர்ட்ஸ் அண்ட் சங்கீத சபா"வாக உயர்ந்திருப்பதை வியந்து பாராட்டினார்.

"இந்த 92 வயசுல என்னைக் கூப்பிடறியேன்னேன்; வந்துதான் ஆகணும்னு பிடிவாதம் பிடிச்சான் (கல்கி) கண்ணன்" என்று ஆரம்பித்தவர், கல்கியின் பேனா தன்னைப் போன்ற எண்ணற்ற இசைக் கலைஞர்களை உருவாக்கிய வித்தையைச் சுவைபட விவரித்தார். 92 வயதிலும், குரலில் 29ன் இளமை துள்ள, சேட்டைகளில் நாட்டம் கொண்ட ஒரு பாடகரைக் கல்கி நாசுக்காக சாடியது, மிக மோசமாகப் பாடினால் கூட, புண்படுத்தாத நகைச்சுவையுடன் அதை லாகவமாகச் சுட்டிக் காட்டியது, தன்னுடன் ரம்மி விளையாடியது, தான் ஒரே குடும்பத்தைச் சார்ந்த 20 திருமணங்களுக்குக் கச்சேரி செய்தது, எல்லாவற்றையும் உற்சாகத்துடன் நினைவு கூர்ந்து, கூட்டத்தில் கலகலப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்.

சங்கீதப் பிரதிநிதியாயிற்றே? கல்பனா ஸ்வரங்கள், ராக ஆலாபனைகள் என்று சஞ்சரிப்பது போல், கல்கியுடனான மலரும் நினைவுகளில் உலா வருகையில், இடைவெட்டி ஒரு துண்டுக் காகிதத்தை நீட்டினார் கண்ணன்! ஏதோ "நேயர் விருப்ப" விண்ணப்பம் போலும்; இதோ, "நீங்கள் கேட்டவை" ஸ்டைலில் செம்மங்குடி பாடப் போகிறார் என்று ஆவலுடன் எதிர்பார்த்த ஆடியன்சிடம், "இன்னும் நிறையப் பேர் பேசறதுக்கு இருக்கா; சீக்கிரமா முடிச்சுக்கோங்கோ"ன்றான், என 'சிட்' விஷயத்தை 'பட்'டென்று போட்டு உடைத்து, சிரிப்பலைகளைப் படரவிட்டார்!

"இன்னும் கொஞ்சம்தான் என்று கல்கியின் நாட்டுப் பற்றை, 'டச்சிங்'காக 'டச்' பண்ணினார். "கல்கிக்கு திடமான சரீரம் இல்லை; ஆஸ்துமா கம்ப்ளையிண்ட் வேற! அவரை அரெஸ்ட் பண்றச்சே எங்க கண்ணுலல்லாம் ஜலம் வந்துடுத்து. அந்தக் காலத்துல ஜெயில் வாசம்னா ரொம்பக் கஷ்டம். இப்போ மாதிரி இல்லை. அதான் மினிஸ்டர் செல்லாம் ஜெயில்லதானே இருக்கா?" என்று இடித்து நொடித்து, வெடிச் சிரிப்புகளுக்கு வித்திட்டார். ஒரு பழுத்த பழம், இத்தனை தூரம் சிரமம் பாராமல் வந்திருந்து, தங்கு தடையின்றிப் பேசியதிலேயே கூட்டம் நெகிழ்ச்சி அடைந்து விட்டது!

தொடர்ந்தவர் டாக்டர் ஆர். சிதம்பரம் (சேர்மன், அடாமிக் எனர்ஜி கமிஷன்). விஞ்ஞானியல்லவா? ராக்கெட் லாஞ்சிங்கில் கௌண்ட் டவுன் பர்ஃபெக்ஷனுடன், அற்புதமாக, ஐந்தே நிமிடத்தில் தம் சொற்பொழிவை முடித்துக் கொண்டார்.

"விஞ்ஞானி என்பவன் வெறும் அறிவாளி மட்டுமல்ல. நன்னடத்தையுடன் கூடிய அறிவாளியே விஞ்ஞானி" என்ற ஐன்ஸ்டைனின் மேற்கோளுடன் துவங்கி, கல்கி அவர்களை ஒரு பெரும் விஞ்ஞானியாக மகுடம் சூட்டினார். எடுத்துக் கொண்ட விஷயத்தைத் தீவிரமாக ஆராய்ந்து, உண்மைகளை வெளிப்படுத்தி, அவற்றைச் சமுதாய நலனுக்கு அர்ப்பணிக்கும் வகையில் செயல்படுவதால், எழுத்

• பாடுகிறார் ஹரிஹரன்...



தாளரும் ஒரு விஞ்ஞானியே' என்ற விளக்கம் 'சிக்'கெனப் பொருந்தியது.

அடுத்துப் பேச வந்தவர் ஜி. கிருஷ்ணமூர்த்தி; LIC சேர்மன். செந்தமிழில் அழகாக உரையாற்றினார்.

"கல்கி என்பது ஒரு கடல்; உள்ளே சென்று கடலாட நேரமில்லாததால், கரையிலேயே நின்று, கால் நனைத்து, அலை ஓசையை மட்டுமே கேட்கப்போவ"தாக அவர் ஆரம்பித்ததுமே கூட்டம் ஆரவாரித்தது. ஆனால் இன்ஷூரன்ஸ்காரராயிற்றே? இயல்பாகவே நீட்டிப்பில் லயிப்பிருக்குமல்லவா?

கல்கி எனும் எழுத்தாளரைக் குறிப்பிட்டு காலை நனைக்க நினைத்தவரை, கல்கியின் நகைச்சுவை, சரித்திர ஈடுபாடு, நாட்டுப் பற்று, விமர்சன நுணுக்கம் என ஒவ்வொரு அலையாக வருடி, உள்ளே, உள்ளே... என்று

இழுத்துச் சென்று கொண்டிருந்தது.

திருவள்ளுவரே நினைத்துப் பார்த்திராத அளவு பரிமேலழகர் உரையில் சிறப்பு



விளக்கங்களிருக்குமாமே? அதுபோல, கல்கி அவர்களின் ''மாலைப் பொழுதினிலே...'' பாடலை எடுத்துக் கொண்டு, புதுப் புது அர்த்தங்களைக் கற்பித்தார் கிருஷ்ணமூர்த்தி. 'கோலக் கிளிகளுடன் குயில்கள் கொஞ்சிடும் வேளையிலே' என்ற வரியில், கிளிகளைக் கிளிகளுடனும், குயில்களைக் குயில்களுடனும் கொஞ்சவிடும் மரபை நீத்து, கிளிகளைக் குயில்களுடன் கொஞ்ச விட்டிருப்பதில் ஒரு நுணுக்கமான ''நேஷனல் இன்டக்ரேஷனை'' சிலாகித்து, சிலிர்த்தார் இவர்!

அலை அடங்கும் வேளையில், முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன், கல்கியின் உருவப் படத்தை திறந்து, உரையாற்றத் துவங்கினார். ஆர்.வி. என்ற பெயருக்கேற்ப 'கல்கி ஆர்வி'யாக மாறி, கல்கி தமிழுக்காற்றிய தொண்டைப் பலபடப் புகழ்ந்து, விஸ்தாரமாக விவரித்தார்.

நீண்ட சொற்றொடர்களைத் தவிர்த்து, சின்னச் சின்ன வாக்கியங்களை அமைத்து, தன் எளிய நடையால் பாமரனையும் படிக்கத் தூண்டி, தமிழை வாழ வைத்த விந்தையை வியந்தார். ஸீரியஸாகவே சிந்தித்த மேதாவிகளிலிருந்து, வேறுபட்டு, நகைச்சுவை என்ற ஒப்புயர்வற்ற பொக்கிஷத்தைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்திய புத்திசாலித்தனத்தில் புளகாங்கிதமடைந்தார்.

காலை நனைக்க நினைத்த கிருஷ்ணமூர்த்தியே இடுப்பளவு நீரில் இறங்கினாரென்றால், கல்கியின் சாதனைகளிலே நீந்தித் திளைத்து, ஆழ்ந்து, முத்தெடுத்த ஆர்.வி, முழுவதுமாகவே மூழ்கிவிட்டார்!

கட்டுரை என்றால் அது "ஏட்டிக்குப் போட்டி"தான் என்பதில் துவங்கி, இன்றளவும் பத்திரிகை என்றால், அது "கல்கி" மட்டும்தான் என ஒரே போடாகப் போட்டுவிட்டு வெங்கட்ராமன் முடிக்கையில் இரவு மணி 9.30 ஐத் தாண்டியிருந்தது. என்றாலும் பிரும்மாண்டமான சண்முகானந்தா சபா அரங்கை நிரப்பியிருந்த பல ஆயிரக்கணக்கானவரில்

• அலமேலு இசை நிகழ்ச்சி



ஒருவராவது அசைய வேண்டுமே! ஊஹூம்!

நிறைவுரை ஆற்ற வந்த கி.ரா. உணர்ச்சி வசப்பட்டார். "சத்தியத்தைக் காப்பது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவுக்கு நமது சிறந்த மரபுகளைக் காப்பதும் முக்கியம் என்பதைத்தான் ராமன் வனவாசம் சென்றதும் பரதன் பாதுகா பட்டாபிஷேகம் செய்ததும் உணர்த்துகிறது" என்று கவி சிவம் அவர்களின் கருத்தை நினைவு கூர்ந்தார் கி.ரா. சிறந்த மரபுகளையும் நமது கலாசாரத்தையும் காக்க என்றே உருவான நான்கு அமைப்புகள், அதே நோக்கத்தில் வாழ்நாளெல்லாம் உழைத்த கல்கிக்கு விழா எடுத்து அஞ்சலி செலுத்த முன் வந்ததைப் பாராட்டி வாழ்த்தினார். இசை, நாட்டியக் கலைஞர்கள் பாவபூர்வமாகவும் மரபு மீறாமலும் பாடியதையும் ஆடியதையும் சிலாகித்து, கல்கியின் கனவுகள் பார்த்திபன் கனவு போல் நிறைவேறி வருவதைக் குறிப்பிட்டார். விழா எடுத்த நாலு அமைப்புகளின் தலைவர்களுக்கும் செம்மங்குடி கையால் சால்வைகள் போர்த்தச் செய்தார். (கல்கி கண்ணனுக்கு ஒரு ஸ்பெஷல் சால்வை!) அத்துடன்

# சென்றவார டீவி

## – நடிகர் ஏ.ஆர்.எஸ்.

♦ உலகக்கோப்பை கிரிக்கெட் இறுதி ஆட்டத்தில் ஆஸ்திரேலியா – பாகிஸ்தான். அது Match அல்ல. Mismatch. பாகிஸ்தான் வீரர்கள் கால்களில் ஆணி அடித்தாற்போல் நின்று ஷேன் வார்னேவைப் பரிதாபமாக எதிர் கொண்டனர். நம்ம டீம் அரை இறுதி ஆட்டத்துக்குத் தகுதி பெறவில்லை என்ற ஏமாற்றம் இருந்தாலும், ஷேன் வார்னேவை நம்மவர்கள் எப்படி விளாசித் தள்ளு வார்கள் என்று நினைக்கும் போது, ஏமாற்றத்திலும் ஒரு ஆறுதல். ஆஸ்திரேலியா - தென் ஆப்பிரிக்கா அணியின் அரை இறுதி ஆட்டத்தின் விறுவிறுப்புக்கு உரைபோடக் காணாது இந்த இறுதி ஆட்டம்!

♦ பல லட்சம் ஆண்டுகளுக்கு முன் நம் முன் னோர்களின் நிலை பற்றி தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்களின் நிகழ்ச்சி. குரங்கிலிருந்து சற்றே வித்தி யாசப்பட்டிருந்த அந்தக் கால கட்டத்தில், நம்முன் னோர்கள் வேட்டையாடியதை விட, விலங்குகளால் வேட்டையாடப்பட்டதுதான் அதிகம் என்பதை, ஆப்பிரிக்கக் காடுகளிலிருக்கும் குகைகளில் கிடைத்த மண்டை ஓடுகளையும், எலும்புகளையும் வைத்து ஒரு பாடமே நடத்தினார்கள். அற்புதம்! (நேஷனல் ஜியாகரபிக் சானல்).

♦ 'பார்த்தால் பசி தீரும்' படம் போட்டார்கள். போட்டி போட்டுக் கொண்டு நடித்த கலைஞர்களின் அபரிமிதமான திறமைக்குத் தீனி போட்ட கதாசிரியருக்கும், டைரக்டருக்கும் சபாஷ்! இந்தப் படத்தில் இருந்த கதைக் கருவையும், திருப்பங்களை யும் வைத்துக் கொண்டு இன்று ஆறு படங்கள் எடுக்க லாம். 'பா' வார்த்தையில் ஆரம்பித்த படத்தின் பெயர் களை வைத்து, வெற்றிக்கு மேல் வெற்றியாய் குவித் துக் கொண்டிருந்த டைரக்டர் பீம்சிங்கை ஏன் பாம்சிங் என்று கூப்பிடக் கூடாது என்று அந்தக் காலகட்டத்தில் ஒரு பத்திரிகையில் எழுதியது ஞாபகத்துக்கு வரு கிறது.

♦ கார்கில் பகுதியில் நமது படைவீரர்கள் முன் னேறி வருகிறார்கள். பாராட்டுகள். நிறைய முன்னணி நாடுகள் பாகிஸ்தானைக் குறை கூறியிருக்கின்றன. இருந்தாலும் ஏகப்பட்ட உயிர்ச் சேதங்களை ஏற்படுத் தும் இந்தச் சண்டை மேலும் பெரிதாகாமல் கூடிய சீக்கிரம் முடிவுக்கு வர வேண்டும். பிரார்த்திப்போம்.

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

சொற்பொழிவுக் கூட்டம் முடிந்தது.

**ஹ**ரிஹரனை மேடையில் கண்ட வுடன் கூட்டம் ஆரவாரித்தது. கல்கியின் எழுத்தில் உள்ள கவர்ச்சியைத் தன் குரலில் தேக்கிவைத்துள்ள ஹரிஹரன், அமரர் கல்கி அவர்களைப் பற்றி கொத்தமங்கலம் சுப்பு இயற்றியுள்ள ஒரு பாடலைப் பாட ஆரம் பித்ததுமே கூட்டத்தினருக்குக் குஷி பிய்த்துக் கொண்டு விட்டது. குங்குமப் பூவைப் போட்டு கண்டக் காய்ச்சிய பாலில் பாதா மும் முந்திரியும் இடறினால், கூட ஒரு சுவை யாக இருக்குமே... அதுபோல, "ஷெல்லரித்த அரஷியலை" அவர் ஷாடிய... ஸாரி... சாடிய போதும், கல்கியின் புகழ் "தயைக்க" அவர் பாடிய போதும், அந்தக் குரலினிமையின் வேகம் சொற்றொடர்களின் மழலையை அடித்துக் கொண்டு சென்று விட்டது!

ஒரே பாடலுடன் விடைபெற இருந்த வரை வலுக்கட்டாயமாக ஒரு கஜலையும் பாட வைத்து, அந்த அமிர்தமயமான கான மழையில் நனைந்தனர் ஆடியன்ஸ்.

**இ**றுதியாக, சிவகாமியின் சபதத்தி லிருந்து சில காட்சிகள். உள்ளே 'செட்' அமைக்கும்போது ஆடியன்ஸைக் கொட் டாவி விட வைக்காமல், உளியும் சதங்கை யும் சப்தமிடும் இசையில் மயக்கி, மக்களை மாமல்லபுரத்துக்கு அழைத்துச் சென்றது நல்ல யுக்தி (கல்கி கண்ணன் உபயம்).

முதலில் திருநாவுக்கரசரின் திருத்தாண் டகம்; அடுத்து, கல்கி அவர்கள் இயற்றிய 'மறவேன்... மறவேன்' பாடல். முடிவாக திரு வாரூர் திருத்தாண்டகம் (முன்னம் அவ னுடைய நாமம் கேட்டாள்...)

அன்பு, காதல், விரகதாபம், சினம், சோகம், பக்தி என்று மாற்றி மாற்றிப் பல உணர்வுகளைப் பிரதிபலிக்கும் பாடல்கள். குரு கல்யாண சுந்தரனார் அதி அற்புதமாக நடன வடிவம் அமைத்துத் தர, அதைச் சிறப் பாக அபிநயித்து, ஒரு இருபது நிமிடங் களுக்கு சிவகாமி வாழ்ந்த சரித்திர காலத் துக்கே நம்மை அழைத்துச் சென்றுவிட்டார் வாணி கணபதி. (உடலை என்னமாக 'மெய்ன்டெய்ன்' பண்ணியிருக்கிறார்?)

சரித்திர நாயகனுக்கு சரித்திரம் போற்றும் விதத்தில் விழா எடுத்த மகிழ்வுடன் கூட்டம் கலைந்தது.

**— ஜெயஸ்ரீ ராஜ்**






1999 ஜூலை 4
பிரமாதி ஆனி 20
மலர் : 57
இதழ் : 49

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஆபரேஷன் அண்டப்புளுகு!

கார்கில் போரில் பல பாகிஸ்தானிய ராணுவ அதிகாரிகளும் ஜவான்களும் மரணமடைந்துள்ளனர். இந்தியத் தரப்பிலும் உயிர்ச்சேதங்கள். வறட்டுப் பிடிவாதத்தினால் மனித உயிர் விரயத்துக்கும் உடல் ஊனத்துக்கும் வழிவகுத்திருக்கிறார் நவாஸ் ஷரீஃப்.

ஜி - 8 உச்சி மாநாடும் சரி, அமெரிக்கா, பிரிட்டனும் சரி, எல்லைப் பகுதி ஊடுருவல் காரணமாகத்தான் கார்கிலில் ராணுவ நடவடிக்கை எடுக்க இந்தியா நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளது என்பதை ஏற்றுள்ளன.

அமெரிக்க அதிபர் கிளிண்டனும் பிரிட்டிஷ் பிரதமர் டோனி ப்ளேயரும் பாகிஸ்தான் அதிபர் நவாஸ் ஷரீஃபுடன் தொலைபேசியில் உரையாடியிருக்கிறார்கள். எல்லைக் கட்டுப்பாட்டுக் கோடை மீறி ஊடுருவியுள்ள பாகிஸ்தானிய துருப்புகளைப் பின்வாங்கச் செய்யும்படி ஷரீஃபிடம் வலியுறுத்தியிருக்கிறார் கிளிண்டன்.

ஆனால், நவாஸ் ஷரீஃப் நயமான பேச்சுகளுக்குச் செவிசாய்ப்பவர் அல்ல. இந்தியா, 'ஆபரேஷன் விஜய்' நிகழ்த்துகிறது எனில் நவாஸ் ஷரீஃப் நிகழ்த்துவது ஆபரேஷன் அண்டப்புளுகு!

"ஜி - 8 நாடுகள் பாகிஸ்தானின் நிலையை ஆதரிக்கின்றன."

"பில் கிளிண்டன், பாகிஸ்தான் காத்துவரும் பொறுமையைப் பாராட்டினார்;"

"கார்கில் பகுதி மோதல்களைக் குறைக்க பாகிஸ்தான் எடுத்துவரும் முயற்சிகளுக்கு டோனி ப்ளேயர் பாராட்டுத் தெரிவித்தார்;"




என்று வரிசையாக சாமர்த்தியமான பொய்களை அடுக்குவதுதான் ஆபரேஷன் அண்டப்புளுகின் முக்கிய அம்சம். அந்த அண்டப் புளுகுகள் பாகிஸ்தான் மீடியாவால் பரப்பப்படுகின்றன.

கார்கிலில் இழைத்த தவறையும் அங்கு பாகிஸ்தான் ராணுவம் சந்தித்து வரும் தோல்விகளையும் இந்த ஆபரேஷன் அண்டப்புளுகு கொண்டு மறைத்து விடலாம் என்பது பாகிஸ்தான் அதிபரின் பகற்கனவு. பாகிஸ்தான் மீடியா மட்டுமே வெளியிடுகின்ற, அந்நாட்டுக்குச் சாதகமான இந்தப் பொய்ப் பிரசாரங்கள் நிலைமையைச் சீர்படுத்த உதவாது. அபாண்டப் பழிகளைச் சுமத்தும் பொய்ப் பிரசாரங்களை ஒரு நடுநிலை டெலிவிஷன் ரிப்போர்ட் தவிடுபொடியாக்கிவிடும்! உலகத்தின் பார்வையில் பாகிஸ்தான் சிரிப்பாய்ச் சிரிக்கும்.

அப்படியிருந்தும் நவாஸ் ஷரீஃப் இந்தச் சிறுபிள்ளை விளையாட்டில் ஈடுபட்டிருப்பது பாகிஸ்தானுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியைத்தான் காட்டுகிறது.

ஆபரேஷன் அண்டப்புளுகு அற்ப ஆயுளில் மடிந்து போகும்!

## முதல்வருக்கு முதல் மார்க்!

தமிழக முதல்வர் தமது கட்சி எம்.எல்.ஏக்களுக்கு மதிப்பெண் பட்டியல் போட்டுத் தந்து சரித்திரம் படைத்திருக்கிறார்!

கடந்த மூன்றாண்டுகளாக திமுகவின் 160 சொச்ச எம்.எல்.ஏக்களும் தங்கள் தொகுதியில் என்னென்ன செய்தார்கள்; என்ன திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன; என்ன குறைகள் நிலவுகின்றன; தொகுதி மக்களின் கருத்து என்ன, போன்ற பல விஷயங்கள் அலசப்பட்டு அவற்றின் அடிப்படையில் ஓர் இறுதி மதிப்பீடும் தரப்பட்டிருக்கிறது.

'ஒட்டிய உறைகளில்' இந்த அறிக்கைகளைத் தனித்தனியே ஒவ்வொரு சட்டமன்ற உறுப்பினருக்




கும் அளித்து அதிர்ச்சி வைத்தியம் செய்திருக்கிறார் கருணாநிதி.

அறிக்கைகளைப் பிரித்துப் படித்த சிலர், அது தங்கள் முயற்சிகளை நியாயமாக எடைபோட வில்லை என்று. கருத்துத் தெரிவித்திருக்கின்றனர்.

ஒருசில குறைகள் இருக்கக்கூடும் என்றாலும் முதல்வரின் இந்தப் புதிய முயற்சி பாராட்டி, வரவேற்கப்படவேண்டிய ஒன்று. ஆளுங்கட்சி தன்னை சுயவிமர்சனத்துக்கு உட்படுத்திக் கொள்ளும் ஆரோக்கியமான அணுகுமுறை இது என்பதுடன் மக்கள் மதிப்பில் கட்சியையும் அதன் தலைவரையும் கணிசமாக உயர்த்தக்கூடிய நடவடிக்கையும் கூட.

பி.ஜே.பியுடன் தேர்தல் கூட்டு வைத்துக் கொள்ள முடிவெடுத்து, அதற்காக எதிர்க்கட்சிகளின் கடுமையான விமர்சனத்துக்கும் தி.மு.க. உள்ளாகி வருகிற நேரத்தில், முதல்வர் வழங்கிய மார்க் லிஸ்டுகள் அரசியல்ரீதியாகக் கட்சிக்கு வலுசேர்க்கும்.

இந்த நூதன நடவடிக்கையினால் தொகுதி நிலவரங்கள் ஒளிவுமறைவின்றி விமர்சிக்கப்படுகிற வாய்ப்பும் ஏற்படுத்தப்படுகிறது. இவ்விமர்சனங்களைச் சரியான கண்ணோட்டத்தில் ஏற்றால், எஞ்சியுள்ள இரண்டு வருட காலத்தில் தொகுதி மக்களைத் திருப்திப்படுத்தி, அடுத்த தேர்தலில் அவர்களது வாக்குகளை உறுதிசெய்து கொள்ளலாம்.

பாராட்டுகளையும் நல்ல விமர்சனங்களையும் பெற்ற சட்டமன்ற உறுப்பினர்கள் மேலும் உற்சாகத்துடன் செயல்பட வாய்ப்பிருக்கிறது. மற்றவர்கள் அவர்களைக் கண்டு பொறாமை கொள்ளாமல் அவர்களை முன்னுதாரணமாகக் கொண்டு முனைப்புடன் செயல்படலாம்.

சுயமதிப்பீடு (self-assessment) என்பது நவீன மேனேஜ்மெண்ட் கொள்கையில் முக்கியமான அம்சமாக வலியுறுத்தப்படுகிறது. மிக ஆரோக்கியமான, தொழில்ரீதியான இந்த அணுகுமுறை முதன் முதலாகத் தமிழக அரசியல் உலகில் அறிமுகப்படுத்தப்பட்டிருப்பது ஒரு நல்ல ஆரம்பம். சளைக்காமல் தொடர்ந்தால் பல நல்ல முடிவுகளுக்கு இந்த ஆரம்பம் வழிவகுக்கக்கூடும்.

# உபஇரத்தினமும் அதன்

இன்றைக்கு எங்கு பார்த்தாலும் பெரிய பெரிய விளம்பர பலகைகளில் 'உங்கள் வாழ்க்கையில் பிரச்னையா, திருமண தாமதமா?' போன்ற வாசகங்களைக் கொண்டு விளம்பரம் செய்யும் இரத்தினக் கற்களை விற்பனை செய்யும் கடைகள் நிறைய பெருகி விட்டன.

'கயிலையே மயிலை, மயிலையே கயிலை' என்று மாணிக்கவாசகர் போற்றித் துதித்த மயிலாப்பூரில் பரப்பரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் இரத்தினங்களின் உலகமாக இயங்கும் 'Mystic' உரிமையாளர் திருமதி வித்யா அவர்களிடம் உரையாடினோம்.

**கே. : இரத்தினக்கற்கள் வியாபாரத்தைத் தாங்கள் எவ்வளவு காலமாகச் செய்து வருகிறீர்கள்?**

ப. : இரத்தினக் கற்கள் பற்றிய ஆய்வில் Gemologist பட்டம் பெற்றுள்ளேன். நானும் என் கணவருமான மீனாட்சி சுந்தரமும் பக்தி ஜெம் ஷாப் என்ற பெயரில் பல ஆண்டுகாலமாக இந்த வியாபாரம் செய்து வருகிறோம். 25.03.98 முதல் 'Mystic' என்ற பெயரில் புதிய கிளையை துவக்கி நடத்தி வருகிறேன்.

**கே. : ஏற்கெனவே ஒரு விற்பனைக் கடை இருந்தும் இன்னொரு கிளை தொடங்க வேண்டிய அவசியம் என்ன?**

ப. : வாடிக்கையாளர்களுடைய கூட்டம் அதிகமாகி விட்டதால் அவர்களின் வசதியை முன்னிட்டு மற்றொரு கிளையைத் தொடங்கினோம். குறிப்பாக உடல் நலக் குறைவு உள்ளவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து நான் பார்க்கிறேன்.

**கே. : எந்த அடிப்படையில் வாடிக்கையாளர்களுக்கு இரத்தினக்கற்களை வாங்குவதற்கு சிபாரிசு செய்கிறீர்கள்?**



ப. : வாடிக்கையாளரின் ஜாதகத்தை ஆராய்ந்து பார்த்து, அதற்குண்டான இராசிக் கற்கள், பிறந்த தின கற்கள் என இரண்டையும் சேர்த்து மந்திரித்துக் கொடுக்கிறோம். அதே நேரத்தில் எண் கணிதமும், பெயர் ராசியும் பார்ப்போம்.

**கே. : ஒரு நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த வாடிக்கையாளரின் ஜாதகத்தில் வைரம்தான் அணிய வேண்டும் என்று இருந்தால், அப்பொருளை அவர்களால் வாங்க இயலாது. அப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்?**

ப. : பொதுவாக நாங்கள் யாருக்கும் வைரம்தான் அணிய வேண்டும் என்று யோசனை கூறுவதில்லை. அதற்கு இணையாக உப இரத்தினத்தைச் சொல்கிறோம். நவரத்தின கற்கள் மிகவும் விலை அதிகம் என்பதால் நடுத்தர மக்களின் வசதிக்கேற்ப நவரத்தினக்கற்களைப் போன்றே இருக்கும் உப இரத்தினத்தை அணிவிக்கிறோம். ஏனென்றால் இதனுடைய விலை மிகவும் குறைவு. பலனும் அதிகம்.

**கே. : நவரத்தினக் கற்களுக்கு உள்ள அதே சக்தி உப இரத்தினக் கற்களுக்கும் உண்டா?**

ப. : நிச்சயமாக உண்டு. நவரத்தினக் கற்களுக்கு இணையான சக்தி உப இரத்தினக் கற்களுக்கும் உண்டு.

**கே. : நவரத்தினத்தில் முத்து, பவளம் போன்ற பெயர் இருப்பது போல் உப இரத்தினத்தில் இருக்கிறதா?**

ப. : நவரத்தினத்தில் இருப்பது போல் உப இரத்தினத்திலும் உண்டு. Crystals, Turquoise, Garnet, Jade, Amethyst, Topaz, Blood stone, Agate, போன்ற பல வகையான பெயர் கொண்ட கற்கள் உள்ளன. உபஇரத்தினக் கற்களைப் பழக்கத்திற்கு கொண்டு வந்த பெருமை சீன நாட்டைச் சேரும். இந்தக் கற்களை அணிவதால் திருஷ்டி நம் மேல் வராது என்ற நம்பிக்கையை அவர்கள்தான் அறிமுகப்படுத்தினர். இந்த உப இரத்தினக் கற்களில் மிக முக்கியமானது ஸ்படிகக்கல்! இது நமக்குக் கடவுள் கொடுத்த ஒரு வரப்பிரசாதம் என்று சொன்னால் அது மிகையாகாது. இது பார்ப்பதற்கு கண்ணாடி போன்று பளபளப்பாக இருக்கும். உடல் நலம் சரியின்மை, மூளைக் கோளாறு, புற்று நோய் போன்ற நோய் உள்ளவர்கள் இந்தக் கல்லை அணிந்தால் முன்னேற்றம் காணலாம். அதே நேரத்தில் மனிதனுடைய உடலில் உள்ள

உஷ்ணத்தைப் போக்குகிறது. ஒவ்வொரு வீட்டிலும் இந்தக் கல் இருந்தால் எவ்விதமான பிரச்னையும் வராது. இந்தக் கல்லை அணிவதன் மூலம் பக்க விளைவுகள் எதுவும் ஏற்படுவதில்லை.

**கே. : ஸ்படிகக்கல் எங்கு நிறைய கிடைக்கிறது?**

ப. : தமிழகத்தில் காளைகளுக்குப் பெயர் பெற்ற ஊரான காங்கேயத்தில் கிடைக்கிறது.

**கே. : இதன் விலை விவரம் எப்படி?**

ப. : இருபத்தைந்து ரூபாயிலிருந்து நூற்றி ஐம்பது ரூபாய் வரை கிடைக்கும்.

**கே. : உப இரத்தினக் கல்லான ஸ்படிகத்துக்கு உள்ளது போன்ற தனித்தன்மை மற்ற கற்களுக்கும் உள்ளதா?**

ப. : ஸ்படிகத்துக்கு உள்ளது போல் ஒவ்வொரு கல்லுக்கும் தனித் தன்மை உண்டு. உதாரணமாக –

***நீலப் பச்சை வண்ணக்கற்கள்:*** திரைப்படம், கலை, கலாசாரம் போன்ற துறையில் உள்ளவர்கள் இதை அதிகமாகப் பயன்படுத்துவார்கள். குழந்தைகளுக்கு கவன ஈர்ப்பு சக்தி அதிகம் வேண்டுமென்றால் அணியச் செய்வார்கள்.

***சிவப்பு நிறமுள்ள ஒருவகை மணிக்கல் :*** இந்தக் கற்களை அணிவதால் செயல்முறைத் திட்டங்கள் நிறைவேறும். பண வரவு அதிகரிக்கும்.

***கரும்பச்சை நிறமுள்ள ஒருவகை மணிக்கல் :*** இதில் ஜீவசக்தி அதிகம் உள்ளது. அதனால் மூச்சுத் திணறல், அஜீரண கோளாறு உள்ளவர்கள் இந்தக் கற்களை அணியலாம்.

***செவ்வந்திக் கல் :*** புகை பிடித்தல், குடிப் பழக்கம், போதை மருந்து போன்ற பல தீய பழக்கத்திலிருந்து இது விடுவிக்கிறது. நீரழிவு நோய்க்கும் மருந்தாக உள்ளது.

***பிராந்திக் கல் :*** இன்றைக்கு எல்லோருக்கும் அன்றாட வாழ்க்கையில் முக்கியமாக இருக்கக் கூடியது டென்ஷன். இந்த நிலையைப் போக்க வேண்டுமானால் பிராந்திக் கல் அணியலாம்.

***மெகா கல் :*** இந்தக் கற்களை அதிகமாக உபயோகிப்பவர்கள் முஸ்லீம் மக்கள்தான். அவர்கள் இதை மாலையாகவும், காதுக்குத் தோடாகவும் அணிகிறார்கள். திருப்திகரமான வாழ்க்கை அமைய வேண்டுமானால் இந்தக் கல்லை அணியலாம்.

**கே. : நீங்கள் கொடுக்கும் கற்களை வாடிக்கையாளர் அணிந்த பிறகு எவ்வளவு நாட்களில் மாற்றம் தெரியும்?**

ப. : நாங்கள் கொடுக்கும் கற்களில் சில மந்திரங்களைச் செய்து கொடுப்பதால் அதற்கு சில விதிமுறைகள் உள்ளன. அவர்கள் கற்கள் அணிந்த 45 நாளிலிருந்து 90 நாட்களுக்குள் மாற்றம் கண்டிப்பாக இருக்கும். அவர்கள் விதிமுறை



களை முழுமையாக கடைப் பிடிக்கா விட்டாலோ, எதிர் மறையான பலன் ஏற்படவும் வாய்ப்பு உண்டு.

**கே. : குழந்தைகளுக்கு எந்த வயதில் ஜாதகத்தைப் பார்க்கலாம்?**

ப. : பொதுவாக ஏழு வயதுக்கு மேல்தான் ஜாதகம் பார்க்க வேண்டும். எங்களிடம் ஏழு வயதுக்குக் குறைவாக வரும் குழந்தைகளுக்குப் பிரச்னைகள் இருந்தால் அவர்கள் கொண்டு வரும் பாலையோ அல்லது தண்ணீரையோ மந்திரித்துத் தந்து, குழந்தைகளைக் குடிக்கச் செய்வோம்!

# அற்புதங்களும்

Open book System என்று ஒன்று உண்டு. பத்தாண்டுகளுக்கு முன்னால், அதையும் நாங்கள் செயல்படுத்தியிருக் கிறோம். மாணவர்கள் புத்தகத்தைப் பார்த்தே பரீட்சை எழுதலாம். புத்தகத் தைப் பார்த்து எழுதலாம் என்றால், அப் புறம் அது என்ன பரீட்சை? சிரமப் பட்டுப் படிக்க' வேண்டாம் என்று நினைத்துக்கொண்டு விடாதீர்கள். இப்படிப்பட்ட முறையில் பரீட்சை எழுதுவது ரொம்ப, ரொம்ப சிரமம்.

இந்த ஓப்பன் புக் சிஸ்டத்தில், நிறைய போர்ஷனிலிருந்து கேள்வி கேட்கப்படும். கேள்விகள், ரொம்ப நுணுக்கமாக இருக் கும். மொத்த பாடங்களையும் மிக நன் றாகப் படித்திருந்தால் மட்டுமே எந்தக் கேள்விக்கு எந்த இடத்தில் பதில் இருக் கிறது என்று தெரியும். அது தெரிந்தால் தான் கேள்விக்கு விடை எழுதுவதே சாத் தியம். சராசரி மாணவர்களுக்கு சாதாரண முறையைவிட, இந்தத் திறந்த பாடப் புத்தகமுறை ரொம்பக் கடினம் என்பது அனுபவத்தில் நான் கண்ட உண்மை.

பாடமாகச் சொல்லிக் கொடுப் பதைவிட, பாட்டாகச் சொல்லிக் கொடுத் தால், குழந்தைகள் மனத்தில் எளிதில் பதியும். நான் ஆஸ்திரேலியா போயிருந்த போது, ஒரு பள்ளிக்கூடத்தில் குழந்தைகள் பாடிக் கொண்டிருந்த பாடல் ரொம்ப வித்தியாசமாக இருந்தது. பாடலில் இடம் பெற்றிருந் தது என்ன தெரி யுமா? வாய்பாடு! ஆம்! கணக்குப் பாடத் தில் வருகிற வாய் பாடுதான் அங்கே இசை, தாளத்துடன் பாட்டு உருவில் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டிருந்தது. எனக்கு அதைப் பார்த்தவுடன் ஒரே ஆச் சரியம். அதை அப்படியே டேப்பில் ரெகார்டு பண்ணித் தரும்படி அந்த ஆசிரியரிடம் கேட்டேன். அதை எங்கள் பள்ளிக்கூடத்தில்கூட குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தது உண்டு.

பாடத்திட்டம் என்றால், இன்னது தான் என்று ஒரு வரைமுறை போட்டுக் கொள்வதில்லை என்ற அமெரிக் காவின் கல்விக் கொள்கை என்னை மிகவும் கவர்ந்த ஒன்று. நான் நிறைய தடவைகள் அமெரிக்காவில் நடந்த ஆசிரியர்களுக்கான ஒர்க்ஷாப்களில் கலந்து கொண்டிருக்கிறேன். ஒரு ஒர்க் ஷாப்பில் 'உங்களில் எத்தனை பேருக்குப் பட்டம் எப்படிச் செய்வது என்ற தெரி யும்?' என்று கேட்டார்கள். பலருக்கும் தெரியவில்லை. எல்லார் கையிலும் வண்ணக் காகிதங்களையும், குச்சி, நூல் போன்றவைகளையும் கொடுத்து, பட்டம் செய்யும் முறையையும் விளக்கிச் சொல் லிக் கொடுத்துவிட்டு, எல்லாரையும் பட்டம் தயாரிக்கும்படிச் சொன்னார்கள். வயசான, பெரியவர்கள் எல்லாம் குழந் தைகள் போல பட்டம் செய்தது ஓர் இனிய அனுபவம்!

இது ஏதோ பொழுதுபோக்காகச் செய் தது இல்லை. விஞ்ஞான ரீதியாகப் பட்டம் எப்படிப் பறக்கிறது? அதன் அமைப்பு இப்படி இல்லாவிட்டால் ஏன் அது பறப்பதில்லை? காற்றின் குணாதி சயங்கள் என்று பல விஷயங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். அட! மெரீனா பீச்சில் குழந்தைகள் ஜாலியாய்ப் பட்டம் விடுவதைப் பார்த்திருக்கிறோம்; சிறுவர்கள் பட்டம் விற்பதைப் பார்த்திருக்கிறோம்.

## 'பட்டம்' செய்யக்

ஆனால் பட்டம் என்பது ஏதோ விளையாட்டு சமாசாரம் மட்டுமில்லை; ஒரு அறிவியல் உபகரணம் என்பதை முழுமையாகப் புரிந்துகொண்டேன். நம் ஊரில் வல் லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார் களே! அதுபோல விஞ்ஞான உண்மை களைக் குழந்தைகளுக்கு விளக்கிச் சொல்ல எந்தச் சிறிய உபகரணம் என் றாலும் ஓ.கே.தான்.

சி.பி.எஸ்.சி பாடத் திட்டம், மெட்ரி குலேஷன் பாடத் திட்டத்தை விடக் கஷ்

## திருமதி ஒய்.ஜி.பி



# கற்றுக் கொண்டேன்!

பெண்களைச் சுலபமாகப் பெற்று விடலாம். இதனால், இஞ்சினியரிங் முதலிய தொழிற் கல்லூரிகளில் இடம் கிடைப்பது சுலபமாக இருக்கும் என்பது இவர்களது கணக்கு. இது வாஸ்தவம்தான். ஆனாலும், இதுபற்றி நான் சொல்ல விரும்பும் கருத்து ஒன்று உண்டு.

சி.பி.எஸ்.சி பாடத் திட்டத்தில் படிக்கிற பையனுக்கு, ஐ.ஐ.டி முதலிய அகில இந்திய அளவிலான நுழைவுத் தேர்வுகளில் சுலபமாக வெற்றி பெற முடியும். அதேபோல அயல்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் மேற்படிப்பு படிக்கச் செல்லும் நோக்கம் கொண்டவர்களுக்காக நடத்தப்படும் நுழைவுத் தேர்வுகளிலும் இவர்களால் சுலபமாக வெற்றி பெற்று விட முடியும்.

எந்தச் சவாலையும் எதிர்கொள்ளும் துணிச்சலான புத்திசாலிப் பையன்களைக்கூட இவ்வாறு மாற்றி சவால்கள் ஏதுமில்லாத சூழலில் இருத்தி விடுகிறார்கள்.

இதனுடைய விளைவு என்ன என்பதை அகில இந்திய, அகில உலக அளவிலான போட்டித் தேர்வுகளை எழுதுகிறபோதுதான் அவர்கள் உணர்வார்கள்.

டமானதுதான்.

பிளஸ்-டு பொதுத் தேர்வில், மெட்ரிகுலேஷன் அல்லது மாநில அரசாங்கத்தின் பாடத் திட்டத்தைப் படிக்கிற மாணவர்கள் மிக அதிகமான மார்க்குகளை வெகு சுலபமாக வாங்கி விட முடியும்.

இதனால், பெற்றோர்களிடையே கடந்த சில வருடங்களாகவே, ஒரு பழக்கம் காணப்படுகிறது. அதாவது சி.பி.எஸ்.சி பள்ளிக்கூடத்தில் பத்தாவது வகுப்பு பாஸ் பண்ணியவுடன், மெட்ரிகுலேஷன் அல்லது மாநில அரசின் கல்வித்திட்டம் நடைமுறையில் உள்ள பள்ளியின் பிளஸ் ஒன் வகுப்பில் குழந்தைகளைச் சேர்த்து விடுகிறார்கள். இறுதித் தேர்வில் மிக அதிகமான மதிப்

**வ**ருடாவருடம், எங்கள் பள்ளி மாணவர்களுக்கு ஐ.ஐ.டி, பிலானி இஞ்சினியரிங் கல்லூரி போன்ற உயர்தொழில் நுட்பக் கல்லூரிகளுக்குக் கணிசமான எண்ணிக்கையில் அட்மிஷன் கிடைக்கிறது.

இப்படி ஐ.ஐ.டி, மருத்துவம் எல்லாம் படிக்கிற மாணவர்கள் பலர் அயல்நாடுகளுக்குப் போய் அங்கேயே செட்டிலாகி



**"கல்யாண மண்டபத்துல என்னோட ஷூ காணாமப் போயிடுச்சு!"**
**"அப்படியா?"**
**"ஆமா! ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினது!"**
**"ஆயிரம் ரூபாயா?"**
**"ஆமா! சிங்கப்பூரிலேர்ந்து என் ஃபிரண்டு கொண்டு வந்தான்!"**
**"ஓஹோ!"**
**"நான் இவ்வளவு பதறிப் போய் சொல்லுறேன். நீங்க 'ஆஹா ஓஹோ'னுக்கிட்டிருந்தா என்ன அர்த்தம்?"**
**"அட சும்மா இருங்க. எனக்கு சந்தோஷத்திலே கையும் ஓடலே. காலும் ஓடலே!"**
**— சீத்தாதம்பி**

விட விரும்புகிறார்கள். ஒரு மாத காலத்தில் நான் கலந்து கொண்ட திருமண நிகழ்ச்சிகள் சிலவற்றில், எங்கள் பள்ளியில் முந்நாள் மாணவர்கள் நிறைய பேர்களைப் பார்த்தேன். பலரும் தாம் அமெரிக்காவில் படிப்பதாகவோ, வேலை பார்ப்பதாகவோ அல்லது விரைவில் அமெரிக்கா போகவிருப்பதாகவோ சொன்னார்கள்.

"இந்தியாவில் படித்துவிட்டு, அந்நிய நாடுகளுக்குப் போய் உங்கள் திறமையைச் செலவழிக்கிறீர்களே! இது சரியா?" என்று சில மாணவர்களைக் கேட்டபோது, அவர்கள் 'இதிலென்ன தப்பு? எங்களுடைய திறமையை முழுமையாக அங்கீகரித்து கௌரவிக்க இங்கே யாருமில்லை. ஆனால் அங்கே அப்படி இல்லை. இந்தியர்களின் புத்திசாலித்தனத்தையும், திறமையையும் நன்றாகவே அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். திறமைக்கேற்ற வேலை, நல்ல சம்பளம். இவையெல்லாவற்றுக்கும் மேலாக, அங்கே முழுமையான ஜாப் சாடிஸ்ஃபாக்ஷன் கிடைக்கிறது' என்கிறார்கள்.

போன வருடம், எங்கள் பள்ளிக்கூடத்தில் படித்த மாணவர்களில் சுமார் நாற்பது பேர், ஐ.ஐ.டி நுழைவுத் தேர்வு எழுதினார்கள். இவர்களில் பன்னிரண்டு பேருக்கு அட்மிஷன் கிடைத்தது. இது இருபத்து ஐந்து சதவீதத்துக்கும் அதிகம். மற்றவர்களிலும் நிறைய பேருக்கு பிலானியிலும், தமிழ்நாட்டிலும் இஞ்சினியரிங் காலேஜில் இடம் கிடைத்தது. இவர்களுக்கெல்லாம் பலமான அஸ்திவாரம் இருப்பதால், மேலே படிப்பது என்பது சிரமமாக இல்லை. நன்றாகப் படித்து நிறைய மார்க் வாங்கி படிப்பை முடித்து விட்டு, சவால்கள் நிறைந்த வேலைகளைத் தேடிக் கொள்கிறார்கள். வெற்றி பெறுகிறார்கள்.

ஆனால், எல்லா இஞ்சினியரிங் படித்த மாணவர்களும் இப்படி இல்லை. சமீபத்தில், நண்பர் ஒருவர், "இஞ்சினியரிங் முடித்த இளைஞர் ஒருவர், தன்னிடம் வேலை கேட்டு வந்ததாகவும் ஐந்நூறு ரூபாய் மாதச் சம்பளத்துக்குக்கூடத் தான் வேலை செய்யத் தயாராக இருப்பதாக அவர் கூறியதாகவும் என்னிடம் சொன்னபோது மிகவும் வருத்தமாக இருந்தது.

பல்கலைக் கழகப் படிப்பு பற்றிய அறிஞர் குழு ஓர் அறிக்கை சமர்ப்பித்திருக்கிறது. பல்கலைக் கழகங்களில் பட்டப் படிப்பு முடித்தவர்களுக்கு, பட்டமளிப்பு விழாவில் சான்றிதழ்கள் வழங்கும்போது கூடவே வேலைக்கான நியமன உத்தரவும் தரப்படுகிற சூழ்நிலை உருவாக வேண்டும் என்று அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்ததை இப்போது நினைத்துப் பார்க்கிறேன்.

இன்று, இஞ்சினியரிங் பட்டதாரி, ஐந்நூறு ரூபாய்க்கு வேலை கிடைக்குமா என்று தேடும் சோகமான சூழ்நிலை! என்ன ஒரு விசித்திரம்!

(அடுத்த வாரம் சொல்கிறேன்)

# மூப்பனாரைப் போல் தராசு புலம்புவதேன்?

• பாசப் புலம்பல்!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? 'சோனியா காந்தி அரசியலில் நுழைந்த பின்தான் இந்த நாட்டில் இந்து-கிறிஸ்தவர்கள் மோதல் அதிகரித்துள்ளது. சோனியாவைப் பிரதமராக்கி அதன் மூலம் இந்தியாவை மறைமுகமாக ஆட்சி செய்ய போப் ஆண்டவர் விரும்புகிறார். இதற்காகத்தான் பா.ஜ.க. ஆட்சி கவிழ்க்கப்பட்டது' என்று விச்வ ஹிந்து பரிஷத் தலைவர் அசோக் சிங்கல் அதிசயக் கண்டுபிடிப்பு நிகழ்த்தியுள்ளது பற்றி...?

! கிறிஸ்தவ மத தர்மப்படி இந்த அபத்த அறிக்கைக்காக போப் பாண்டவர் அசோக் சிங்கலை மன்னித்து அவருக்கென பிரார்த்தனை புரிவாராக!

● எம். ரேவதி, மன்னார்குடி-1.

? உலகக் கோப்பை கிரிக்கெட்டில் எந்த அணியினரின் விளையாட்டைக் கண்டு பிரமித்தீர்கள்?

! அதெல்லாம் பழசாப் போச்சுங்க. இப்ப விம்பிள்டன்ல இளம்புயல் ஜெரினா 6-2; 6-0 என்கிற எண்ணிக்கையில உலக சாம்ப் மார்டினா ஹின்ஜிஸைத் திணற அடிச்சு, நம்மையும் பிரமிக்க வைச்சுட்டாரே!

● எஸ். மாலதி, விஷ்ணுபுரம்.

? பாகிஸ்தானுடன் போராடும் நமது ராணுவத்துக்காக டெல்லி திஹார் ஜெயில் கைதிகள் எல்லோரும் சேர்ந்து நிதி திரட்டி பிரதமர் நிவாரண நிதிக்குக் கொடுப்பதாக அறிவித்துள்ளது பற்றி...?

! முன்னில் ரோஜா.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பட்டி.

? பெண் சிசுக் கொலையைத் தடுக்கவே பெண் குழந்தைகளைக் கடத்தினோம் என்று கைதானவர்கள் கொடுத்த வாக்கு மூலம்...?

! ஒரு தவறை இன்னொரு தவறால் திருத்தி விட முடியாது என்பதை மறந்து தரப்பட்ட வாக்குமூலம். சுயமாகச் சொன்னார்களா? வழக்கிலிருந்து தப்பிப்பதற்காகச் சொல்லிக் கொடுக்கப்பட்டதைச் சொன்னார்களா என்பது ஆராய்ச்சிக்குரியது.

● கே.ஆர். உதயகுமார், சென்னை -1.

? பெண்களைக் கேலி செய்பவர்கள் மீது புகார் மனு கொடுக்கப் பெட்டி வைக்கப்படுகிறதே. சரியா...?

! பெட்டியில் போடப்படுகிற புகார் அடிப்படையில் நடவடிக்கை எடுக்காமல், அதன் அடிப்படையில் உளவு பார்த்து நடவடிக்கை எடுக்கப்படுவதால் தவறில்லை. ஆனால், பிரச்னைக்கு அது தீர்வுமில்லை. பெண்களை மதிக்கும் பண்பு, நல்ல கல்வி மூலமே அமையும்.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை - 9.

? 'மதவாதத்தை எதிர்த்தும் தவிர்க்கலாம் கூடியும் தவிர்க்கலாம்' என்று சி.எஸ். சொன்னது சரிதானா...?

! சரிதான்; ஆனால் பின்னது சிரமமான காரியம்; ஏமாறாமல் இருக்க, சதா முன்னெச்சரிக்கையுடன் செயல்படுவது அவசியம்.

● ச.சிதம்பரம், திருத்தங்கல். ❐

? பா.ஜ.கவை மதவாதக் கட்சி எனப் பல கட்சிகள்-த.மா.கா உள்பட- ஒதுக்குகின்றனவே, பா.ஜ.கவினால் சிறுபான்மையினருக்கு என்ன பிரச்னை? பிராமணர்கள் எதிர்ப்பு, கடவுள் எதிர்ப்புக் கொள்கையில் தீவிரமாயிருந்த தி.மு.க. ஆட்சிக்கு வந்ததால் பக்தர்கள், பிராமணர்களுக்கு ஏதாவது தீங்கு ஏற்பட்டதா...? ஆகவே பா.ஜ.க. ஆட்சியினாலும் எந்த தீமையும் ஏற்படாது என்கிறேன். தராசு கருத்து என்ன?

! பா.ஜ.கவே தனது பரிவாரங்களைக் கண்டு பயப்படுவதால்தான் பலருக்கும் அதன் மேல் சந்தேகம் இருக்கிறது.

● கே.வி. ராமன், சென்னை - 73.

? உலகக் கோப்பையின் இறுதியாட்டத்தில்

**நீங்கள் கேட்டவை – தராசு**

*ஆஸ்திரேலியா வென்றது குறித்து...?*

! செமி பைனலில் இறுதிப் பந்துவரை தென் ஆப்பிரிக்காவின் அபாரமான போராட்டத்தைப் பார்த்த கண்களுக்கு சரியான ஆன்ட்டி கிளைமேக்ஸ்! பாகிஸ்தான் தோற்றே தீருவது என்று விளையாடியிருக்கிறது.

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

*? வஞ்சகம் என்றால் தெரியும். அதென்னங்க நயவஞ்சகம்?*

! வஞ்சகம்-வழக்குகளை ஒத்திப்போட, அவற்றிலிருந்து நழுவ முயற்சி செய்வது. நழுவும்போது அதை வெற்றியாக்கி வேஷம் போடுவது நயவஞ்சகம்.

● ஆர்.சுப்பாராவ், திருக்கோவலூர்.

*? நமது உளவுத்துறை மீது பிரதமர் வாஜ்பாய் இன்னமும் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறாரே-இது நியாயமா?*



• ஆர்வ கண்டுபிடிப்பு!



• வஞ்சக விளக்கம்



• சரித்திரம் சொல்லும்!

! இன்றைய போர் போன்ற நிலையில் சரிதான். இருந்தாலும் எச்சரிக்கையும் மறுசீரமைப்பும் அவசியம். இன்றைய சூழலில் இவற்றை அரசாங்கம் பகிரங்கமாக ஒப்புக்கொள்ளாது. மறைமுகமாக நடைமுறைப்படுத்தினால் நல்லது. எதிர்காலத்தில் எப்படியும் உண்மைகள் சரித்திரமாக வெளிவரும்.

● எம். காமராஜ், திருச்சி – 16.

*? பி.பி.சி. தமிழோசை (வானொலி) நிகழ்ச்சிகளில் அமரர் கல்கி நூற்றாண்டையொட்டி ஒலிபரப்பாகிய பொன்னியின் புதல்வர் எனும் சிறப்புத் தொடர் நிகழ்ச்சியைத் தாங்கள் கேட்டு ரசித்தீர்களா?*

! இந்த சாடிலைட் சானல் யுகத்திலும் பி.பி.சி. ரேடியோ நிகழ்ச்சியைக் கேட்டு ரசித்து எழுதுகிறீர்களே... இது அந்த நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ்ந்ததை விடவும் அதிக சந்தோஷத்தைத் தருகிறது.

● இரா. கமலக்கண்ணன்,
நாமகிரிப்பேட்டை.

*? இந்தியா அரை இறுதிக்குப் போகா விட்டாலும் சரி, பாகிஸ்தானை வென்றதே போதும் என்கின்றனரே பலர்?*

! இது மட்டுமா. இறுதியில் பாகிஸ்தான் தோற்று, கோப்பையைக் கைவிட்டதையும் பலர் பட்டாசு வெடித்துக் கொண்டாடினார்கள். இது சரியில்லை. விளையாட்டை விளையாட்டாகவும் யுத்தத்தை மட்டுமே யுத்தமாகவும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

● எஸ். அப்துல் மஜீது,
நாவினிப்பட்டி.

*? ஏன் சார். மிகப் பெரிய ஊழல் கட்சியான காங்கிரஸ், அ.தி.மு.கவுடன் சேர்வதில் என்ன தவறு கண்டீர்கள்? என்னவோ மூப்பனாரைப் போலப் புலம்புகிறீர்களே...?*

! காங்கிரஸ், ஊழல் கட்சி என்பதை மறுக்கவில்லை. ஆனால் அ.தி.மு.க. தயவுடன் ஆட்சிக்கு வருவதன் மூலம் ஸ்திரமின்மைக்கே மீண்டும் வழிகோலுவார்கள். ஜெ பேரிலான வழக்குகள் வாபஸ் என விலை பேசப்படும். நாட்டுக்கும் தமிழ்-நாட்டுக்கும் ஒருங்கே அபாயம். அதுதான் எச்சரிக்கிறோம். மூப்பனார் புலம்பல் வேறு ரகம். நேரு குடும்பத்தினரிடம் உள்ள பாசம், பற்றுதல் அதில் தூக்கலாகத் தெரிகிறது.

● எல். துர்காதேவி, மங்கநல்லூர்.

*? எதிர்காலத்தில் எல்லாவற்றிலும் பெண்களுக்குச் சம உரிமை கிடைக்குமா? உங்களது 'நீங்கள் கேட்டவை' பகுதி உட்பட...?*

! கல்கியில் எப்போதுமே பெண்களின் திறமைக்கு சம உரிமை உண்டு; பெண்மைக்கு அல்ல.

☐ ரூ. 50 பரிசு பெறுபவர்
ச. சிதம்பரம்
303 B, செல்லையாரம்மன்
கோயில் தெரு
திருத்தங்கல் — 626130

✉ பிரதமர் வாஜ்பாய் பற்றிய உங்கள் தலையங்கம் நியாயமானது! அநீதியைச் சுட்டிக் காட்டியதற்காகப் பாராட்டுகிறேன்.
கோலார் தங்கவயல், முரா. பாலாஜி.

✉ தற்போதுள்ள சூழ்நிலையில் மூப்பனார் எந்தக் கட்சியோடும் கூட்டணி இல்லாமல், தனித்துச் செயல்படுவதே நல்லது என்பதை எடுத்துச் சொன்னது கவர் ஸ்டோரி!
திருச்சி-18, அம்மனூர் என். சாம்பமூர்த்தி.

## வட்டமேஜை

# எல்லை மீறும் குறும்பு!

✉ கோவா தேர்தலில் வாஜ்பாயின் பலம் கூடியுள்ளதையும், சோனியாவின் வெற்றியையும் வைத்து வரையப்பட்ட கார்ட்டூன் செம அசத்தல். இதைவிட சிம்பிளாக யாரும் இதை விளக்கிவிட முடியாது.
பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ 'ஜெயிப்பாரா?' கட்டுரை அரசியல் கட்சிகளின் கண்களைத் திறக்கும் என்பதில் சந்தேகமில்லை.
சென்னை-24, ஆர். சிவகுமாரன்.

✉ 'சன்விஸ்தா' அனுபவம் படிக்கும்போதே உறைய வைத்தது. அதுவும் கட்டுரையின் கடைசி வரி, வெட்கப்படவும் வேதனைப் படவும்கூட வைத்தது. நாம் 'இந்தியர்'களாக இருப்பது இடக்கட்டும், குறைந்தபட்சம் 'மனிதர்'களாகவாவது இருப்போமா?
சென்னை-45, சுப்ர. பாலன்.

✉ 'சன்விஸ்தா' கட்டுரை படித்தேன். அதுவும் எங்கள் கோவையைச் சார்ந்தவர் பெற்ற அனுபவம் மெய் சிலிர்க்க வைத்து விட்டது. கல்கி அவர்களின் பொன்னியின் செல்வனில் வந்தியத்தேவன் மந்திரவாதி கப்பலில் இருந்து தப்பித்து, பொன்னியின் செல்வரால் காப்பாற்றப்பட்டு, மரக்கலம் தீப்பற்றி எரியுமே, அதுதான் என் நினைவில் வந்தது. வந்தியத்தேவன் போல நம் கட்டுரையில் இடம் பெற்றவரும் உயிர் தப்பியது மகிழ்ச்சியளித்தது.
கோயமுத்தூர்-8, ஜெ. மைதிலி.

✉ ஒடுக்கப்பட்ட மக்களின் ஒற்றுமையை வலியுறுத்தும் தப்பாட்டத்துக்கு உயிர் கொடுக்கும் திண்டுக்கல் சக்தி போர்ப்பறைக் கலைக் குழு கலைஞர்களின் செயல் மிகவும் பாராட்டத்தக்கது.
கீழ்வேளூர், கோ. தியாகராஜன்.

✉ இந்த வார கல்கி 'சிரிப்புச் சிறப்பதழோ' என்னும்படி ஒரே ஜோக் மயம்! அத்தனையும் சிரிக்கவும் - சிந்திக்கவும் வைத்தன.
நெத்திமேடு, நிர்மலாநாதன்.

✉ "பணம்" பற்றி பாக்யராஜ் என்னமாய் விளக்கம் தந்துள்ளார்! குறிப்பாக கடைசி பாரா. நாட்டிலுள்ள வசதியான மனிதர்கள் எல்லாரும் அவசியம் படிக்கவும் வேண்டும், அதன்படி நடக்கவும் வேண்டும். மனித வாழ்வின் லட்சியம் இதுதான் என்பதை எவ்வளவு எளிமையான நடையில் எழுதிக் காட்டியுள்ளார்! பயன் உள்ளதைப் படிக்க வேண்டும் என்பார்கள். அதற்குக் கல்கியில் வெளியாகியுள்ள "பணம்" பகுதியே சான்று!
கொடுமுடி, ந. சேதுராமன்.

✉ வர வர சாருகேசியின் குறும்பு எல்லை மீறுகிறதே! அவ்வப்போது கல்கியில் பிரசுரமாகும் இவரது நகைச்சுவைக் கட்டுரைகள் குறித்துப் புன்முறுவல் செய்தாலும் இந்த வாரம் வெடிச் சிரிப்பைக் கிளப்பும் படு நையாண்டிக் கட்டுரை. பல தலைவர்களையும் போயஸ் தோட்டத்தில் உலவ விட்டு விட்டார். மேலோட்டமாக நகைச்சுவை தெரிந்தாலும் அரசியல் தலைவர்கள் இவ்வளவு தூரம் தாழ்ந்து போனார்களே என்கிற வேதனையும் கட்டுரையில் அடி நாதமாக ஒலிக்கிறது. நாட்டு நடப்பை நகைச்சுவை கலந்து நையாண்டி செய்யும் ஓர் அற்புத எழுத்தாளர் நம்மிடையே இருந்து வருவது சந்தோஷம் தருகிறது.
சென்னை-91, பாலகல்கி.

✉ "மேல் தாழ்ப்பாள்" - வெங்கடேஷின் சிறுகதை உள்ளத்தை உருக்கியது. என் பேத்தியும் அப்படித்தான். முடிவு வேறு மாதிரி இருந்திருக்கலாம். படிப்புக்கு முக்கியத்துவம் தந்து ஊனமுற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டாம். உழைப்பை வற்புறுத்தி இருக்கலாம்; ஓடியாடி விளையாடுவதே உழைப்பை வளர்க்கத்தான் என்று முடித்திருக்கலாம்.
கோவை-25, எம்.எஸ்.பி. காசி விஸ்வநாதன்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16,காமராஜ் சாலை,பழையபெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம்,சென்னை-600063.
Tel&FAX : 2376129,Cell Ph : 9841050464
E-mail: sspeetam@md3.vsnl.net.in
& sspeetam@hotmail.com
WEB SITE: www.intamm.com / sspeetam

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 75 மாணவர்களும் 25 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 100 பேருக்கு ) | ரூ. | 750/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,500/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 500/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 75,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

ADCHOICE

## தலைநகர் தபால்

**கா**ர்கில் யுத்தம் க்ளைமாக்ஸை நெருங்கிக் கொண்டிருக்கும்போது இந்தியத் தலைநகரின் அதிகார மையங்களில் இன்னும் ஒரு வாரத்திற்குள் இறுதித் தாக்குதலை நடத்தி- பிரச்னையை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட வேண்டும் என்று பேசப்பட்டிருக்கிறது. இறுதித் தாக்குதலில் எல்லைக் கோட்டைத் தாண்டவும் கூடுமாம் நம் ராணுவம்.

பாதுகாப்புத் துறையின் உச்ச அமைப்புகளான அமைச்சரவையின் பாதுகாப்புக் குழுவும் (Cabinet Committee on Security) தேசிய பாதுகாப்புக் கவுன்சிலும் (National Security Council) தங்கள் கூட்டுக் குழு விவாதத்தின் முடிவை அரசுக்குத் தெரிவித்து விட்டன.

ராணுவ வட்டாரங்கள் கூறுவது: 'அரசு இறுதித் தாக்குதலுக்குக் கட்டளையிட வேண்டியதுதான் பாக்கி. கட்டளை கிடைத்த ஒரே வாரத்தில் எங்கள் பணி முடிந்து விடும்.'

பாதுகாப்புத் துறை கூறுவதோ, 'வரும் ஏழு நாட்கள் மிக முக்கியமானவை. அரசியல், ராணுவ, ராஜ தந்திர ரீதியாக ஒரு தீர்மானமான முடிவு எடுக்கப்பட வேண்டும். இல்லையெனில் நமது அனைத்து முயற்சிகளும் வீண் போய்விடும்' என்பது.





இந்த உச்ச அமைப்புகளின் விவாதத்திற்குப் பின்னரே ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ், "தேவைப்பட்டால் இந்திய ராணுவம் பாக் எல்லைப் பகுதிக்கும் சென்று ஆக்கிரமிப்புகளை அகற்றும் நடவடிக்கை எடுக்கும்" என்றார். இக்கூற்று சர்வ தேச விதிகளுக்குட்பட்டது. அதாவது ஒரு தேசம் தன் இறையாண்மையைக் காக்க, அவசியம் ஏற்பட்டால் அடுத்த தேசத்தின் நில, வாயு எல்லைகளைக் கடந்து தாக்குதலைத் தொடரலாம் என அகில உலக விதிகள் அனுமதிக்கின்றன. ரோம் சர்வ தேச கன்வென்ஷன் இதை அங்கீகரித்திருக்கிறது.

**ந**டந்த ரகசியக் கூட்டத்தில் கார்கில் புவித்தள நிலைமையும் அலசப்பட்டிருக்கிறது. அங்கு ஆகஸ்ட் மாத மத்தியிலிருந்து பனி மழை தொடங்கி விடும். உலகிலேயே சைபீரியாவுக்கடுத்தபடியாக இரண்டாவது குளிர்ப் பிரதேசம் இது. சாதாரண வெப்ப நிலை மைனஸ்-60 டிகிரி

# நெருங்குகிறது, நேரம்

செல்ஷியஸ். குளிர் காலத்தில் இது இன்னும் குறையும். ராணுவத் தளபதி வி.பி. மாலிக் இந்தியத் துருப்புக்களைக் குளிர் காலத்தில் அங்கே நிறுத்துவதை ஆதரிக்கவில்லை. அரசுக்குத் தனது அறிக்கை ஒன்றில் நவீனத் தொழில் நுட்பக் கண்காணிப்பு இயந்திரங்களை நிறுவச் சொல்லியிருக்கிறார்.

ராணுவத்தின் உச்சத் தலைமை, எல்லைக் கோட்டைத் தாண்டாமல் ஆக்கிரமிப்பாளர்கள் அனைவரையும் விரட்ட முடியாது என்று கூறி விட்டதாகத் தெரிகிறது. 100–150 கி.மீ. பரப்பு எல்லையில் 15–20 கி.மீ. பகுதியையாவது இந்திய ராணுவம் தாண்ட வேண்டியிருக்கும் என்று தற்போது கணக்கிடப்படுகிறது. இதன் மூலமே சப்ளைகளை அழிக்கவும் துண்டிக்கவும் முடியும்.

அரசு, பாதுகாப்புக் கவுன்சிலின் ஆலோசனையை மிகத் தீவிரமாகப் பரிசீலித்துக் கொண்டிருக்கிறது. பாகிஸ்தான் ஆக்கிரமித்த காஷ்மீரிலுள்ள ஸ்கார்து பகுதியைத் தீவிரமாகத் தாக்க வேண்டுமென்ற இந்த ஆலோசனை, கவுன்சிலின் இரு ரகசியக் கூட்டங்களில் விவாதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்கார்து நமது வசப்பட்ட எல்லைக் கோட்டிலிருந்து 70கி.மீ. தூரத்திலுள்ளது.

தளபதி மாலிக் அமைச்சரவையின் உத்தரவில்லாமல் பாக் எல்லையை மீற முடியாது என்று கூறுகிறார். அந்நிய விவகாரத் துறை கூறுவது: "தேச நலனுக்கு உகந்த முடிவே இறுதியில் எடுக்கப்படும்." இதில் கவனிக்கத் தகுந்த ஓர் அம்சம், நமது தேசத்தின் ஜனநாயக பாரம்பரியம். "எந்த நிலையிலும் நமது மாட்சிமை, ஆளுமை நிலைநாட்டப்படுகிறது என்பது இன்று தேச பக்தி உள்ள ஒவ்வொரு இந்தியனும் பெருமைப்பட வேண்டிய விஷயம். பாகிஸ்தானைப் போலில்லாமல் மக்கள் ஆட்சியை உதாசீனப்படுத்திக் கேவலமான, அருவருக்கத்தக்க ஒரு மிருகக் காட்டாட்சியை ராணுவம் தான்தோன்றியாக இந்தியாவில் எடுக்க முடியாது. இதற்கு எத்தனை தியாகங்கள் வேண்டுமானாலும் செய்யலாம். ஏனென்றால் நாம் நமது சுதந்திரப் பயிரைக் கண்ணீரால் காத்திருக்கிறோம். அது கருகச் சம்மதிக்க மாட்டோம்."

இதை மாலிக் நம்மிடம் ஒவ்வொரு நாள் பத்திரிகையாளர் சந்திப்பு முடிந்தவுடன் உறுதி செய்வது இந்திய ராணுவத்தின் மாட்சிமையையும் நமது மதிப்பில் உயர்த்துகிறது. "மெதுவான, ஆனால் உறுதியான நடவடிக்கை" என்ற அரசின் முடிவு பல



உயிர்த்தியாகங்களில் முடிந்து விட்டாலும் இந்திய அரசின் மாட்சிமை, குடியரசின் ஆளுமை இன்றைக்கு உலகரங்கில் தலை நிமிர்ந்து நிற்கிறது.

கிட்டத்தட்ட ஒரு மாத யுத்தத்திற்குப் பிறகு தனது மௌனத்தைக் கலைத்த ராணுவத் தலைமை, சில ஆவணங்களைப் பத்திரிகைக்காரர்களிடம் வெளியிட்டது. அவற்றுள் முக்கியமானது feit accompli என்று வர்ணிக்கப்படும் பாக் அரசியல் தலைமையின் "சம்மதம்". அதாவது "நீ என்ன சொன்னாலும் நான் தாக்குதலைத் துவங்கி விட்டேன். நீ ஆதரித்துத்தான் ஆக வேண்டும்" என்று பாக் ராணுவம் தனது அரசியல் தலைமைக்கு கொடுத்த நெருக்குதல். பாக் ராணுவம் எப்படி குடியரசு என்ற பெயரில் தனது காட்டுத் தர்பாரை (law of the jungle) நடத்துகிறது என்பதையே இது காட்டுகிறது. இன்றைக்குச் சீர் குலைந்

# தாண்டும் நேரம்!

திருப்பது பாகிஸ்தானின் பொருளாதாரம். வளர்ச்சிப் பணிகளுக்கென்று உலக நாடுகளிலிருந்து வாங்கும் பணத்தை பாக் ராணுவம் யுத்த தளவாடங்களுக்குச் செலவிட்டு, முட்டாள்தனமான சிரழிவைத் தேடிக் கொண்டிருப்பது இன்று அம்பலத்துக்கு வந்திருக்கிறது. பாகிஸ்தானுக்கான உலக நாடுகளின் நிதியுதவியை நிறுத்த வேண்டுமென இந்தியா கேட்டுக் கொண்டிருக்கிறது.

வெளி வந்திருக்கும் ஆவணங்கள் பாகிஸ்தான் இந்திய எல்லையை எவ்வளவு தூரம் ஆக்ரமிக்க முடியுமோ அவ்வளவு தூரம் ஆக்ரமித்து, பிறகு பேச்சுவார்த்தைகளில் தானொரு பலம் பொருந்திய ஸ்தானத்திலிருந்து இந்தியாவை அதிகாரம் செய்யலாம் என்று கணக்கிட்டிருப்பதை நிரூபித்திருக்கின்றன.

* * *

பிரியங்கா தமக்கு அரசியல் தேவையில்லை என்று சொல்லிவிட்டதாக சோனியா கட்சி உள்வட்டாரத்தில் ஒரு பேச்சு கிளம்பியிருப்பது பல தலைகளைச் சுழல வைத்திருக்கிறது.

பிரியங்காவின் பிரசாரம் தங்களுக்கு வரப்பிரசாதம் என்று நினைத்துக் கொண்டிருந்த பல பெருந்தலைகள் இப்போது ஜன்பத் மாளிகை வாசலில் "(ராஜீவ்) காந்தியின் மகளே வருக, எங்களுக்கு அதிகார வாழ்வை அருள்க" என்று மடிப்பிச்சை ஏந்தத் தயாராகி விட்டனர். குறிப்பாக உ.பி. தலைகள்.

சோனியாவின் இத்தாலியப் பிறப்புப் பிரச்னை பிரியங்காவின் மனத்தை உடைத்துவிட்டதாகக் கூறுகின்றன கட்சி வட்டாரங்கள். ஆக, முதலில் உ.பி.யில் ஒரு தொகுதியில் (பாட்டி இந்திராவின் ரே பரேலி தொகுதி) போட்டியிடுவார் என்று கருதப்பட்ட பிரியங்கா ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார். "இது கார்கிலில் போடப்படும் குண்டுகளை விடக் கடுமையானது" என்கிறார் வெற்றிக்கு பிரியங்காவின் பிரசாரத்தை நம்பி நிற்கும் ஒரு உ.பி. தலைவர். இப்போது குறைந்த பட்சம் பிரசாரத்துக்காவது பிரியங்காவை இழுக்க முயற்சிகள் துவங்கி விட்டன.

உ.பி. மற்றும் பிற கட்சி அமைப்புகள் ஏற்கெனவே "பிரியங்காவே வருக.... கட்சியைக் காப்பாற்றுக" என்று அறிக்கைகள் வெளியிட்டு, தீர்மானங்கள் நிறைவேற்றி விட்டன.

இங்கிலாந்தில் ஒரு தனியார் பாதுகாப்புக் கம்பெனியின் தரகராக, கமிஷன் அடிப்படையில் வேலை பார்த்துக் கொண்டிருக்கும் ராகுல் காந்தி தேர்தலின்போது தமது அம்மாவின் அருகில் துணை நிற்க ஆகஸ்ட் மாத இறுதியில் இந்தியா வருகிறார் என்றும் கட்சி வட்டாரங்கள் கூறுகின்றன.

ஆனாலும் இந்திராவின் சாயலை ஒத்திருக்கும் பிரியங்காவின் நட்சத்திரப் பிரசாரமே தனி என்கின்றனர், இன்னும் சோனியா கட்சியில் இருக்கும் ஒரு சில பழங்காங்கிரஸ்காரர்கள்.

வி.என். காட்கில் போன்ற, அறிவுஜீவி பட்டம் பெற்ற பெரிசுகள் கூட பிரியங்காவின் நடையுடை பாவனை பற்றிப் பேசுகின்றனர், பத்திரிகையாளர்களிடம். "Her body language will ensure votes" என்றார் காட்கில். எல்லாம் காலத்தின் கோலம்!

**— டெல்லி வெங்கட்**



**● எண்ணங்களை ஒளிக்கக் கூடாது. அவற்றை வெளியிட வெட்கப்பட்டால் அதனை எண்ணியதற்காக இதை விட அதிகமாக வெட்கப் பட வேண்டும்!**

**– யாரோ**

**தகவல்: ஆர். பிரகாசம்**



*● கிரேக்க சட்டத்தைத் தந்த அறிஞர் சோலன் மக்களிடம் தன் கையிலிருந்த கெட்டுப்போன ஆப்பிளைக் காட்டி, "இதைப் புதிய, அழகிய ஆப்பிளாக மாற்ற முடியுமா?" என்று கேட்டார்.*

*மக்கள் விழித்தனர்.*

*சோலன் ஆப்பிளை வெட்டி விதைகளை எடுத்தார். "இவற்றை ஊன்றி புதிய மரம் வளர்ப்பேன். அது புதிய ஆப்பிள்கள் தருவது நிச்சயம்" என்றார்.*

*மனிதாபிமானத்தின் விதைகள் குழந்தைகள் தான்.*

*ஆதாரம்: கிழக்கும் மேற்கும்*

*தகவல்: சு. சந்திராஜ்*



# உற்சாக மாத்திரைகள் உஷார்!

'ஆம்ஃபிடமின்' (Amphetamin) ஊசியாகவும் மாத்திரையாகவும் கிடைக்கிற ஒரு வகை மருந்து. சென்னை, பெங்களூர், மும்பை போன்ற பெரிய நகரங்களில் வசிக்கும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்த சில கல்லூரி மாணவர்களும் பள்ளி மாணவர்களும் ஆம்ஃபிடமினை தினமும் உபயோகிக்கிறார்கள். பரீட்சை நேரத்தில் தூங்கி விடாமல் கண்விழித்துப் படிப்பதற்காக இந்த மருந்தை உபயோகிக்கிற மாணவர்கள், நாளடைவில் அந்தப் பழக்கத்தை விட முடியாமல் அதற்கு அடிமையாகிப் போகிறார்கள் என்கிற அதிர்ச்சி விஷயம் காதில் விழுந்தது.

வேலை வாய்ப்புகள் குறைவான, போட்டிகள் நிறைந்திருக்கும் இன்றைய சூழ்நிலையில், 'எப்படியாவது பரீட்சையில் அதிகமான மதிப்பெண்களை வாங்க வேண்டும், அதற்குக் கண் விழித்துப் படித்தால்தான் முடியும்' என்று நம்புகிற பெற்றோர்கள்தான் தங்கள் குழந்தைகளுக்கு இந்த மாதிரியான மருந்துகளை அறிமுகப்படுத்துகிறார்கள். இவை பெரும்பாலும் மூளை நரம்பியல் சம்பந்தப்பட்ட வியாதிகளுக்கும், மனவியல் வியாதிகளுக்கும் சைக்கியாட்ரிஸ்டுகளால் பரிந்துரைக்கப்படுபவை. இவற்றைப் பயன்படுத்துகிற மாணவர்கள், இந்த மருந்துகளின் தீவிரம் தெரியாமலேயே இதை உபயோகப்படுத்துகிறார்கள் என்பதுதான் பரிதாபம்.

பெயர்களைக் குறிப்பிடுவது நல்லதல்ல. ஆனால், ஆம்ஃபிடமின் போன்றே வேறு அரை டஜன் மாத்திரைகளும் மருந்துகளும் உள்ளன. தூங்காமல் கண்விழித்துப் படிப்பதற்காக மாணவர்கள் இவற்றை உட்கொள்ளுகிறார்கள். இந்த மருந்துகளைத் தொடர்ந்து எடுத்துக் கொள்வதால் வாந்தி, வயிற்றுவலி, மனக் குழப்பம், இதயத் துடிப்பு ஒழுங்கின்மை, வலிப்பு, நரம்புத் தளர்ச்சி, படபடப்பு, பதற்றம் என்று பக்க விளைவுகள் ஆரம்பித்து, 'கோமா' ஸ்டேஜுக்குக் கொண்டு போய்விடும் என்கிறார்கள் டாக்டர்கள்.

தாம்பரத்திலிருக்கும் டாக்டர் துளசிராமன் சொல்கிறார்: ''நாங்க படிக்கிற


• துளசிராமன்


• ரவீந்திரநாத்


• ரவி நாராயணன்


• சூர்யப்ரகாஷ்

காலத்துல, மாணவர்கள் தூங்காம படிக் கறதுக்காக மேண்ட்ராக்ஸ்ன்னு (Mandrax) ஒரு வகை 'மூட் எலிவேட்டர்' (mood elevator) மாத்திரைகள் சாப்பிடுவாங்க. அந்த மாத் திரையை இப்போ தடை பண்ணிட்டாங்க. இப்போ கிடைக்கிறது ஆம்ஃபிடமின்தான். அதைத் தொடர்ந்து சாப்பிடுறதுனால பக்க விளைவுகள் (side effects) நிறைய ஏற்படும். பிளட் பிரஷர், எரிச்சல் எல்லாம் ஏற்படும். இந்த வகை மருந்துகளை சைக்கியாட்ரிஸ் டுகள்தான் எழுதிக் கொடுப்பாங்க. இதைச் சாப்பிட்டால் தூக்கம் வராதுங்கறது உண் மைன்னாலும், பரீட்சைல போய் படிச்சதை எழுதறது ரொம்பக் கஷ்டம். இப்போ டீ.வியில் நினைவாற்றல் மாத்திரைகள்னு சில மருந்துகளை விளம்பரம் பண்றாங்க. அந்த மருந்துகளால பெரிய பயன் இல்லை. அதை சாப்பிடுறதுனால நூற்றுக்கு நூறு மார்க்கெல்லாம் வாங்க முடியாது. ஆனா, அவ்வகை மருந்துகள் நன்மை பண்ண லைன்னாலும் தீமை பண்ணாது. ஞாபக சக்தியை அதிகமாக்க வல்லாரை மாதிரி கீரை வகையைச் சாப்பிட்டாலே போதும்.''

சென்னை கிறிஸ்துவக் கல்லூரி மாண வர் சூர்யபிரகாஷ். இவர் ப்ளஸ் டூ படிக் கும்போது அப்பா வாங்கிக் கொடுத்த மாத்திரையைச் சாப்பிட்டு, தூங்காமல் விழித்திருந்து படித்த அனுபவம் உண்டு. இப் போது இல்லையாம். ஏனென்று கேட்டால், ''கண் முழிச்சிருக்கறதுக்கு மாத்திரை காரணமில்லை. மனசுதான் காரணம். நாம மாத்திரை சாப்பிட்டிருக்கோம். அதுனால தூக்கம் வராதுன்னு மனசு நெனைக்கிறது னாலதான் நமக்குத் தூக்கம் வரமாட்டேங் குது. இந்த உண்மை எனக்குத் தெரிஞ்சப் புறம் மாத்திரை சாப்பிடுறதை நிறுத்திட் டேன். என்னோட ஃப்ரெண்ட்ஸ் கொஞ்சம் பேரு இன்னும் மாத்திரை சாப்பிட்டுட்டு தான் இருக்காங்க" என்கிறார்.

இந்த வகை மருந்துகளை டாக்டரின் பிரிஸ்கிருப்ஷன் இருந்தால் மட்டுமே மருந் துக் கடைகளில் வாங்க முடியும். அதுவும், "இந்த மருந்தைப் பரிந்துரை செய்பவர் ஒரு சைக்கியாட்ரிஸ்டா' என்று பார்த்த பிறகே மருந்துக் கடையில் கொடுப்பார்கள். இப்படி இருக்க, இவை எப்படி எளிதாக மாணவர் களுக்குக் கிடைக்கிறது?

குரோம்பேட்டை, பல்லாவரம் பகுதி களில் சில மருந்துக் கடைகளில் இந்த மாத்திரை வேண்டும் என்று கேட்டால் ஏற இறங்கப் பார்த்துவிட்டு இல்லை என்று உதட்டைப் பிதுக்குகிறார்கள். கிழக்குத் தாம் பரத்தில் ஒரு கடையில், நோட் புக்கில் குறித் துக் கொண்டு "ஸ்டாக் இல்லை. ரெண்டு நாள் கழிச்சு வாங்க. கட்டாயம் வாங்கி வைக்கிறேன்" என்கிறார் கடைக்காரர். சான டோரியத்தில், "இதை எந்த டாக்டர் எழுதிக் கொடுத்தாரோ, அதுக்குப் பக்கத்து மெடிக் கல் ஷாப்ல கேளுங்க கிடைக்கும்" என்கிறார் ஒருவர்.

சென்னை புரசைவாக்கம், கீழ்ப்பாக்கம் பகுதிகளில், டாக்டரின் பிரிஸ்கிருப்ஷன் இல்லாமல் எளிதாக எந்த மருந்துக் கடையி லும் வாங்கலாம் என்கிறார் ஒரு மருந்துக் கடைக்காரர்.

"பெரும்பாலும், மனவளர்ச்சி, ஞாபக சக்தியை அதிகப்படுத்த வேண்டும் போன்ற காரணங்களுக்குத்தான் பெற்றோர்கள் இதைத் தங்கள் குழந்தைகளுக்குக் கொடுக்கறாங்க" என்கிறார் பல்லாவரத்தைச் சேர்ந்த டாக்டர் ஜி.ஆர். ரவீந்திரநாத்.

''ஒரு குழந்தையோட மனவளர்ச்சி குறைவா இருக்கறதுக்குப் பல காரணங்கள் இருக்கு. குழந்தைக்குக் கண்பார்வை சரியாத் தெரியாம இருக்கலாம், காது சரியாகக் கேட் காம இருக்கலாம், அதுனால கூட குழந்தை யோட மனவளர்ச்சி பாதிக்கும். அதை சரியா கண்டு பிடிக்காம இந்த வகை மாத்திரைகளைக் கொடுத்தால், குழந்தை

---

**''மார்க் வந்து ரெண்டு நாள் ஆயிடிச்சு, உங்க பையனைக் கேட்டா மார்க் வர லைன்னு சொல்றானே...?''**

**''அவனுக்கு சுத்தமா மார்க் எதுலேயும் வரலை சார், எல்லா சப்ஜெக்ட்லேயும் முட்டை வாங்கியிருக்கான்!''**

**– சீர்காழி வி. ரேவதி**





யோட நிலைமை இன்னும் மோசமாகும்.

"மூளைச் சோர்வு இல்லாமல் இருக்கற துக்குப் பொழுதுபோக்கு ரொம்ப அவசியம். இப்போ எந்தக் குழந்தைக்கும் அதோட விளையாட்டு நேரத்தை அதுக்கு நாம கொடுக்கறதில்லை. இரண்டரை வயசுலயே ப்ரீகேஜில சேத்துடறோம். ரஷ்யா போன்ற நாடுகளில் ஆறு வயசுலதான் ஸ்கூலுக்கு அனுப்பறாங்க. 'அவன் எப்படிப் படிக் கிறான் பாரு. நீயும் இருக்கியே'ன்னு இன்னொரு குழந்தையோடு நம்ம குழந்தையை ஒப்பிட்டுப் பேசறது கூட குழந்தையின் மன வளர்ச்சியை பாதிக்கும். ஒவ்வொரு குழந் தைக்கும் ஒரு தனித் திறமை இருக்கும். அது என்னன்னு கண்டு பிடிச்சு குழந்தையை உற்சாகப்படுத்தணும். சின்ன வயசுல சாதா ரணமாக இருந்த ஐன்ஸ்டீன்தான், பின்னாடி மிகப் பெரிய விஞ்ஞானியானார்.

"நம்மோட கல்வி முறையே முதல்ல தப்பு. ஒரு மாணவனின் ஞாபகசக்தியை சோதிக்கிற சாதாரண சிஸ்டம்தான் நம்ப கல்வி முறை. இதுல ஒரு மாணவனின் புத்தி சாலித்தனம், சிந்தனைத்திறன், ஆக்கத்திறன் இதையெல்லாம் பரிசோதிக்கறது கிடை யாது. நம்ம கல்வி முறைல மாற்றம் வேண் டும். அவனை மாத்திரை சாப்பிடச் சொல்லி, ஞாபகம் வச்சுக்கச் சொல்லி டார்ச்சர் பண்றதால இன்னும் குழம்பித் தான் போவான்.

"ஒரு குழந்தையின் வளர்ச்சில பெற் றோர், ஆசிரியர், சமூகம் எல்லாருக்கும் முக்கியமான பங்கு இருக்கு. மாணவன் ஆசிரியர் உறவுமுறை நல்லா இருந்தாதான், ஒரு மாணவனின் மனவளர்ச்சியும் நல்லா இருக்கும். அதுக்கு ஆசிரியருக்கான மனோவியல் பயிற்சி ரொம்ப அவசியம். ஒரே கிளாஸ்ல அறுபது, எழுபது மாண வர்கள், ஆசிரியர் பற்றாக்குறை இதெல்லாம் கூடக் குழந்தையின் வளர்ச்சியை பாதிக்கும்.

"எல்லாத்துக்கும் மேல ஞாபக சக்தியை அதிகப்படுத்த பல வழிகள் இருக்கு. ஞாபக சக்தியை அதிகப்படுத்த சத்தான ஆகாரங் கள், இரும்புச் சத்து நிறைந்த வல்லாரை, பேரீச்சம், முருங்கைக்கீரை, வெல்லம், கருப் பட்டி போன்றவற்றை உணவில் அதிகம் சேர்த்துகிட்டாலே போதும்" என்கிறார் டாக்டர் ரவீந்திரநாதன்.

சென்னை பல்கலைக் கழகத்தில் எம்.சி.ஏ. படிக்கும் மாணவர் ரவிநாரா யணன்,"நான் எம்.காம். படிக்கும்போது நண்பர்கள் எல்லாரும் ஒண்ணா சேர்ந்து 'குரூப் ஸ்டடி' பண்ணுவோம். அப்போ டேவிட்னு ஒரு ஃபிரெண்டு பி காம்ப்ளக்ஸ் மாத்திரைன்னு சொல்லி ஒரு மாத்திரை கொடுத்தான். நானும் போட்டுகிட்டேன். அதை சாப்டப்புறம் தூக்கமே வரலை. நைட்டு பூரா படிச்சோம். ஆனா, மறுநாள் பரீட்சைல ஒரு பார்முலா கூட ஞாபகம் வரலை. அந்தப் பரீட்சைல நான் பெயிலா யிட்டேன். அதுக்கப்புறம் எங்க செட்ல யாரும் மாத்திரை போட்டுக்கிறதில்லை" என்கிறார்.

ரவிநாராயணன் மாதிரி ஏகப்பட்ட மாணவர்கள். அந்த மாத்திரையின் அபாயம் தெரியாமலேயே, அந்தப் பழக்கத்தை ஏற் படுத்திக் கொண்டு மீள முடியாமல் தவிப் பவர்கள்தான் அதிகம்.

நம் நாட்டில் கல்லூரி மாணவர்கள் மத்தியில் ஏற்கெனவே பரவியிருக்கும் போதைப் பழக்கத்தை நிறுத்தப் போராடி வரும் தன்னார்வத் தொண்டு நிறுவனங் களுக்கும், அரசாங்கத்துக்கும் இது ஒரு புதிய தலைவலி. இந்த 'பார்த்தீனிய விஷச் செடியை' முளையிலேயே கிள்ளி எறிவது மாணவர்கள் கையில்தான் இருக்கிறது!

**— கே. பாலசுப்ரமணியன்**

படங்கள்: **எம். சண்முகம்**

---

**"'இண்டர்வியூ' சுத்த கண்துடைப்பு. வேலையை ஏற்கெனவே யாருக்கோ கொடுத்துட்டாங்கன்னு எப்படிச் சொல்றே?"**

**"பின்னே! போன வருஷத்திலே 'ஜெயலலிதா அறிக்கை வராத இரண்டு நாள் எது?'ன்னு கேள்வி கேட்கிறாங்க!"**

– ப்ரியா

# வைக்கம் முகம்மது பஷீர்

தமிழில்: **வையவன்**

**வ**ழியில் வைத்தே தேவியின் கடிதத்தை நான் வாசித்தேன். வேதனையும் மகிழ்ச்சியும் தோன்றின. குழம்பிப் போய் நான் அவள் பின்னே சென்றேன். ஓடினேன். வண்டி தூரத்தில் சென்று கொண்டிருந்தது.

நான் குறுக்கு வழியில் வேகமாய் நடந்தேன்.

நான் சென்றபோது தேவி கல்லூரியில் இருந்து இரும்பி வந்து கொண்டிருந்தாள்.

என்னைக் கண்டோ என்னவோ?

நானும் ஒரு வண்டி பிடித்து, வண்டிக் காரனை வேகமாய் ஓட்டச் சொன்னேன். தேவியின் சமீபத்திற்கு நான் உட்கார்ந்து இருந்த வண்டி நெருங்கியது.

"ஷாஹ்ஸாதி!"(இளவரசி) என்று நான் அவளை அழைத்தேன். கேட்டதோ என்னவோ!

என் வண்டி முன்னால் நகர்ந்தது. புன்னகையோடு திரும்பிப் பார்த்து நான் உரக்கச் சொன்னேன்.

"ஐ லவ் யூ."

நான் வண்டியை நிறுத்தினேன்.

"போய் விடுங்கள்" தேவி சொன்னாள். "கடிதம் அனுப்பாதீர்கள். காலேஜுக்கு வராதீர்கள்."

"நான் வீட்டிற்கு வருவேன். எனக்கு உன்னைப் பார்க்க வேண்டும்."

"வேண்டாம்!"

"எனக்குப் பேச வேண்டும்."

நிசப்தம்.

வண்டி நின்றது.

"நான் போகிறேன்" என்றேன்.

தேவியின் கடிதத்தை என் இருப்பிடத்திற்குப் போய் நூறுமுறை வாசித்தேன். ஆனந்தம் தோன்றியது. கூடவே நிறையத் தைரியமும்.

நான் சிரித்துக் கொண்டேன்.

இரண்டு நாட்கள் உண்டல்லவா பதில் எழுத!

தேவி என்னை நேசிக்கிறாள். நான் தேவியையும்.

**நா**ன் பல கற்பனைகள் செய்தேன். நாங்கள் திருமணம் செய்து கொள்வது. எதிர்ப்புச் சூறாவளிகள் எழுவது. அவற்றை எல்லாம் ஜெயித்து நாங்கள் ஒன்றாக வாழ்வது.

நான் பதில் எழுதினேன். பகல் முழுவதும். இரவு வேறு ஒன்றை எழுதினேன். மிகவும் நீளமானது. புரட்சிகரமானது.

எல்லாவற்றையும் கிழித்து எரிந்துவிட்டு மீண்டும் ஒன்றை எழுதினேன்.

"பிரியமுள்ளவளே" என்று தொடங்கி, 'புரட்சிக்காரியான என் கண்மணியே' என்று உரிமை கொண்டாடிக் கொண்டு ஒரு நீளமான கடிதம். கையெழுத்திட்டு முடித்தேன்.



இரவு அதை நல்ல முறையில் ஒரு பிரதி எடுத்துக் கொண்டிருக்கும்போது மனசில் ஒரு கலக்கம்.

உண்மையிலேயே தேவி என்னை நேசிக்கிறாளா? தேவிக்குப் பல பேர் பரிச்சயம் உண்டல்லவா? அவர்களில் காதலர்களும் இருக்க மாட்டார்களா? நிறையக் கடிதங்கள் இட்டுகின்ற ஒரு பெண்.

நான் தேவியுடைய கடிதத்தை மீண்டும் வாசித்தேன். வார்த்தைகள் சத்தியங்கள் தானா? அவற்றின் பின்னால் இதயம் உள்ளதா?

"என்னைப் பார்க்க வேண்டாம். எனக்குக் கடிதம் எழுத வேண்டாம்" என்ன அர்த்தம்?

"எனக்கு மட்டுமே உரிய பஷீர்."

இதற்கு நிறைய அர்த்தம் உண்டோ?

"தங்களுடைய மார்பில் சந்தோஷமாக, பூரண நேசத்துடன் நான் தலை சாய்த்திருப்பேன். ஆனால் தாங்கள் ஒரு முஸ்லீம்!"

இவ்வளவு மட்டும்தானா வேற்றுமை? இவை எல்லாம் எப்போதோ சரஸ்வதி



தேவிக்குத் தெரிந்திருக்க வேண்டுமே!

நான் எழுதிய கடிதம் எல்லாவற்றிற்கு மான நீளமான ஒரு பதிலாய் இருந்தது.

''புரட்சிக்காரியான என் தேவீ வா. இந்துவுக்கோ கிறிஸ்தவனுக்கோ முகம்மதிய னுக்கோ பார்ஸிக்கோ யூதனுக்கோ, சீக்கிய னுக்கோ அருகில் அல்ல.

கலைஞனாகிய உன் ஆத்மத்தோழனுக்கு அருகில் வா...''

இப்படி இப்படி நிறைய சங்கதிகள். பிறகு ஒரு கலக்கம் தோன்றியது. அதை அனுப்பக் கூடாது என்று ஓர் உள்ளுணர்வு. மனசில் ஏதோ குழப்பம். மயக்கமூட்டும் எதையோ உண்டது போலக் கடிதத்தை ஓரத்தில் வைத்து விட்டுப் படுத்தேன்.

இரண்டு மணி ஆயிருக்கும்.

தேவியை முதன்முதலாக நான் பார்த்தது முதல் தொடங்கிய நிகழ்ச்சிகளை எல்லாம் வரிசையாக நினைவு கூர்ந்தேன். எல்லாவற் றையும். நாளைக்கு வெறுங்கையோடு போக வேண்டும். சந்தித்துக் கேட்க வேண்டும்.

''சத்தியமாக நீ என்னை நேசிக்கிறாயா?''

அப்படியே யோசித்தவாறு படுத்திருந் தேன். சற்றுக் கழித்து நான் தூங்கி இருக்க வேண்டும். காலை ஏழு மணிக்கு நான் விழித்தேன்.

**உ**யிர்க்களை ஊட்டும் ஒரு கனவின் ஞாபகத் தோடு. ஒன்றல்ல. இரண்டு கனவுகள். ஒன்றைத் தொடர்ந்து ஒன்று.

முதலாவது ஒரு வெள்ளை நரி. (பெண் என்று தோன்றுகிறது) நான் அதை ஒரு கெட்டியான வெள் ளைக் கயிற்றில் கட்டிப் பிடித்திருக் கிறேன்.

கயிறு அதன் கழுத்தில். நான் அந் தக் கயிற்றைத் தூக்கி நிலத்தில் வீசுகிறேன்.

17

பலமுறை. கொல்லவில்லை. ஒரு லயம் தவறாமல் வீசுகிறேன்.

அதற்கு அடுத்த கனவு–

மிகவும் இளமை தொட்டு என்னிடம் மிகவும் நேசம் காட்டியவளும் என் ஆழ் மனசில் நேசம் மலரச் செய்தவளுமாகிய ஒரு பெண். பதினைந்து வயது இருக்கும். பேபி.

அவள் என்னை ஆவேசத்தோடு கட்டிப் பிடித்து என் உதடுகளில் முத்தமிட்டாள்.

இந்த ஞாபகங்களோடு நான் விழித்தேன். அப்போது அதற்கு முந்தைய கனவுகளை நினைத்துப் பார்த்தேன். (மூன்று நான்கு நாட்களுக்கு முன்பு என்னை ஒரு நாகப் பாம்பு கொத்தியதாகக் கனவு கண்டிருந் தேன். விஷம் உடனே ஏறுமென்று நினைத் துக் கொண்டேதான் படுத்திருந்தேன்.)

சரஸ்வதி தேவி.

நரி.

பேபியின் முத்தம்.

இதற்கெல்லாம் ஓர் அர்த்தம் உண்டா?

நான் மனக் கலக்கத்தோடு டாய்லெட் டுக்குப் போனேன். குளித்தேன். ஷேவ் செய் தேன். டீ குடித்தேன். வெளுத்த உடை அணிந்தேன். தேவி வரும் வழியில் சென்று நிற்க முடிவு செய்தேன்.

அப்போது தோன்றியது. ஒரு சிறிய குறிப்பு மட்டும் கொடுக்க வேண்டும். நீள மான கடிதத்தில் இருந்து அதை நான் பிரதி எடுத்தேன். அதை ஒரு கவரில் போட்டு கவருக்குப் பின்னால் எழுதினேன் ஆங்கிலத் தில்.

"டு மை க்வீன்."

கடிதத்தோடு நான் சென்றேன். இரண்டு மூன்று பெண்களோடு சரஸ்வதி தேவி வந்து கொண்டிருந்தாள். முழுக்கக் கறுப்பு உடை. என்னைப் பார்த்ததும் ஒரு நடுக்கம். முகம் முழுவதும் வெளுத்துப் பின் கறுத்தது.

மயங்கி விழப் போவது போல ஒரு பலவீனத் தோற்றம். புத்தகத்தைப் பிடித் திருந்த கையாலும் கண்ணாலும் என்னை விலக்குவது போலச் சைகை செய்தாள்.

பயம் எதற்கு? என்னைக் கண்டு பயப்பட வேண்டாம்.

நான் கூப்பிட்டேன்.

"தேவி."

நின்றாள். மற்றவர்களும்.

"லீவ் எடுக்க வேண்டாம்."

கடிதத்தை 'சிந்தனைப் புரட்சி' என்ற புத்தகத்தினுள் வைத்து நான் கொடுத்தேன்.

"உள்ளே ஒரு லெட்டர் இருக்கு. கவனம்."

தேவி நடந்தாள். மற்றவர்களுக்கு உணர்த்துவது போல வரண்ட தொனியில் "சிந்தனைப் புரட்சி" என்று சொன்னபடியே நடந்தாள்.

தேவி எதற்குப் பயப்படுகிறாள்?

பார்த்துப் பேச வேண்டும்.

பயம் தீர்க்க வேண்டும்.

நான் சென்றேன். வண்டி பிடித்து.

அரசினர் உயர்நிலைப் பள்ளி வாசலில் நின்றேன். தேவி உள்ளே இருந்தாள். என் னைப் பார்த்திருப்பாளோ என்னவோ?

அங்கேயே நின்றேன். வரவில்லை. போய் விட்டிருக்க வேண்டும். நான் அங்கிருந்து ஜெம்பி வீட்டிற்குப் போகலாம். நான் முடிவு செய்தேன். பாங்கிற்குப் போய் ஐந்நூறு ரூபாய் எடுத்தேன்.

ஒரு புதிய ஷூஸ் வாங்கினேன்.

இன்னொரு கடிதம் அனுப்பலாமா?

''பயப்படாதே. சந்தோஷமாய் இரு'' என்று? வேண்டாம்.

ஏற்கெனவே நான் தேவிக்குக் கொடுத் திருந்த கடிதம் இதுவே:

எனக்கு மட்டுமே உரிய சரஸ்வதி தேவி.

நாம் பரஸ்பரம் நேசிக்கிறோம். ஒருவரை ஒருவர் நேசிக்கிறோம்.

இறுதிவரை நாம் ஒன்று கூடிச் செல்ல வேண்டும்.

வா. என் மார்பில் தலை சாய்த்துக் கொள்.

நான் ஒரு கலைஞன். நான் என் காதலி யைக் கட்டிப் பிடித்து முத்தமிடுவேன். அந்த உதடுகளில், அந்தக் கண்களில், அந்தத் தலை உச்சியில், அந்தக் கழுத்தில்... தேவி வா... என் இணையே வா... புதிய உலகம் சிருஷ்டிப் பதற்காக புரட்சிக் கீதமாக நீ வா...

பிரியமானவளே வா,

நான் காத்திருக்கிறேன்.

உனக்கு மட்டுமே உரிய பஷீர்.

தன்னைப் பார்க்க வேண்டாம் என்று அவள் அறிவித்திருந்தபோதிலும் அவளைப் பார்க்க நான் நான்கு மணிக்குக் கல்லூரி வாசலுக்குச் சென்றேன். பக்கத்தில் இருந்த ஹோட்டலில் நுழைந்தேன். உட்கார்ந்து இரண்டு மூன்று காப்பி குடித்தேன்.

"தேவி, லீவ் எடுத்துக் கொண்டு எங்கும் போக வேண்டாம். கவலைப்படாதே. கலங் காதே. சந்தோஷமாய்ப்படி. பாஸாகு. நான் போகிறேன்" என்று சொல்லி சமாதானம் செய்விக்கத்தான் காத்திருந்தேன்.

வெகு நேரம் காத்திருந்தும் தேவி வெளியே வரவில்லை. என்னைக் கண்டோ

என்னமோ.

கிரவுண்டில் சில பெண்கள் பாட்மிண்டன் விளையாடிக் கொண்டிருந்தனர். மதில் சுவர் இருந்ததால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. அவர்கள் அருகே எங்காவது இருப்பாள்.

நான் காத்திருந்தேன். மனசில் சொல்ல முடியாத வேதனை. வெறுப்பு. கசப்பு. தேவியே எனக்குக் கசந்து விட்டாள்.

முத்தமிட வேண்டும் என்றோ, கட்டிப் பிடிக்க வேண்டும் என்றோ இருந்த ஆவல் போய் விட்டது. ஒவ்வொரு மயிர்க்கால்களிலும் வெறுப்பு. ஒட்டு மொத்த வெறுப்பு.

பார்க்கவும் சமாதானம் செய்யவும் இருந்த ஆவல் போய்விட்டது. திடீரென்று ஒன்று தோன்றியது.

நான் பயங்கர விஷமுள்ளதும், மிகவும் அழகுள்ளதுமான ஒரு நாகப்பாம்பு.

வெள்ளை நிறமும் சௌந்தரியமும் உள்ள ஒரு பெண் நரியின் கழுத்தில் சட்டென்று நான் சுற்றியதாகவும், நரி ஒரு நிமிஷம் வேதனைப்பட்டு சாவை நெருங்கிற்று.

எனினும் ஒரு நொடியில் 'நான் நேசிக்கின்ற ஒன்று அல்லவா இது' என்ற ஞாபகம் வேகமாய் வரவும் அந்த வேதனையை நரி ஏற்றுக் கொண்டதாக எனக்குத் தோன்றிற்று.

நானாகிய நாகம் தேவியாகிய நரியின் கழுத்தில் சுற்றிக் கொண்டு, படம் உயர்த்திச் சுற்றிலும் உலகத்தைப் பார்க்கிறேன்.

இந்த நினைவு எனக்கு மிகவும் சக்தி அளித்தது. சக்தி!

உக்ரமும் உறுதியும் வாய்ந்த சக்தி.

நான் புறப்பட்டேன்.

சற்றுத் தொலைவில் மரங்களுக்கு மேலே திருவாங்கூர் மகாராஜாவின் கொடி காற்றில் வீரத்தோடு பறப்பதைக் கண்டேன்.

ஏனோ அது என் வெற்றிக் கொடியென்று தோன்றியது.

இனி தேவியைக் காணப் போவதில்லை. எல்லாம் முடிந்து விட்டது. எல்லாம்.

ஆனால் திரும்பி வந்ததுமே தேவியின் கட்டுரை பிரஸ்ஸில் இருந்து கிட்டியது. ''ஆழ் மனமும் மனித வாழ்க்கையும்'' என்பது தலைப்பு.

கட்டுரை நன்றாக இல்லை.

ஆழ்மனத்தைப் பற்றி தேவிக்கு என்ன தெரியும்?

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

## இருபத்தொன்றாம் அத்தியாயம்

## 'நீயும் ஒரு தாயா?'

சிவ பக்தியே உருவெடுத்தாற் போல் விளங்கிய மாதரசி செம்பியன் மாதேவி தொடர்ந்து கூறினார்:-

''மகனே! உன் தந்தை கண்டராதித்த தேவர் சிம்மாசனம் ஏறிய பொழுது சோழ ராஜ்யத்தில் ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டிருந்தது. உன் பாட்டனார் பராந்தகச் சக்கரவர்த்தியின் பெருமையை நீ அறிந்திருக்கிறாய். அவருடைய ஆட்சிக் காலத்தில் சோழ ராஜ்யம் தெற்கே ஈழநாடு வரையிலும் வடக்கே கிருஷ்ணை நதி வரையிலும் பரவியது. ஆனால் அவருடைய அந்திமக் காலத்தில் இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பல விபத்துக்கள் ஏற்பட்டன. இராவணேசுவரனுடைய மூல பல சைன்யத்தைப் போல் இரட்டை மண்டலத்துப் படைகள் படை எடுத்து வந்தன. பராந்தகச் சக்கரவர்த்தியின் மூத்த புதல்வரும் ஒப்புவமையில்லாத வீராதி வீரரும் உன் பெரிய தகப்பனாருமான இராஜாதித்த தேவர் இரட்டை மண்டலத்து மாபெரும் சைன்யத்தை எதிர்க்கப் புறப்பட்டார். வடக்கே தக்கோலம் என்னுமிடத்தில் குருக்ஷேத்திர யுத்தத்தைப் போன்ற மாபெரும் போர் நடந்தது. லட்சக்கணக்கான வீரர்கள் மாண்டனர். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. இரட்டை மண்டலத்தாரின் சைன்யம் சிதறி ஓடியது. ஆனால் அந்தப் போரில் இராஜாதித்த தேவர் பலியாகி விட்டார். உன்னுடைய சித்தப்பா அரிஞ்சய தேவரும் அந்தப் போரில் ஈடுபட்டுப் படுகாயம் அடைந்தார்.




அமரர் கல்கி



ஆனால் அவரைப் பற்றி யாதொரு விவரமும் அப்போது தெரியவில்லை. அரிஞ்சய தேவரின் மூத்த புதல்வர் சுந்தர சோழர், சின்னஞ்சிறு பிராயத்துப் பிள்ளை – ஈழத்துப் போருக்குச் சென்றிருந்தார். அவரைப் பற்றியும் செய்தி கிட்டவில்லை. இராஜ குலத்தில் பிறந்து, அச்சமயம் தஞ்சை அரண்மனையில் பராந்தகச் சக்கரவர்த்தியின் அருகில் இருந்தவர் உன் தந்தைதான்.

ஆனால் உன் தந்தையோ இளம் பிராயத்திலேயே இராஜ்ய விவகாரங்களை வெறுத்துச் சிவபெருமானிடம் மனத்தைச் செலுத்தி வந்தவர். அவருக்கு யுத்தம் என்றாலே பிடிப்பதில்லை. மன்னர்களின் மண்ணாசை காரணமாக மக்கள் போரிட்டு மடிவானேன் என்று அவர் வருந்தினார். தந்தையிடமும் சகோதரர்களிடமும் அதைக் குறித்து வாதித்தார். சிவஞானச் செல்வர்களான பெரியோர்களின் சகவாசத்திலும் புண்ணிய ஸ்தல யாத்திரையிலும் ஆலய வழிபாட்டிலும் காலத்தைச் செலவிட்டார். வாள், வேல் முதலிய ஆயுதங்களைக் கையினால் தொடவும் அவர் விரும்புவதில்லை. யுத்த தந்திரங்களிலும் போர்முறைகளிலும் அவர் பயிற்சி பெறவில்லை. பொய்யும் புனை சுருட்டும் வஞ்சகமும் வேஷமும் சூழ்ச்சிகளும் மறு சூழ்ச்சிகளும் கொலை முதலிய பாதகங்களும் நிறைந்தது இராஜரீகம் என்று அவர் நம்பினார். 'திருடன் பிறர் பொருளைத் திருடுவதற்கும் ஒரு நாட்டு அரசன் இன்னொரு நாட்டைக் கவர்வதற்கும் என்ன வித்தியாசம்?' என்று அவர் கேட்டார்.

மகனே! விதி வசத்தால் அப்படிப்பட்ட கொள்கையுடைய உன் தந்தை இந்தச் சோழ நாட்டின் பாரத்தை வகிக்கும்படியாக நேர்ந்துவிட்டது.

பராந்தகச் சக்கரவர்த்தி இராஜ்யத்துக்கு நேர்ந்த பல விபத்துக்களினாலும் இராஜாதித்தரின் மரணத்தினாலும் மனம் நொந்து மரணத்தை எதிர்பார்த்திருக்கும் வேளையில் உன் தந்தையை அழைத்து, 'இராஜ்ய பாரத்தை நீதான் ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்றார். உன் தந்தை மரணத் தறுவாயிலிருந்த உன் பாட்டனாரின் மனத்தை மேலும் புண்படுத்த விரும்பாமல் ஒப்புக்கொண்டார். உன் தந்தையை எனக்கு முன்னால் மணந்திருந்த பாக்கியவதியான வீர நாராயணி தேவி அதற்கு முன்னரே சிவபதம் அடைந்து விட்டார். நானோ அப்போது உன் தந்தையைப் பார்த்ததேயில்லை. ஆகையால், உன் தந்தையின் காலத்துக்குப் பிற்பாடு சோழ மகா ராஜ்ஜியம் என்ன ஆவது என்ற கவலை உன் பாட்டனாருக்கு ஏற்பட்டது.

அதிர்ஷ்டவசமாக அச்சமயத்தில் உன் சிறிய தந்தையின் குமாரரைத் தேடுவதற்காக ஈழத்திற்குப் போனவர்கள், அங்கே ஒரு தீவிலிருந்த சுந்தர சோழரைக் கண்டுபிடித்து அவரை அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

பராந்தகச் சக்கரவர்த்தி சுந்தர சோழரிடம் அளவிலாத பிரியம் வைத்திருந்தார். பேரப் பிள்ளையைக் கைக் குழந்தையாயிருந்த நாளிலிருந்து மடியில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். பெரியோர்கள் பலர் சுந்தர சோழரின் மூலமாய்ச் சோழ குலம் மகோந்நதம் அடையப் போகிறது என்று சொல்லியிருந்தார்கள்.

இத்தகைய காரணங்களினால் உன் பாட்டனாருக்குச் சுந்தர சோழர் மீது அபாரமான பிரேமை. ஆகையால் உன் தந்தை சிம்மாசனம் ஏறும்போது சுந்தரசோழருக்கு இளவரசுப்



பட்டம் கட்டி விட வேண்டும் என்றும், அவருடைய சந்ததியர்கள்தான் சோழ நாட்டை ஆண்டு வர வேண்டும் என்றும் சொல்லிவிட்டுச் சிவபதம் அடைந்தார்.

இந்த விவரங்களையெல்லாம் உன் தந்தை என்னிடம் கூறினார். பராந்தகச் சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் வெளியிட்ட விருப்பத்தை நிறைவேற்ற அவர் உறுதி கொண்டிருந்தார். சுந்தர சோழரும் அவருடைய சந்ததியாரும் பட்டத்துக்கு வருவதில் எவ்வித இடையூறும் நேரிடக் கூடாதென்று எண்ணினார். உன் தந்தைக்கு இராஜ்ஜியம் ஆளும் ஆசை இல்லை; இராஜரீகக் காரியங்களில் பற்றுதலும் இல்லை. அவர் புண்ணிய புருஷர். அவருடைய உள்ளம் சதா சர்வ காலமும் நடராஜப் பெருமானின் இணையடித் தாமரைகளில் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. ஆகவே தமது தம்பியாகிய அரிஞ்சயரிடமும் அவருடைய புதல்வர் சுந்தர சோழரிடமும் இராஜ்ய காரியங்கள் முழுவதையும் ஒப்படைத்திருந்தார். தாம் சிவபெருமானுடைய கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்தார். முன்னமே சொன்னேனே, அது போல் அவருக்கு மறுபடியும் மணம் செய்து கொள்ளும் எண்ணமே இருக்கவில்லை. ஆனால் அவருடைய மன உறுதியைக் கலைக்க நான் ஒருத்தி வந்து சேர்ந்தேன். நானும் சிவபக்தியில் ஈடுபட்ட 'பிச்சி' என்று அறிந்ததினாலேயே அவர் என் மீது பிரியங் கொண்டு என்னைத் திருமணம் புரிந்தார். அவரைப் பதியாக அடைந்த நான் பாக்கியசாலி. எத்தனையோ ஜன்மங்களில் அவரை அடைய நான் தவம் செய்திருக்க வேண்டும். இவரைத் தந்தையாகப் பெற்ற நீயும் பாக்கியசாலி. இந்த உலகில் இறைவனைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த மகான்கள் வெகு சிலர்தான். சிவபெருமான் ரிஷபாரூடராய் வந்து உன் தந்தைக்குக் காட்சி தந்து அவரை இம் மண்ணுலகிலிருந்து அழைத்துப் போனார். நான் இப்போது உன்னை என் ஊனக் கண்களால் பார்ப்பது போல உன் தந்தை பரமசிவனைத் தரிசித்தார். அப்படிப்பட்ட புண்ணிய புருஷருடைய விருப்பத்தை நிறைவேற்ற நானும் நீயும் கடமைப்பட்டவர்கள்...!"

அன்னை இவ்விதம் கூறி நிறுத்தியபோது, கேட்டுக் கொண்டிருந்த மகனுடைய உடல் பதறிக்கொண்டிருந்தது; அவனுடைய உள்ளம் கொதித்துக்கொண்டிருந்தது.

"அது எப்படி, தாயே! என் தந்தை என்னிடம் ஒன்றும் தெரிவிக்கவில்லையே? நான் என்ன கடமைப்பட்டிருக்கிறேன்? எந்த விதத்தில் கடமைப்பட்டிருக்கிறேன்?" என்றான் மதுராந்தகன்.

"மகனே! கேள்! உன் தந்தை சிவபெருமானுடைய பாத மலர்களை அடைந்தபோது நீ சின்னஞ்சிறு பிள்ளை. ஆகையால், உன்னிடம் அவர் ஒன்றும் தெரியப்படுத்த முடியவில்லை. ஆனால் என்னிடம் சொல்லி விட்டுப் போனார். நாங்கள் மணம் புரிந்த புதிதில் மக்கள் பேற்றை விரும்புவதில்லையென்று முடிவு செய்திருந்தோம். ஆனால் பேதையாகிய என்னால் அந்த மன உறுதியை நிறைவேற்ற முடியவில்லை. கன்னிப் பருவத்தில் சிவபெருமானிடம் நான் கொண்டிருந்த பக்தி உன் தந்தையிடம் கொண்ட பிரேமையாக மாறியது. நாளடைவில், என் கையில் ஏந்தி மார்போடு அணைத்து மடியில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டிக் கொஞ்சுவதற்குக் குழந்தை வேண்டும் என்று என் இருதயம் தாபம்கொண்டது. மற்றப் பெண்களின் கையிலும் மடியிலும் குழந்தையைக் கண்டால் என் உடம்பெல்லாம் துடித்தது; உள்ளம் பற்றி எரிந்தது. குழந்தைப் பருவத்தில் என்னை ஆட்கொண்ட இறைவனிடம் வரம் கோரினேன். இறைவனும் இந்தப் பேதையின் கோரிக்கையை நிறைவேற்றினார். உன்னை எனக்கு அளித்தார். ஒரு பக்கத்தில் உன்னைப் பெற்றதினால் நான் உள்ளமும் உடலும் பூரித்தேன்; மற்றொரு பக்கத்தில் உன் தந்தையின் கோபத்துக்கு ஆளாகி விட்டேனோ என்று பயந்தேன். அந்த மகா புருஷர் என் மீது கோபிக்கவில்லை. ஆனால் அவருடைய வாக்கை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பை மட்டும் என் மீது சுமத்தி விட்டுப் போனார்.

"மகனே! உன்னை இந்த மண்ணுலக வாழ்க்கையில் பற்றுதல் கொள்ளாமல் சிவ பக்த சிகாமணியாகும்படி வளர்ப்பேன் என்று உன் தந்தைக்கு வாக்குக் கொடுத்தேன். அதை நிறைவேற்றி விட்டதாகவே சில காலத்துக்கு முன்பு வரையில் எண்ணி இறுமாந்திருந்தேன்.

ஆனால், என் உயிர்க்குயிரான மகனே! என் கண்ணுக்குக் கண்ணான செல்வப் புதல்வனே! சில நாளாக நான் ஏதேதோ கேள்விப்படுகிறேன். அப்படிப்பட்ட பேச்சைக் கேட்கும்போதெல்லாம் என் நெஞ்சு புண்ணாகிறது. நான் கேள்விப்படுவதெல்லாம் பொய் யென்று நீ உறுதி சொல்லி என் நெஞ்சில் உள்ள புண்ணை ஆற்ற மாட்டாயா?" என்று

அன்னை செம்பியன்மாதேவி கெஞ்சினாள்.

"தாயே! தங்களுடைய மர்மமான வார்த்தைகள் என்னுடைய நெஞ்சையும் புண்ணாக்குகின்றன. தாங்கள் என்ன கேள்விப்படுகிறீர்கள்? என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? என்னிடம் என்ன உறுதி கேட்கிறீர்கள்!" என்று மதுராந்தகன் சீறினான்.

"குழந்தாய்! என் மனத்திலுள்ளதை அறிந்து கொள்ளும் சக்தியை நீ இழந்து விட்டாய் போலும். வெளியிட்டுச் சொல்லத்தான் வேண்டும் என்கிறாய். நல்லது, சொல்லுகிறேன். உன் மனம் சிவபக்தியாகிற கங்கை நதியிலிருந்து மண்ணாசையாகிய குட்டையில் விழுந்துவிட்டது என்று கேள்விப்படுகிறேன். சோழ குலத்துச் சிம்மாசனத்தில் ஏற நீ ஆசை கொண்டிருக்கிறாய் என்று கேள்விப்படுகிறேன். உன் புனிதமான உள்ளத்தை நம் விரோதிகள் அவ்விதம் கெடுத்து விட்டார்கள் என்று அறிகிறேன். நான் இவ்வாறு கேள்விப்பட்டது உண்மையல்ல என்று நீ கூறினால், என் மனம் நிம்மதி அடையும்!" என்றாள் மூதாட்டி.

மதுராந்தகன் இதுவரை உட்கார்ந்திருந்த பீடத்திலிருந்து எழுந்து நின்றான். அவனுடைய படபடப்பைப் பார்த்துத் தாயும் எழுந்தாள்.

"என்னுடைய மனத்தை விரோதிகள் யாரும் கெடுக்கவில்லை. என்னைச் சிம்மாசனம் ஏற்ற விரும்புகிறவர்கள் என் விரோதிகளா? எனக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்க முன் வந்திருப்பவர்கள் என் விரோதிகளா? ஒருநாளும் இல்லை. உண்மையில் என் ஜன்ம விரோதி யார்? என்னைப் பெற்றவளாகிய நீதான்...!" என்று மதுராந்தகன் கூவினான்.

அத்திர மிகுதியால் அச் சமயம் அவன் மரியாதையை மறந்தான்; சின்னப் பழுவேட்டரையர் நல்ல வார்த்தைகளினால் அன்னையின் மனத்தை மாற்றும்படி சொல்லியிருந்ததை மறந்து வசைமாரி பொழிந்தான்.

"ஆம்; நீதான் என் ஜன்ம சத்துரு. வேறு யாரும் இல்லை. நீயும் ஒரு தாயா? நீயும் ஒரு ஸ்திரீயா? உலகத்தில் தாய்மார்கள் தங்கள் பிள்ளைகளின் உரிமைக்காகப் படாத பாடு படுவார்கள். கதைகளிலும் காவியங்களிலும் கேட்டிருக்கிறேன். வாழ்க்கையிலும் பார்த்திருக்கிறேன். அன்னையின் இயல்புக்கே மாறான இயல்புடைய நீ மானிட ஸ்திரீதானா? அல்லது மனிதப் பெண் உருக்கொண்ட அரக்கியா? நான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? நீ எதற்காக இந்தப் பெரும் துரோகத்தை எனக்குச் செய்கிறாய்? எல்லாவித நியாயங்களினாலும் எனக்குச் சேர வேண்டிய இராஜ்யத்தைப் பிடுங்கி இன்னொருவனுக்குக் கொடுப்பதில் உனக்கு என்ன சிரத்தை! என் தந்தையின் விருப்பம் என்று சொல்லுகிறாய். அவருக்கு நீ வாக்குக் கொடுத்ததாகச் சொல்லுகிறாய். அதற்கெல்லாம் அத்தாட்சி என்ன? நான் நம்பவில்லை. எனக்கு யாரோ துர்ப்போதனை செய்து விட்டதாகச் சொல்லுகிறாய். இல்லவே இல்லை. உனக்குத்தான் யாரோ துர்ப்போதனை செய்து உன் மனத்தைத்தான் கெடுத்து விட்டிருக்கிறார்கள். தாயை மகனுக்கு விரோதியாக்கியிருக்கிறார்கள். நியாயமாக எனக்கு உரிய சோழ சிங்காதனத்தை நான் ஒரு நாளும் கைவிட மாட்டேன். நீ சொன்னாலும் விட மாட்டேன். சிவபதம் அடைந்த என் தந்தையே திரும்பி வந்து சொன்னாலும் கேட்க மாட்டேன். இந்தச் சோழ சாம்ராஜ்யம் என்னுடையது; இந்தப் பழமையான சிங்காதனம் எனக்குரியது; கரிகால் பெருவளத்தான் அணிந்திருந்த மணிமகுடம் எனக்கு உரியது. அவற்றை நான் அடைந்தே தீருவேன். இதோ என் கழுத்தில் போட்டிருக்கும் உருத்திராட்ச மாலை, நீ எனக்கு அளித்தது; தாய் என்ற மரியாதைக்காக இத்தனை நாளும் அதைத் தரித்திருந்தேன்; என்னைப் பேடியாக்கி நாடு நகரமெல்லாம் நகைக்கும்படி செய்த இந்த ருத்திராட்ச மாலையை இதோ இந்தக் கணமே கழற்றி எறிகிறேன்; நீயே அதை வைத்துக்கொள்ளலாம்!"

இவ்விதம் பித்தம் பிடித்தவனைப் போல் பிதற்றிவிட்டு மதுராந்தகன் தன் கழுத்திலிருந்த ருத்திராட்ச மாலையை அவசரமாகக் கழற்ற முயன்றான்; கழற்ற முடியாமல் அதை அறுக்க முயன்றான்; ஆனால் கழுத்து நெறித்ததே தவிர மாலை அப்படியேயிருந்தது.

மதுராந்தகன் அழகிய தோற்றமுடையவன். சுந்தர சோழரின் புதல்வர்களைக் காட்டிலும் அழகன் என்று சொல்லலாம். அவர்களிடம் இல்லாத பெண் தன்மையின் வசீகரமான சாயல் அவன் முகத்தில் பொலிந்தது. அத்தகைய

களை பொருந்திய அவன் முகம் கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் இப்போது விகாரமடைந்து காட்டியது. அதைக் காணச் சகியாமல் செம்பியன்மாதேவி கண்களை மூடிக்கொண்டாள்.

அவன் சத்தமிட்டு ஓய்ந்த பிறகு தன் கண்களைத் திறந்து பார்த்தாள். குரலின் சாந்தத்தில் சிறிதும் மாறுதல் இல்லாமல், "மகனே, சற்று அமைதியாயிரு. நான் வஞ்சக அரக்கியாகவே இருந்தாலும், என் வார்த்தைகளைச் சற்று செவி சாய்த்துக் கேள்!" என்றாள்.

மதுராந்தகன் அந்தக் குரலைக் கேட்டுச் சிறிது அடங்கினான். "நன்றாய்க் கேட்கிறேன். கேட்க மாட்டேன் என்று மறுக்கவில்லையே!" என்றான்.

"தாயின் இயல்பைக் குறித்து நீ குறிப்பிட்டாய். பொல்லாத அரக்கியிருந்தாலும் தன் குழந்தைக்குத் துரோகம் செய்யமாட்டாள். துஷ்ட மிருகங்களும் தங்கள் குட்டிகளை மற்றத் துஷ்ட மிருகங்களிடமிருந்து காப்பாற்ற முயல்கின்றன. அது போலவேதான் நானும் உன்னைக் காப்பாற்ற முயல்கிறேன். நீ இராஜ்யத்துக்கு ஆசைப்பட வேண்டாம் என்று நான் சொல்லுவதற்கு முன்னே கூறியதைத் தவிர, வேறு காரணமும் இருக்கிறது. இராஜ்ய ஆசையினால் உன் உயிருக்கே ஆபத்து வரும். பெற்று வளர்த்த தாய் தன் மகன் உயிரோடிருக்க வேண்டும் என்று ஆசைப்படுவதில் குற்றம் உண்டா? நீ இராஜ்யத்துக்கு ஆசைப்பட்டால், சுந்தர சோழரின் புதல்வர்களுக்கு எதிரியாவாய். ஆதித்த கரிகாலனும் அருள்மொழிவர்மனும் வீராதி வீரர்கள். நீயோ ஆயுதம் எடுத்து அறியாதவன். சோழ நாட்டுச் சைன்யம் முழுவதும் சுந்தர சோழருடைய புதல்வர்களின் கட்சியிலேயே இருக்கும். படைத் தலைவர்களும் அவர்களுக்குச் சார்பாக இருப்



பார்கள். அக்கம்பக்கத்து நாடுகளிலும் அவர்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். உனக்குத் துணைவர்கள் யார்? யாரை நம்பி நீ அவர்களுடன் போர் தொடங்குவாய்? மகனே! சில நாளாக வானத்தில் தூமகேது தோன்றியிருப்பதை நீ அறிவாய். வால் நட்சத்திரம் வானில் தோன்றினால் அரச குலத்தினர் உயிருக்கு அபாயம் என்பது உலகம் கண்ட உண்மை. அப்படி நேரும் விபத்து உனக்கு நேராமலிருக்க வேண்டுமே என்றுதான் நான் கவலைப்படுகிறேன். குழந்தாய்! என் ஏக புதல்வன் உயிரோடிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுவது தவறா? அது உனக்கு நான் இழைக்கும் துரோகமா?"

இவ்வார்த்தைகளினால் மதுராந்தகனுடைய ஆத்திரம் சிறிது தணிந்தது. அவன் உள்ளம் கனிவடைந்தது.

''அன்னையே! மன்னியுங்கள்! தங்களுடைய கவலை இதுதான் என்று முன்னமே சொல்லியிருக்கலாமே? ஒரு நொடியில் தங்கள் கவலையைத் தீர்த்திருப்பேனே! நான் அப்படியொன்றும் துணைவர்கள் இல்லாத அநாதையல்ல. சோழ சாம்ராஜ்யத்தில் மிகச் செல்வாக்கு வாய்ந்த சிற்றரசர்களும் பெருந்தரத்து அதிகாரிகளும் என் பக்கம் இருக்கிறார்கள். பழுவேட்டரையர்கள் என் கட்சியில் இருக்கிறார்கள். கடம்பூர் சம்புவரையர் என் பக்கம் இருக்கிறார். தங்கள் சகோதரரும் என் மாமனுமான மழவரையரும் என் கட்சியில் இருக்கிறார். மற்றும் நீல தங்கரையரும், இரட்டைக் குடை இராஜாளியாரும், குன்றத்தூர்ப் பெருங்கிழாரும் தங்களுடைய பூரண பலத்துடன் என்னை ஆதரிக்கிறார்கள். என்னை ஆதரித்து நிற்பதாகச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்கள்..."

"மகனே! இவர்கள் செய்துகொடுக்கும் சத்தியத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. சுந்தர சோழச் சக்கரவர்த்திக்கும் அவருடைய சந்ததிகளுக்கும் உண்மையுடன் நடப்பதாக இவர்கள் ஒரு காலத்தில் சத்தியம் செய்து கொடுத்தார்கள். அவர்கள் உனக்கு உண்மையாக நடப்பார்கள் என்று வைத்துக் கொள்ளலாம். இவர்களிடம் உள்ள சைன்யம் வெகு சொற்பம் என்பது உனக்குத் தெரியாதா? வடக்கேயுள்ள சைன்யம் ஆதித்த கரிகாலனுடைய தலைமையில் இருக்கிறது. தென் திசைச் சேனையோ கொடும்பாளூர் வேளாரின் தலைமையில் இருக்கிறது..."

"தாயே! என் கட்சியை ஆதரிக்கும் சிற்றரசர்கள் எந்த நேரத்திலும் தலைக்குப் பதினாயிரம் வீரர்களைச் சேர்த்துக்கொண்டு வரக் கூடியவர்கள்."

"சைன்யம் ஒரு பக்கம் இருக்கட்டும். மக்களைப் பற்றி என்ன? சோழ நாட்டு மக்கள் சுந்தர சோழரின் புதல்வர்களிடம் எவ்வளவு அபிமானம் கொண்டவர்கள் என்பது உனக்குத் தெரியாதா? இன்றைக்கு நீயே பார்த்தாய். இந்தப் பழையாறை நகருக்கு இன்று அருள்மொழி வர்மனோ, ஆதித்த கரிகாலனோ வந்திருந்தால் மக்கள் எப்படித் திரண்டு கூடி வரவேற்றிருப்பார்கள்? இந்த ஊர் மக்கள் ஒரு காலத்தில் உன்னிடமும் அன்புடனேதான் இருந்தார்கள். பழுவேட்டரையர்களுடன் நீ உறவு பூண்டதிலிருந்து உன்னை மக்கள் வெறுக்கத் தொடங்கி விட்டார்கள்..."

"தாயே! மக்களின் அபிமானத்தைப் பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. மக்களின் அபிமானம் என்னத்துக்கு ஆகும்? மக்கள் ஆளப்பட வேண்டியவர்கள். சிம்மாசனத்தில் யார் வீற்றிருந்து அரசு செலுத்துகிறார்களோ, அவர்களிடம் மக்கள் பக்தி செலுத்த வேண்டியவர்கள்...!"

"மகனே! உனக்குப் போதனை செய்திருப்பவர்கள் அரசியல் நீதியின் ஆரம்பத் தத்துவத்தைக்கூட உனக்கு உணர்த்தவில்லை. மக்களின் அபிமானம் இல்லாமல் எந்த அரசனும் நீடித்த அரசு செலுத்த முடியாது. அப்படி அரசு புரிவதில் புண்ணியமும் இல்லை...!"

இவ்வாறு அந்தப் பெருமூதாட்டி சொல்லிக் கொண்டிருந்தபோது அரண்மனை வாசலில் ஒரு பெரும் ஆரவாரம் கேட்டது. ஓலக் குரலும் சாபக் குரலும் கோபக் குரலும் கேள்விக் குரலும் ஆயிரக்கணக்கான மனித கண்டங்களிலிருந்து எழுந்து பெருங் காற்று அடிக்கும்போது சமுத்திரத்தில் உண்டாகும் பயங்கரப் பேரொலியாகக் கேட்டது.

"மகனே! சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏதோ பெரும் விபத்து நெருங்கிக்கொண்டிருக்கிறது. அதன் முதல் அறிகுறிதான் இது. நான் அரண்மனைக்கு வெளியே சென்று என்ன விஷயம் என்று தெரிந்து வருகிறேன். அது வரையில் நீ இங்கேயே இரு!'' என்றாள் அன்னை.

## இருபத்திரெண்டாம் அத்தியாயம்

# "அது என்ன சத்தம்?"

இடையருகில் வந்ததும் படகில் வீற்றிருந்தது அரசிளங்குமரி குந்தவைதான் என்பதை வந்தியத்தேவன் நன்கு தெரிந்து கொண்டான். ஆழ்வார்க்கடியான் அவ்விடத்தில் நிற்கவே, வந்தியத்தேவனும் தயங்கி நின்றான்.

"அப்பனே! ஏன் நிற்கிறாய்! இளைய பிராட்டி வெகு நேரமாய் உனக்காகக் காத்திருக்கிறார். படகில் ஏறியதும் 'இளவரசர் வந்து விட்டார்; பத்திரமாய் இருக்கிறார்' என்ற நல்ல சமாசாரத்தை முதலில் சொல். உன்னுடைய வீரப் பிரதாபங்களை அளந்து கொண்டு வீண் பொழுது போக்காதே! நான் திரும்பிப் போகிறேன். பழையாறையில் இன்றைக்கு நாம் கலவரப் பிசாசை அவிழ்த்து விட்டு விட்டோம். அதை







மறுபடியும் பிடித்துக் கூண்டில் அடைக்க முடியுமா என்று பார்க்கிறேன். உன்னுடைய தடபுடல் சாகசங்களினால் எத்தனை தொந்தரவுகள் நேரிடுகின்றன?" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிவிட்டு,



வந்த வழியாக விரைந்து திரும்பிச் சென்றான்.

வந்தியத்தேவன் மனத்தில் ஒரு பெரு வியப்பு ஏற்பட்டது. இவன் எப்படி எல்லா விஷயங்களையும் தெரிந்துகொண்டிருக்கிறான்! இத்தனைக்கும் நம்மை ஒரு விவரமும் கேட்கவில்லை. வெறும் ஊகமா? அல்லது எல்லாம் அறிவானா? ஆண்டிகளில் பரம்பரை ஆண்டி என்றும் பஞ்சத்துக்கு ஆண்டி என்றும் இரண்டு வகை உண்டு. ஒற்றர்களிலும் அப்படி இருவகை உண்டு போலும். நான் அவசரத்துக்கு ஒற்றன் ஆனேன். ஆகையால் அடிக்கடி சங்கடத்தை வருவித்துக்கொள்கிறேன். இந்த வைஷ்ணவன் பரம்பரை ஒற்றன் போலும். அதனால் ஒருவிதப் பரபரப்புமில்லாமல் சாவதானமாகத் தன் வேலையைச் செய்து வருகிறான். ஆனால் யாருக்காக இவன் வேலை செய்கிறான்? இவன் தன்னைப் பற்றிக் கூறியதெல்லாம் உண்மைதானா?

இவ்விதம் யோசித்துக்கொண்டே ஓடை நீர்க் கரைக்கு வந்த வந்தியத்தேவன், ஓடத்திலிருந்த இளவரசியின் முகத்தைப் பார்த்தான். ஆழ்வார்க்கடியானை மறந்தான். தான் போய் வந்த காரியத்தையும் மறந்தான். உலகத்தை மறந்தான். தன்னையுமே

மறந்தான். ஆகா! இந்தப் பெண்ணின் முகம் தன்னை விட்டுச் சிறிது நேரம்கூடப் பிரிந்திருக்கவில்லை. கனவிலும் நனவிலும் புயலிலும் மழையிலும் காட்டிலும் கடல் நடுவிலும் தன்னுடன் தொடர்ந்து வந்தது. ஆயினும் என்ன விந்தை! நேரில் பார்க்கும்போது இந்தப் பொன் முகத்தின் அழகு எதனால் அதிகப்பட்டுக் காண்கிறது? ஏன் என் உள்ளத்தில் இத்தகைய கிளர்ச்சி உண்டாகிறது? ஏன் தொண்டையை வந்து அடைக்கிறது? நெஞ்சில் ஏன் இந்தப் படபடப்பு?

சுய நினைவு இல்லாமலே வந்தியத்தேவன் தண்ணீரில் சில அடிகள் இறங்கிச் சென்று ஓடத்தில் ஏறிக்கொண்டான். இளவரசி, ஓடக்காரனைப் பார்த்து சமிக்ஞை செய்தாள். ஓடம் நகரத் தொடங்கியது. வந்தியத்தேவனுடைய உள்ளமும் ஊசலாடத் தொடங்கியது.

"நிமித்தக்காரா! இளவரசர்களுக்கு மட்டுந்தான் நீ நிமித்தம் சொல்வாயா? எனக்கும் சொல்வாயா? நிமித்தம் எப்படிச் சொல்வாய்? வானத்துக் கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்துச் சொல்வாயா? அல்லது காக்கை குருவிகளைப் பார்த்துச் சொல்வாயா? கைரேகை பார்த்துச் சொல்வாயா?... முகக் குறி பார்த்துத்தான் சொல்வாய் போலிருக்கிறது. இல்லாவிட்டால், ஏன் என் முகத்தையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்? இப்படிச் செய்தாயானால் உயர்குலத்துப் பெண்கள் யாரும் உன்னிடம் நிமித்தம் கேட்க முன் வர மாட்டார்கள்!" என்று அரசிளங்குமரி கூறியது வந்தியத்தேவன் செவிகளில் இனிய இன் இணி நாதமாகக் கேட்டது.

"அம்மணி! நிமித்தம் பார்ப்பதற்காகத் தங்கள் முகத்தைப் பார்க்கவில்லை. எங்கேயோ, எப்போதோ பார்த்த முகம் போலிருக்கிறதே என்று ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றேன்..."

"தெரியும், தெரியும்! நீர் மிக்க மறதிக்காரர் என்று எனக்குத் தெரியும். நான் ஞாபகப் படுத்துகிறேன். ஏறக்குறைய நாற்பது நாளைக்கு முன்னால் குடந்தை ஜோதிடர் வீட்டில் முதன்முதலாகப் பார்த்தீர். பிறகு அன்றைக்கே அரசலாற்றங்கரையில் பார்த்தீர்..."

"அம்மணி! நிறுத்துங்கள்! தங்கள் வார்த்தையை நான் நம்ப முடியவில்லை. நாற்பது நாளைக்கு முன்புதானா தங்களை முதன் முதலாகப் பார்த்தேன்! நாற்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பார்க்கவில்லையா? நூறு நூறு நூறு ஜன்மங்களில் நூறாயிரம் தடவை தங்களைப் பார்க்கவில்லையா? மலை அடிவாரத்தில் பார்க்கவில்லையா? குன்றின் உச்சியிலே பார்க்கவில்லையா? நீர்ச் சுனையின் ஓரத்தில் பார்க்கவில்லையா? அடர்ந்த காட்டின் மத்தியில் கொடும் புலியினால் துரத்தப்பட்டு ஓடி வந்த தங்களை நான் காப்பாற்றவில்லையா? வேல் எறிந்து அந்தப் புலியைக் கொல்லவில்லையா? அப்போது நான் காட்டில் வேட்டையாடித் திரிந்த வேடுவனாயிருந்தேன். விதவிதமான வர்ணச் சிறகுகள் உள்ள அழகழகான கிளிகளை வலம் போட்டுப் பிடித்துக்கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அந்தக் கிளிகளை என்னிடமிருந்து வாங்கிக்கொண்டு வானத்தில் பறக்க விட்டு விட்டுக் கலகலவென்று சிரித்தீர்கள். ஒருசமயம் நான் மீன் பிடிக்கும் வலைஞனாயிருந்தேன். தூர தூரங்களிலுள்ள ஏரிகளுக்கும் ஆறுகளுக்கும் சென்று வெள்ளி மீன்கள், தங்க மீன்கள், மரகத மீன்களைப் பிடித்துக்கொண்டு வந்து கொடுத்தேன். அவற்றைத் தாங்கள் வாங்கிக் கொண்டு மறுபடியும் ஓடும் தண்ணீரில் விட்டு அவை துள்ளி நீந்திச் செல்லுவதைப் பார்த்து மகிழ்ந்தீர்கள். தொலைதூரங்களிலுள்ள கடல்களுக்குச் சென்று கடலின் ஆழத்தில் மூச்சுப் பிடித்து முழுகி முத்துக்களையும் பவளங்களையும் சேகரித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அவற்றைக் கையினால் அளைந்து பார்த்துவிட்டு ஊரிலுள்ள சிறுவர் சிறுமிகளை அழைத்து அவர்களுடைய சின்னஞ்சிறு கைகளிலே முத்துக்களையும் பளவங்களையும் சொரிந்து அனுப்பினீர்கள். முந்நூறு வருஷங்கள் வளர்ந்த இலந்தை மரத்திலிருந்து முப்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை விளையும் இலந்தைக் கனியைக் காத்திருந்து பறித்து வந்து தங்களிடம் சமர்ப்பித்தேன். அதைத் தாங்கள் வளர்த்த நாகணவாய்ப் பறவைக்குக் கொடுத்து, அது கனியைக் கொத்திக் கொத்தித் தின்னுவதைப் பார்த்துக் களித்தீர்கள். தேவலோகத்துக்குப் போய் அங்குள்ள மந்தார மலர்களையும் பாரிஜாத புஷ்பங்களையும் பறித்துக்கொண்டு வந்து தங்கள் முன் பொழிந்தேன். 'எங்கள் கொல்லை வேலியில் பூக்கும் முல்லை மலரின் அழகுக்கும் மணத்துக்கும் இவை ஈடாகுமா?' என்று சொல்லி விட்டீர்கள். தேவேந்திரனிடமிருந்து அவன் அணியும் ஒப்பில்லா இரத்தின ஹாரத்தை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தேன். 'ஒழுக்கமற்ற

இந்திரன் அணிந்த மாலையை நான் கையினாலும் தொடுவேனா?' என்று சொல்லி விட்டீர்கள். கைலாசத்துக்குச் சென்று பார்வதி தேவியின் முன்னால் தவங் கிடந்து தேவியின் பாதத்தில் அணியும் சிலம்பை வாங்கிக் கொண்டு வந்தேன். தங்கள் பாதங்களில் சூட்டி விடுவதாகச் சொன்னேன். 'ஐயையோ! ஜகன்மாதாவின் பொற்பாதச் சிலம்பு என் காலிலே படலாமா? என்ன அபசாரம்? திரும்பக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வா!' என்றீர்கள். போர்க்களத்துக்குச் சென்று அறுபத்து நாலு தேசங்களின் அரசர்களையும் வென்று அவர்களுடைய மணிமகுடங்களையெல்லாம் சேகரித்துக்கொண்டு வந்து தங்கள் முன் காணிக்கை செலுத்தினேன். தாங்கள் அந்த மணிமகுடங்களைக் கால்களால் உதைத்துத் தள்ளினீர்கள். 'ஐயோ? தங்கள் மெல்லிய மலர்ப் பாதங்கள் நோகுமே?' என்று கவலைப்பட்டேன். இளவரசி! இவையெல்லாம் உண்மையா? இல்லையா? அல்லது நாற்பது நாளைக்கு முன்பு முதன் முதலாகத் தங்களை நான் பார்த்ததுதான் உண்மையா?" என்றான் வந்தியத்தேவன். அப்படியும் அவன் பேசி முடித்து விட்டதாகக் காணப்படவில்லை.

"தேவி! இன்னொரு ஞாபகமும் வருகிறது. ஒருசமயம் வெள்ளி ஓடத்தில் நாம் ஏறி, தங்கப் பிடி போட்ட தந்தத் துடுப்புகளைப் பிடித்துக்கொண்டு, வானக் கடலில் வெண்ணிலா அலைகளைத் தள்ளிக்கொண்டு, பிரயாணம் செய்தோம்..." என்று ஆரம்பித்தான்.

"ஐயையோ! இந்த நிமித்தக்காரனுக்கு நன்றாய்ப் பைத்தியம் பிடித்துவிட்டது போலிருக்கிறது. படகைத் திருப்பிக் கரைக்குக் கொண்டு போக வேண்டியதுதான்!" என்றாள் இளவரசி.

"இல்லை, தேவி இல்லை! சற்று முன்னால் இந்த ஓடைக்கரைக்கு வந்து சேரும் வரையில் என் அறிவு தெளிவாகத்தானிருந்தது. இல்லாவிட்டால் இந்தப் பழையாறை நகருக்குள் பிரவேசிப்பதற்கு நான் உபாயம் கண்டுபிடித்திருக்க முடியுமா? மதுராந்தகத் தேவரிடம் நிமித்தக்காரன் என்று சொல்லி, அதை நம்பும் படியும் செய்து, அரண்மனைக்கு வந்திருக்க முடியுமா? வைத்தியர் மகனிடமிருந்துதான் அவ்வளவு எளிதில் தப்பி வந்திருக்க முடியுமா? இந்தப் படகில் ஏறித் தங்கள் திருமுகத்தைப் பார்த்தவுடனேதான், மது உண்டவனைப் போல் மதி மயங்கிப் போய்விட்டேன்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"ஐயா! அப்படியானால், என் முகத்தைத் தாங்கள் பார்க்க வேண்டாம். இந்த ஓடையின் தெளிந்த நீரைப் பாரும். நீல வானத்தைப் பாரும். ஓடைக் கரையில் வானளாவி வளர்ந்திருக்கும் மரங்களைப் பாரும். அரண்மனை மாடங்களைப் பாரும். பளிங்குக் கல் படித்துறைகளைப் பாரும். இந்த ஓடையில் பூத்திருக்கும் ஆம்பல் மலர்களையும் செங்கழுநீர்ப் பூக்களையும் பாரும். அல்லது இந்தச் செவிட்டு ஓடக்காரனின் முகத்தையாவது சற்றே பாரும். அவ்விதம் பார்த்துக்கொண்டே தாங்கள் போன காரியம் என்ன ஆயிற்று, காயா பழமா, என்று சொல்லும். இளவரசரை அழைத்து வந்தீரா, சௌக்கியமாக இருக்கிறாரா, எங்கே விட்டு வந்தீர், யாரிடம் விட்டு வந்தீர் என்று முதலில் தெரியப்படுத்தும். பிறகு, இங்கிருந்து புறப்பட்டது முதல் நடந்தவை எல்லாவற்றையும் சொல்லும்!" என்று இளவரசி கூறினாள்.

அதற்கு வந்தியத்தேவன், "தேவி! தங்களிடம் ஒப்புக்கொண்டு போன காரியத்தை வெற்றிகரமாக முடித்திராவிட்டால், தங்களிடம் திரும்பி வந்த என் முகத்தைக் காட்டியிருப்பேனா? இளவரசரை இலங்கையிலிருந்து அழைத்துக்கொண்டு வந்தேன். அதற்கேற்பட்ட ஆயிரம் இடையூறுகளையும் வெற்றி கொண்டு, அழைத்து வந்தேன். இளவரசர் சுகமாயிருக்கிறார் என்று நான் சொல்ல முடியாது. நான் அவரை விட்டுப் பிரியும்போது அவருக்குக் கடுமையான சுரம். ஆனால் பத்திரமான கைகளில் அவரை ஒப்படைத்து வந்திருக்கிறேன். ஓடக்காரப் பெண் பூங்குழலியிடமும், பூக்காரச் சிறுவன் சேந்தன் அமுதனிடமும் இளவரசரை விட்டு வந்திருக்கிறேன். அவர்கள் இளவரசரைக் காப்பாற்றுவதற்காக நூறாயிரம் தடவை வேண்டுமென்றாலும் தங்கள் உயிரைக் கொடுக்கக் கூடியவர்கள்!" ,என்றான்.

அச்சமயம் தூரத்தில் பயங்கரமான, குழப்பமான, அநேகாயிரம் குரல்களின் ஒருமித்த ஓலம் போன்ற சத்தம் எழுந்தது. சத்தம் வந்த திசையை அரசிளங்குமரியும் வந்தியத்தேவனும் பயத்தோடும் கவலையோடும் நோக்கினார்கள்.

"அது என்ன ஆரவாரம்? கோபங் கொண்ட ஜனத் திரளின் கூக்குரல் போல் அல்லவா இருக்கிறது?"

"ஆம்; அப்படித்தான் தோன்றுகிறது!" என்றான் வந்தியத்தேவன்.

(தொடரும்)

# உட்பளஜி விஷயம்!

ஜனாப்! நான் பட்டிக்காட்டில் பிறந்து வளர்ந்தவன். எங்கள் ஊர் மயூரபுரியிலிருந்து எட்டு மைல் வடமேற்கில் கொள்ளிடத்துக்குச் சமீபம் இருக்கிறது. சிலர் இதைப் பதினோரு மைல் என்றும் சொல்லுவார்கள். நீங்கள் நம்ப வேண்டாம். குறுக்கு வழியாகப் போனால் எட்டு மைல்தான். வழியில், பழவாறு இருக்கிறது. அங்கே ஒரு தோணி இருக்கும். தோணிக் கூலி காலணாதான். ஆனால் மணியனூர்க் கணக்குப் பிள்ளை வீட்டிற்குப் போவதாகச் சொன்னால் காசு வாங்காமல் ஏற்றிக்கொள்வான். தோணிக்காரன் கள்ளுக் கடைக்குப் போயிருந்தால் ஆற்றங்கரையில் இருக்க மாட்டான். அப்போது இறங்கிப் போக வேண்டியதுதான். பழவாற்றில் முதலை உண்டென்று சொல்லுகிறார்கள். ஆனால் நான் பார்த்ததில்லை. அப்படி முதலை வந்தால் அதனிடம் மணியனூர் கணக்குப் பிள்ளை வீட்டிற்குப் போவதாகச் சொல்லுங்கள். அந்தப் பக்கத்தில் அவரைத் தெரியாதவர்கள் கிடையாது. - அடடா! சொந்த ஊரைப் பற்றிப் பெருமையில் எடுத்த விஷயத்தை விட்டு எங்கேயோ போய் விட்டேன். ஆனாலும் ஸர் வால்டர் ஸ்காட்டின் கவிதையை எண்ணிப் பார்த்து என்னை மன்னித்து விடுவார்கள். நிற்க.

சென்னை கார்ப்பொரேஷன் கமிஷனர் ஜனாப் ஜே. ஹுஸேன் சாகிப் அவர்கள் சமுகத்திற்கு.

ஐயா,

உம்மை எனக்கு முன் பின் தெரியாது. இதற்கு முன் நாம் இருவரும் சந்தித்ததாக ஞாபகமில்லை. சந்தித்திருந்தாலும் நாம் ஒருவருக்கொருவர் அறிமுகம் செய்து வைக்கப் படவில்லை. ஆகையால் தாங்கள் அனுப்பிய ஆசாமி என்னைத் தேடி வந்திருக்க முடியாதென்று நினைத்து ஆன மட்டும் ஆட்சேபித்தேன். அவன் கேட்காமல், தாங்கள் அனுப்பிய கடுதாசை என் கையில் திணித்து விட்டுப் போய்விட்டான். பிரித்துப் பார்த்தபோது கடிதம் எனக்குத்தான் என்று தெரிந்தது! முன்பின் அறியாதவர்களுக்குக் கடிதம் எழுதுவது பட்டணத்து வழக்கம் போலிருக்கிறது! எனக்குத் தெரியாது,

தாங்கள் எனக்கு ஐந்து கடுதாசிகள் அனுப்பி இருக்கிறீர்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வர்ணம். சிகப்பு, பச்சை, வெள்ளை, மஞ்சள், மறுபடியும் சிகப்பு. முதலில் ஏதோ டிராமா நோட்டீஸ்களாக்கும் என்று எண்ணினேன். அப்புறம் பார்த்தால் கன்னா பின்னாவென்று கொஞ்சமும் மரியாதை இல்லாமல் எழுதியிருக்கிறது. சுருங்கச் சொன்னால் ஒவ்வொரு கடிதத்திலும் பணம் அனுப்பும்படி கேட்டிருக்கிறீர்கள். 1932 ஏப்ரல் முதல் ஸெப்டம்பர் வரை ஆறு மாதத்துக்கு ஐந்து ரூபாயும், அதற்கு அடுத்த ஆறு மாதத்திற்கு ஐந்து ரூபாயும், அதற்குப் பிறகு மூன்று ஆறு மாதங்களுக்குப் பத்துப் பத்து ரூபாயும், ஆக மொத்தம் நாற்பது ரூபாய் கேட்டிருக்கிறீர்கள். பணம் கேட்க வந்த நீர் மரியாதையாகவாவது எழுதி இருக்கிறீரா? கிடையாது. 'சென்னை நகர முனிஸிபல் ஆக்ட் நம்பர் 4(1919) (2) ஷெட்யூல் (4) வகுப்பு (8) இதன் கீழ்'... எடிடர் என்ற ஹோதாவில் எனக்கு வரி விதித்திருப்பதாகவும், நோட்டீஸ் கண்ட பதினைந்து நாளுக்குள் பணம் கட்டாதவரை என்னுடைய ஜங்கம சொத்துக்களை ஜப்தி செய்து ஏலம் போடப்படுமென்றும் தெரிவித்திருக்கிறீர்.

ஜனாப் சாகிப்! இவ்வளவு மரியாதையாகப் பணம் கேட்பதற்கு எந்தப் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொண்டீர்களென்று தயவு செய்து தெரிவியுங்கள். அந்த வித்தையை நானும் பழகிக்கொண்டு எனக்குத் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் எல்லாருக்கும் கடிதம் எழுதலாமென்று உத்தேசித்திருக்கிறேன்.

• • •

உம்முடைய கடிதத்தைப் பற்றிக்கூட எனக்கு அவ்வளவு வருத்தமில்லை. அதில் கண்டபடி காரியம் நடத்தாதது பற்றித்தான் ரொம்ப வருத்தமாயிருக்கிறது. நோட்டீஸ் கிடைத்த பதினைந்து நாள் வரையில் தினந்தோறும் நான் உம்முடைய ஆட்களின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். வீட்டு வாசலில் பின்வரும் ஜங்கம சொத்துக்களை எடுத்துத் தயாராய் வைத்திருந்தேன்:-

1) ஓட்டை பக்கெட்டுகள் 3

2) உடைந்த முகம் பார்க்கும் கண்ணாடிகள் 7

3) துருப்பிடித்த ஹரிக்கன் லாந்தர்கள் 5

4) பிய்ந்த கூடைகள் 6

5) உபயோகித்த ஸேப்டி ரேஸர் பிளேட்கள் 36

பதினைந்து நாள் பார்த்த பிறகும் நீராவது உமது ஆட்களாவது வராதபடியால், எங்கள் தெரு வழியாகத் தினந்தோறும் போகும் குப்பை மோட்டாரில் போட்டு அனுப்பி விட்டேன். அந்த வண்டி உங்கள் ஆபீஸிற்குத்தான் வருகிறதென்று கேள்வி.

இதெல்லாம் போகட்டும். உம்முடைய கடிதத்தில் கண்டிருக்கும் பின்வரும் வாக்கியத்துக்கு என்ன அர்த்தமென்று தயவு செய்து தெரிவிப்பீரா?

**"குறிப்பு: கௌன்ஸில் தீர்மானம் செய்திருக்கிறபடி தொழில் வரியானது நூற்றுக்கு இருபத்தைந்து வீதம் குறைந்த வரிக்கு மேல் தூக்கப்பட்டிருக்கிறதென்பதை அறியவும்."**

ஓ சாகிபு ஐயா! உம்முடைய கடிதத்தில் கண்ட இந்த வாக்கியம் எனக்கு எவ்வளவு துன்பம் அளித்திருக்கிறதென்பதை நீர் அறிந்தால் கண்ணீர் விட்டுக் கதறி விடுவீர். தயவு செய்து அதற்கு என்ன பொருள் என்பதைத் தெரிவித்து விடுங்கள். இதை எப்படியாவது உங்களிடம் தெரிந்துகொண்டு நான் இழந்துபோன மன அமைதியைத் திரும்பப் பெறலாமென்று நோக்குத்துடன்



தான் இந்தக் கடிதத்தோடு ரூபாய் நாற்பது அனுப்பியிருக்கிறேன். பதினைந்து வருஷத்திற்கு முன்பு என்னைக் கேட்காமல் யாரோ செய்த சட்டம், பாகம், ஷெட்யூல் இவைகளின் கீழ், மூன்று வருஷத்திற்குமுன் நான் செய்த தொழிலுக்காக - இப்போது வரி கேட்கிறீரே, அது ரொம்ப அநியாயம் என்று எனக்குத் தோன்றியபோதிலும், உம்மைச் சமாதானப்படுத்தினால்தான் மேற்கண்ட வாக்கியத்திற்குப் பொருள் தெரிந்து கொள்ளலாமென்று நீர் கேட்டதை, அனுப்பியிருக்கிறேன். அது சம்பந்தமாக நீர் எனக்குத் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் இவைதான்:-

*1) நூற்றுக்கு இருபத்தைந்து வீதம் எது குறைந்தது?*

*2) எதிலிருந்து குறைந்தது?*

*3) எது தூக்கப்பட்டது?*

*4) எதற்கு மேல் தூக்கப்பட்டது?*

குதிரை கீழேயும் தள்ளிக் குழியும் பறித்ததுபோல், என்னமோ இலகுவாய் **''அறியவும்''** என்று போட்டு விட்டீர். சபாஷ்! ஐயா சபாஷ்!

நான் ஒன்று சொல்கிறேன், கேட்கிறீரா? பேசாமல், இத்தகைய குழப்பங்களுக்கு ஒன்றும் இடம் வைக்காமல், எல்லா வரிகளையும் ஒரே அடியாய்த் **தூக்கி விடும்படி** உமது கௌன்சிலுக்குச் சிபாரிசு செய்யும். கழுத்தில் சுருக்கிட்டு உயிர் போகும் வரையில் அவைகளைத் தூக்கி விட வேண்டும். அப்போது நாங்கள் விஷயம் புரிந்து கொள்வோம். அதை விட்டுக் "குறைந்த வரிக்கு மேல் தூக்கப்பட்டது" என்றால், அது என்னவென்று அறிவதற்கு முயற்சி செய்யச் செய்ய, மூளைதான் குழம்புகிறது.

**ஐ**யா, இவ்வளவு எழுதியபின் ''பணமும் கடிதங்களும் ரெவினியூ ஆபீஸர் அவர்களுக்கு அனுப்ப வேண்டியது'' என்று கடிதத்தில் எழுதியிருப்பதைப் பார்த்தேன். உம் மேல் உமக்கே சந்தேகம் போலிருக்கிறது! எதுவாயிருந்தாலும் உம் இஷ்டப்படியே பணத்தை ரெவினியூ ஆபீஸருக்கு அனுப்பிவிட்டேன். கடிதத்தை விகடனுக்கு அனுப்புகிறேன். உடனே பதில் தெரிவிக்க வேண்டியது. அப்படித் தெரிவிக்காவிட்டால் உம் பேரில் ரிப்போர்ட் செய்வேன் என்பதைக் கண்டிப்பாக அறியவும்.

''யாரிடம்?'' என்றா கேட்கிறீர்? மேன்மை தங்கிய கவர்னர் துரை அவர்களிடம்தான். கவர்னர் எனக்கு ரொம்ப வேண்டியவர் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளவும். சமீபத்தில் ஒருநாள் நான் ஜட்கா வண்டியில் போய்க் கொண்டிருந்தேன். ஒரு போலீஸ்காரன் வந்து வண்டியை நிறுத்தினான். ''ஏன்?'' என்று கேட்டேன். "கவர்னர் வருகிறார்" என்றான். அவ்வளவு பெரிய மனிதர் என்னைப் பார்க்க விரும்பும்போது சிறிது தாமதிக்க வேண்டியதுதான் என்று எண்ணி வண்டிக்காரனை நிற்கச் சொன்னேன்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கவர்னர் அந்தப் பக்கம் போனார். அவரை நோக்கிப் புன்னகை புரிந்தேன். அவரும் புன்னகை செய்தார். அதற்குமேல் அந்த முச்சந்தியில் அவரை நிறுத்தக் கூடாதென்று பேசாமல் இருந்து விட்டேன். மறுநாள் மவுண்ட்ரோடில் கவர்னர் மாளிகை வழியாகப் போகும்போது கவர்னரைப் பார்த்துச் செல்லலாமென்று நினைத்தேன். ஆனால் அவர் அச்சமயம் வீட்டில் இல்லை. இதற்காக அவர் மீது குற்றஞ் சொல்ல மாட்டேன். அவர் ஒருகால் என் வீட்டுக்கு வரும்போது, நான் வீட்டில் இல்லாமல் போவதும் நேரக் கூடியதேயல்லவா?

ஆனால் அவர் என்னை வீதியில் சந்தித்ததை மறந்திருக்க மாட்டாரென்று எண்ணுகிறேன். ஆகையால் நீர் இக் கடிதத்திற்குத் தக்க ஜவாப் உடனே எழுதாவிட்டால், அப்புறம் என் பேரில் குற்றம் சொல்லாதீர்.

இப்படிக்கு
"கல்கி"

**(ஆனந்தவிகடன், அக்டோபர் 10, 1934)**

இதோ... எத்தனையோ
குழந்தைகள் குப்பை
தொட்டிகளிலும்,
தெரு ஓரங்களிலும் அன்றாடம்
வீசப்படுகிறார்கள்.





இவர்களின் நாளைய வாழ்க்கை....?
இன்று நம் கரங்களில்.

அம்மா.., அம்மா....,
என்று ஏங்கும்
இவர்களுக்கு அன்புக் காட்ட,
ஆதரவு கொடுக்க
நான் தேடும் ஒரு சிறந்த தாய்
நீங்களாக இருக்கலாம்.



மேலும் சேவையுள்ளம் கொண்ட உதவியாளர்கள், வாகன ஓட்டுனர்கள், பராமரிப்பு பணியாளர்கள், செவிலியர்கள், சமையல் பணியாளர்கள், தோட்டப் பணியாளர்கள் உடனடியாக தொடர்பு கொள்ளவும்.

உங்கள் **வித்யாகர்**

## உதவும் கரங்கள்

460 என்.எஸ்.கே. நகர் (அண்ணா வளைவு அருகில்)
சென்னை - 600 106.
தொலைபேசி எண்கள்: 6216321, 6216421.

# நடக்குமென்பார் நடக்கும்!



**மேஷம் :** (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

கவர்ன்மெண்ட் விஷயம் ஏதும் பெண்டிங் இருந்துன்னா, அதிலொரு நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். வி.ஐ.பிங்க, பணக்காரங்களோட உதவி தாராளமா கிடைக்கும். நிர்வாகத் துறையில் இருக்கறவங்க முன்னணிக்கு வருவாங்க. அரசியல்வாதிகளோட மதிப்பு உயரும்; சிலருக்கு திடீர் திருப்பம் உண்டாகும். கலைத் துறையினருக்கு அனுகூலமான வாரம். பத்திரிகை, எழுத்துத் துறையினருக்கு செழிப்பான பாதை தெரியும். எல்லோருக்குமே பொருளாதார விஷயம் சாதாரணமானதுதாங்கறதால, பண விஷயத்தில் எச்சரிக்கை அவசியம்.



**ரிஷபம் :** (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

சில சாதனைகளைச் செய்து காட்டுவீங்கன்றது உண்மைதான். மனசல துணிச்சல் பிறக்குன்றதும் புதியவங்க சிலரால அனுகூலம் கிடைக்குன்றதும் உண்மைதான். சிலருக்கு வெளி நாட்டுத் தொடர்பாலயும் ஆதாயம் கிடைக்கலாம். இதெல்லாம் எப்ப நடக்கும்னா, பேச்சுல நிதானத்தையும், செய்யற காரியத்தில் பொறுமையையும் கடைப்பிடிக்கற போதுதான் நடக்கும். இல்லேன்னா எல்லாமே அரைகுறையாத்தான் நிக்கும். குழந்தைகளை டாக்டர்கிட்ட கூட்டிப் போக நேரிடலாம். குடும்பத்தில் மட்டுமல்ல; உங்ககிட்ட வேலை செய்யறவங்களாலும் பிரச்னைகள் வரலாம். ஜாக்கிரதையா இருங்க.



**மிதுனம் :** (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

எல்லாமே லட்டு மாதிரி, இனிமையா முடியற வாரம் இது. பதவியும் பட்டமும் ஓடி வந்து சிலரைப் பெருமைப்படுத்தும். வியாபாரிகளுக்கு வெற்றி நடை உறுதி. கல்யாணமாகாதவர்களுக்கு இந்த வாரம் எல்லாம் கூடிவரும். ஆனவங்களுக்கு சந்தோஷம் பொங்கும். எண்ணெய் வியாபாரிகளுக்கு லாபம் உறுதி. சிலருக்குப் புது வாகன யோகம் இருக்கு. ஸ்பெகுலேஷனிலும் ஆதாயம்தான். எல்லோருக்குமே உற்சாகமான வாரம்தான். ஆனாலும் உடல் நலனில் அக்கறை காட்றது அவசியம்.



**கடகம் :** (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

இந்த வாரம் நீங்க சிறப்பான பலன்களை எதிர்பார்க்க முடியாதுங்க. ஆனாலும் ரொடீன் வாழ்க்கைல பிரச்னை இருக்காது. எதிர்ப்புகள் இருந்தாலும் சமாளிக்கலாம். வீண் வாக்குவாதம், அடுத்தவங்க விஷயத்துல மூக்கை நீட்றதெல்லாம் வேண்டாம்; அது வீண் சண்டை, சச்சரவுல கொண்டு போய் விட்டுடும். கொடுக்கல் வாங்கல்களிலும் எச்சரிக்கை இல்லேன்னா கவுத்துடும். பயணத்திலும் எச்சரிக்கை தேவை.



**சிம்மம் :** (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

எல்லா கிரகங்களும் உங்களுக்கு அனுகூலமாவே இருக்கறப்போ என்னங்க கவலை உங்களுக்கு? மனசல ஒரு தெளிவும் தன்னம்பிக்கையும் ஏற்படும். எந்தப் பாதையில போனாலும், தங்கு தடையில்லாத ராஜ பாட்டையாத்தான் இருக்கும். ராஜாங்கக் காரியங்கள் கூட இந்த வாரம் நிறைவேறிடும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்கும்; அதற்கான சூழ்நிலைகளும் உருவாகும். விருந்து கேளிக்கைன்னு உற்சாகம் பொங்கும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்டமும் அடிக்கும். இத்தனைக்கும் நடுவுல செலவுகளும் கூடும்கிறதால, சிக்கனமும் அவசியங்கிறதை மறந்திடாதீங்க.



**கன்னி :** (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

பொதுவாப் பார்த்தா எதிலும் குறையிருக்காது. எல்லாம் சீராவே இருக்கும். சயின்ஸ் சம்பந்தப்பட்டவங்களுக்கு நல்ல ஆதாயம் தெரியும். கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறையினருக்கும் வரவேற்பு கூடும். எழுத்தாளர்களுக்கு ஓஹோ வாரம். விஞ்ஞானிகள் புதிய கண்டு பிடிப்புகளால் புகழடைவார்கள். கலைத் துறையினருக்கும் களிப்பான வாரம்தான். தொழிலதிபர்களுக்கு லேபர்

பிராப்ளம் இருக்கும். பிள்ளைகளாலும் சில பிரச்னைகள் வரலாம். பயணத்தில், குறிப்பா இரவுப் பயணத்தில் எச்சரிக்கை அவசியம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

பண விஷயத்தில் நல்ல அபி விருத்தி தெரியும். குடும்பத்தில் யாராவது அசௌகரியமா இருந்தா, இந்த வாரம் நல்ல குணம் தெரியும். சுபகாரியங்களுக்கான சூழ் நிலைகள் உருவாகும். அரசு விவகாரங்கள் உங்க ளுக்குச் சாதகமாவே இருக்கும். வேலை தேடற வங்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். புதிய நட்பும் அதனால் பயனும் ஏற்படும். எதிர் பார்த்த பண உதவி கிடைக்கும். ஆனாலும் பயணத்தில் எச்சரிக்கையா இருக்கணும். வீண் செலவுகளைத் தவிர்க்கணும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சிறப்பான பலன்களை எதிர் பார்க்க முடியாதுன்னாலும், நல்ல பலன்களே நடக்காதுன்னும் சொல்ல முடியாது. உங்க திறமை வீண் போகாது. எழுத்துத் துறையி னருக்கு அனுகூலமான போக்கே தென்படும். விஞ்ஞானிகள், ஆராய்ச்சியாளர்களுக்கு நல்ல தகவல்கள் வந்து சேரும். சிற்பம், ஓவியம் சம்பந் தப்பட்டவங்களுக்குப் புகழ் கூடும். ஆனாலும் பலருக்குப் பொருளாதாரம் திருப்தியா இருக்காது. கொடுக்கல், வாங்கல் வேண்டாம். உடல் நலனிலும் கைப்பொருளைப் பாதுகாப் பதிலும் அதிக கவனம் வேணும்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்தி ராடம் முதல் பாதம் வரை)*

காரிய வெற்றிகள் கைகூடி வரும் வாரம் இது. பலரும் உங்களுக்குப் பக்கபலமா இருப்பாங்க. சுபகாரியங்களில் பங்கு கொள்ளும் வாய்ப்புகள் அதிகம். உங்க வீட்டிலும் கல்யாணப் பேச்சுகள் ஆரம்பமா கும். வளைகாப்பு, சீமந்தமெல்லாம் நடக்கற சான்ஸும் நிறைய இருக்கு. பண விஷயம் திருப்திகரமாவே இருக்கும். இயந்திரப் பணி யாளர்களுக்கு வளர்ச்சி தெரியும். ஸ்பெகு லேஷனிலும் அளவோடு லாபம் உண்டு. சிறு சிறு தடங்கல்கள் வந்தாலும் கவலைப்படா தீங்க; சுலபமா சமாளிச்சிடலாம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட் டம் 2-ம் பாதம் வரை)*

வார ஆரம்பத்தில் சில பிரச்னை கள் தலை தூக்கும். மனசுல ஒருவித சஞ்சலம் இருக்கும். உடம்பில் ஒருவித அசதியும் இருக் கும். அதனால ரொம்பவும் அலையாதீங்க. பயணத்தைக் கண்டிப்பா தவிர்த்திடுங்க. பேச் சில் குளுமை அவசியம். எந்தக் காரியமானா லும் பதற்றமில்லாம, நிதானமா யோசிச்சுச் செய்யுங்க. பெரியவங்க ஆலோசனைப்படி செய்யறது ரொம்பவும் நல்லது. கணவன் - மனைவிக்குள்ள விட்டுக் குடுத்துப் போறது அவசியம். இந்த வாரம் முதலீடு செஞ்சுடா தீங்க.



**சிம்மராசிக்காரரான பாடகி அனுராதா ஸ்ரீராமுக்கு திடீர் அதிர்ஷ்டம் ஏதோ அடிக்கப் போகுதாமே?**



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உழைப்புக்கும் திறமைக்கும் உரிய பலன் கிடைக்கிற வாரம் இது. அரசு விவகாரங் களில் நல்ல திருப்பம் உண்டாகும். பிறமொழி பேசுவோர் மூலம் தகுந்த உதவி கிடைக்கும். நிறுவன நிர்வாகப் பொறுப்புகளில் இருப்பவர் களுக்குச் செழிப்பான வாரம் இது. வியாபாரி களுக்கும் லாபம் உறுதி. வெளிநாட்டுத் தொடர் பும் ஆதாயம் தரும். கலைத் துறையினருக்கு எதிர்ப்புகள் இருக்கும். உஷாரா இருக்கறது நல்லது. புது முயற்சிகள் ஏதும் இப்போது வேண்டாம். காதலர்களுக்குத் தோல்வி ஏற்பட சான்ஸ் இருக்கு. பெண்களுக்கு ஏமாற்றங்கள் வரலாம். பெண்களாலும் ஏமாற்றங்கள் வர லாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

எதையும் திறமையா செஞ்சு, மத்தவங்க பாராட்டைப் பெறுவீங்க. நண்பர் களும் உறவினர்களும் ரொம்பவும் உதவியா இருப்பாங்க. ஃபாரஸ்ட் ஆபீஸர்கள், அல்லது எஸ்டேட் ஓனர்களுக்கு இது அமோகமான வாரம். சிலருக்குப் பயணத்தால் பலன் கிடைக் கும். வீட்டில் திருமணப் பேச்சுகள் அடிபடும். செவ்வாயால சில சங்கடங்கள் வந்தாலும் அதையெல்லாம் குரு பலத்தால சமாளிச்சிடு வீங்க. அதுக்கு நிதானம் ரொம்ப முக்கியம். டாக்டர் ஃபீஸ் கொடுக்க வேண்டியிருக்கலாம். தயாரா இருங்க. ●



அ. ரக நூலகத்தில் ஆலோசனைப் பதிவேட்டைக் கேட்டு வாங்கி என் எண்ணத்தை அதில் பதிவு செய்தபோது சற்றுத் தொலைவிலிருந்த அந்த நடுத்தர வயதுக்காரர் என்னையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

இன்னும் சற்று அதிக உயரமென்றால் மாநகரப் பேருந்தில் அவரது தலை இடிக்கக் கூடும். அந்த உயரம் சட்டென்று மனத்தில் தைக்காத அளவுக்கு அதற்கேற்ற ஆரோக்கியமான உடல்வாகு. உடையில் கண்களை உறுத்தாத ரசனை. மடிப்பு கலையாது அவை இருந்ததில் ஓர் ஒழுங்குமுறையும் தெரிந்தது. இருபது விரல்களிலும் ஒட்ட வெட்டப்பட்ட நகங்கள். இத்தனையும் மனத்தில் சற்று நேரம் கழித்தே பதிந்

# நூல்

தது. காரணம் உடனடியாக ஈர்த்த அவரது கண்கள். காந்தம்! அதனால்தான் "உங்ககிட்டே அஞ்சு நிமிஷம் பேசலாமா?" என்று அவர் கேட்டபோது உடனடியாக ஒப்புக் கொண்டேன்.

தன் பெயர் ராமசேஷன் என்றும் தான் ஒரு தனியார் தொலைக்காட்சி நிறுவனத்தில் பணிபுரிவதாகவும் கூறினார். உடனே நிகழ்ச்சித் தயாரிப்பாளர் என்றெல்லாம் நான் எண்ணி விடக் கூடாதே என்ற அவசரத்துடன் தான் ஒரு கணக்காளர்தான் என்றார். பிறகு பார்வையைக் கேள்வியாக்கினார். அதாவது இப்போது அறிமுகம் செய்து கொள்ள வேண்டியது என் முறையாம்.

மூர்த்தி. பதினெட்டு வயது. பி.காம். படிப்பை தொலை தூரக் கல்வி மூலமும், கணிப்பொறிக் கல்வியில் நேரடிப் பயிற்சியையும் பயில்வதைச் சொன்னேன்.

"நிறையப் படிக்கிறீங்க போல" என்றார்.

இந்தக் காலத்தில் வணிகவியலும், கணிப்பொறிப் பயிற்சியும் பலரும் படிப்பதுதானே என்றேன். தன்னடக்கம்!

"அதைச் சொல்லலே. நூல் நிலையத்துக்கு வந்து புத்தகங்களை தேடிப் படிக்கும் நல்ல பழக்கம் இருப்பதைச் சொன்னேன்" என்றார். பிறகு "இதுபோன்ற நூலகங்களில் ஆலோசனைப் புத்தகத்தைக் கேட்டு

**அருண் சரண்யா**

# நூல் நூல் நூல்

வாங்குவதே பெரிய விஷயம். அந்த சாதனையை செய்து, நீங்கள் அதிலே என்ன எழுதி னீங்கன்றதை கொஞ்சம் நின்ன படியே என்னாலே படிக்க முடிந்தது. 'நிறைய மாதநாவல்கள் வாங்கணும்'னு எழுதியிருக்கீங்க. ஏன் அப்படி? அவற்றிலே என்ன இருக்கு?"

உடனடியாகச் சொன்னேன். "விறுவிறுப்பு".

"எந்த மாதிரி? இஞ்சிமரப்பா விறுவிறுப்பா? புகையிலை விறுவிறுப்பா?"

விளங்கியது. அவை ஆரோக்கியமான சிந்தனைகளை வளர்க்கப் பயன்படுகின்றனவா? அல்லது மூளைச் சலவை செய்வதோடு சரியா? என்று கேட்கிறார். இப்படியெல்லாம் யோசித்ததில்லையே. படிக்குபோது சந்தோஷமாக இருக்கும். நேரம் வேகமாகப் போகும். படித்து முடித்தபின்தான் வைக்கத் தோன்றும். இது போதாதா?

"போதுமா?" என்று பதில் கேள்வி கேட்டபடி சற்றே வருத்தத்துடன் சிரித்தார். "ரசனைகள் ஒரு வட்டத்துக்குள்ளே நின்று விடக் கூடாது. இறைவன் இறக்கைகளைக் கொடுத்திருக்கும்போது தரையிலேதான் நடப்பேன்னா எப்படி? நாம் படிக்கும் நூல்கள் நம்மை சிந்திக்க வைக்கணும். நம் நாட்டில் ஆரம்பக் கட்ட ரசனை உள்ளவங்க நிறையப் பேர் உண்டு. பஸ் நிறுத்தத்திலும், பஸ் ஓட்டத்திலும் படிப்பதற்காகவே புத்தகங்கள் வாங்கறவங்க இருக்காங்க. பெண்களுக்கும் ஓய்வு நாட்களில் படிக்க நூல்கள் வேண்டும். இவங்களோட தேவையைப் பூர்த்தி செய்யறாங்க இந்த நாவலாசிரியர்கள்."

மேலும் அரை மணிநேரம் அவருடன் பேசியதில் என் ரசனையில் ஒரு வெற்றிடம் இருப்பதை உணர முடிந்தது. அதை நிரப்ப வேண்டும் என்ற தீவிர ஆர்வமும் எழுந்தது. சில நூல்களை அவர் சிபாரிசு செய்தார்.

அதைத் தொடர்ந்து ஓரிரு வருடங்கள் அவரைச் சந்திக்கவில்லை. என்றாலும் அவர் பரிந்துரை செய்த நூல்களைப் படிக்கப் படிக்க அவருக்கு நான் தினமுமே நன்றி கூறிக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொன்றும் ஒருவித அனுபவம்.

அடுத்து அவரை சந்தித்தது புத்தகக் கண்காட்சி ஒன்றில். கூப்பிய கையோடு "என்னென்ன புத்தகங்கள் வாங்கினீங்க?" என்றேன், அங்கிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்த அவரிடம்.

"என் பெயர் ராமசேஷன்" என்று அவர் தொடங்க, "அது எனக்கு நல்லா நினைவிருக்கு. நான் உங்களை மறக்கவே மாட்டேன் சார்" என்றேன். புன்னகையுடன் அதுதான் வாங்கிய நூலின் பெயர் என்றார். தோளில் தொங்கிக் கொண்டிருந்த அவரது பை புத்தகங்களால் பாரம் நிறைந்து பிதுங்கிக் கொண்டிருந்தது.

"சாப்பிடும்போது கூடப் படிப்பீங்களா?" என்று கேட்டேன்.

"ஏன், படிப்பே உணவாகி விடுவதும் வழக்கம்தான்" என்றார்.

வீட்டில் யாரும் இவர் இப்படிப் படிப்பில் மூழ்குவது பற்றிக் கவலைப்படுவதில்லையா? விசாரித்தேன். காரணம் சுய அனுபவம். இரவு பதினோரு மணிக்கு மேல் நான் படிப்பது லலிதாவுக்குப் பிடிப்பதில்லை. "பேசாம நீங்க ஒரு லைப்ரரியையே கல்யாணம் செய்துக்கிட்டிருக்கலாம்?" என்பாள், ஏற்கெனவே நான் அப்படித்தான் செய்து கொண்டிருக்கிறேன் என்பதைப் புரிந்து கொள்ளாமல்.

சென்ற வருடம் தன் மனைவி இறந்து விட்டதாக ராமசேஷன் கூறினார். வருத்தம் தெரிவித்தேன். உணர்வுகளுக்கு உணவாக இருந்த நூல்கள்தான் மனத்துக்கு மருந்தாகவும் இருந்து மனைவியின் மறைவு உண்டாக்கிய அதிர்ச்சியைக் குறைத்து வருகிறது என்றபடி விடைபெற்றுக் கொண்டார். அதற்கு முன் அவர் தாம் வாங்கிய புத்தகங்களை எனக்கு எடுத்துக் காண்பிக்க மறக்கவில்லை.

அந்த நூல்களில் பெரும்பாலானவற்றை நானும் தேடித் தேடிப் படிக்கத் தொடங்கினேன். பிரமிப்பு அல்லது சுகத்தை மட்டும் படிப்பவர் மனத்தில் ஏற்படுத்தாமல், பல கேள்விகளை எழுப்பி சுய அலசலில் ஈடுபட வைத்தன அவை. புத்தகங்களை மூடியவுடன் வேறு ஏதேதோ திறந்து கொண்டது. சக மனிதர்களைப் பற்றிய மதிப்பீடு மாறியது. முகமூடிகளுக்குப் பின்னே உள்ள உண்மைகளை இனங்காண முடிந்தது.

**ம**துரையில் மாமா மகளுக்குத் திருமணம். குடும்பத்தோடு ரயிலேறியபோது அது அத்தனை இனிமையான பயணமாக இருக்குமென்று எதிர்பார்க்கவில்லை. ஒரே பெட்டியில் அடுத்த தடுப்பில் ராமசேஷன். என் தம்பியை அனுப்பிவிட்டு அவரை என்னருகே அமர்த்திக் கொண்டேன்.

தன் ஒரே மகளைப் பார்த்து வருவதற்காக மதுரை செல்வதாகக் கூறினார். மேலும் துருவிக் கேட்டிருந்தால் பொய் சொல்லியிருப்பாரோ என்னவோ. நான் மௌனமாக இருக்க, "பையன் மாமனார் வீட்டோட இருக்கான். அங்கே நானும் இருப்பது எனக்கு தோதுப் படலே. அவங்களுக்கும்தான்" என்றார்.

உடனே நான் ஏதாவது ஆறுதல் கூறுவேனோ என்று பயந்த மாதிரி சட்டென்று என்னுடைய தற்போதைய படிப்பார்வத்தைப் பற்றி விசாரித்தார். அவர் காட்டிய பாதையில் நான் ராஜநடை போட்டுப் பயணம் செய்து கொண்டிருப்பதைச் சொன்னபோது கூடவே தொனித்த கர்வத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொள்ள வேண்டியிருந்தது.

அவரது கண்களிலிருந்தே அவர் மனம் ஆனந்தப்படுவதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

கதைச்சுவை என்பது தமிழ் மட்டுமல்ல என்றார். கன்னடம், மராத்தி, பெங்காலி போன்ற மொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டிருந்த தலைசிறந்த நூல்கள் பற்றிக் குறிப்பிட்டார். பிறகு தன் சூட்கேஸின் மீது ஒரு தாளை வைத்துக் கொண்டு அந்தப் புத்தகங்களின் பெயர்களை அக்கறையோடு எழுதித் தந்தார். ரயிலின் ஓட்டத்தையும் மீறித் தெளிவு தென்பட்டது அந்த எழுத்துக்களில்.

பின் இவையெல்லாம் என் பட்ஜெட்டில் அடங்குமல்லவா என்று சற்றே கவலையோடு கேட்க, நல்ல நூல்களைப் பொறுத்தவரை நான் கணக்குப் பார்ப்பதில்லை என்றதும் முகம் மலர்ந்தார்.

**ப**ல வருடங்கள் கைசொடுக்கும் நேரத்தில் வேகமாக ஓடிவிட்டன. இலக்கியக் கூட்டம் ஒன்று அண்ணாசாலையில் உள்ள அரங்கமொன்றில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னதாகவே சென்று முன்வரிசையில் உட்கார்ந்து கொண்டேன். பாதி நிகழ்ச்சியில் தற்செயலாகத் திரும்பிப் பார்த்தபோது நுழைவாயிலின் அருகே விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த நூல்களை ராமசேஷன் அலசிக் கொண்டிருந்ததைக் கண்டேன். அவரோடு பேச வேண்டும் என்ற ஆவலும், எந்த நூலை அவர் தேர்ந்தெடுக்கப் போகிறார் என்பதை அறியும் ஆவலும் சேர்ந்து கொண்டன. ஒரே ஒரு புத்தகத்தை மட்டுமே அவர் தேர்ந்தெடுத்ததை கவனிக்க முடிந்தது.

"எப்படியிருக்கீங்க சார்?" என்றேன்.

"அட, மூர்த்தியா? இந்த கணீர் குரலே உங்களை அடையாளம் காட்டிக் கொடுக்குதே" என்றார்.

சில நிமிடங்கள் பொதுவாகப் பேசியபின் அன்று அவர் வாங்கிய நூல் எது என்பதைக் கேட்டேன். அவர் ஏனோ சங்கடப்பட்டது போல் தோன்றியது. வற்புறுத்திக் கேட்க, அந்தப் புத்தகத்தை என்னிடம் நீட்டினார். அதிர்ச்சியாக இருந்தது. புதிய வெளியீடுதான் என்றாலும் சராசரிப் படைப்புகளை மட்டுமே தரும் ஒரு எழுத்தாளரின் நூல் அது.

நம்ப முடியாமல் அவரைப் பார்த்தேன். தான் வாங்கிய ஒவ்வொரு நூலுக்கும், அதை வாங்கியதற்கான காரணத்தைக் கூறும் அவர் இப்போது என்ன சொல்லப் போகிறார்? வாய் விட்டுக் கேட்காமலேயே இந்தக் கேள்வியை அவர் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

குரல் கரகரத்தது. "என்ன செய்ய, இது ஒண்ணுதான் பெரிய எழுத்துக்களிலே அச்சிடப்பட்டிருக்கு." ●

**''ஒரு குடுகுடுப்பைக்காரனுக்குத் தலைவர் பொன்னாடை போர்த்தி, பரிசு கொடுத்து உபசரித்தாராமே!''**

**''பின்னே... தலைவர் பேர்ல உள்ள ஊழல் வழக்குகள் எல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் விலகும்னு குறி சொன்னானே!''**

***– சீர்காழி ரேவதி***



# கலாசாரத்துக்கு ஒரு கண்காட்சி!

ஐஸ் ஹவுஸாக இருந்து, சுவாமி விவேகானந்தரின் நூற்றாண்டு விழாவின் போது 'விவேகானந்தர் இல்லமாக' மாறி மெரினா கடற்கரைச் சாலையில் ஒருபுறம் மிக வித்தியாசமாகத் தோற்றமளிக்கும் அந்தக் கட்டடம் பலவித ஒப்பனை செய்யப்பட்டு புதுப் பொலிவுக்குத் தயாராகிறது.



• புதுப்பிக்கிறார்கள்...

என்ன விசேஷம்? ராமகிருஷ்ணா மடத்தின் சென்னைக் கிளையின் தலைவர் சுவாமி கௌதமானந்தாவைக் கேட்டோம்.



• கௌதமானந்தா

"ஒரு விதத்தில் நாங்கள் விவேகானந்தர் இல்லத்தைப் 'புதுப்பிப்பது' இரண்டாவது முறை என்றே கூறலாம். 1997 மார்ச் மாதத்தில் அந்தக் கட்டடம் எங்களிடம் குத்தகைக்கு விடப்பட்டபோது அது ரௌடிகளின் சாம்ராஜ்ஜியமாக இருந்தது. மதுபாட்டில்கள், சீட்டுக் கட்டுகள், போதை மருந்தைப் பயன்படுத்திய ஊசிகள் என்று பல பொருள்களைக் கண்டோம். நாங்கள் இல்லத்தைப் பராமரிக்கத் தொடங்கிய பிறகும் கூட கொஞ்ச நாட்களுக்கு இடைஞ்சல்களும் மிரட்டல்களும் வந்த வண்ணம் இருந்தன. தகுந்த காவல் போட்ட பிறகே அமைதி நிலவத் தொடங்கியது. அந்தப் பகுதிப் பெண்கள் "இப்போதுதான் உங்கள் புண்ணியத்தில் தெருக்களில் பயமின்றி நடமாடுகிறோம்" என்று எங்களிடம் சொல்வார்கள்.

"அரசு மூன்று வருடக் குத்தகைக்கு விட்டபோதே குத்தகைக் காலத்துக்குள் அங்கு விவேகானந்தர் தொடர்பான நிரந்தரக் கண்காட்சி ஒன்றைத் தொடங்க வேண்டுமென்றார்கள். அவர்கள் எதிர்பார்ப்பையும் மீறுமளவுக்கு மிகச் சிறப்பாக அதை நடைமுறைப்படுத்தவிருக்கிறோம். டிசம்பர் மாதம் கண்காட்சியின் முதல் பகுதி பொதுமக்களுக்குத் திறந்து வைக்கப்படும்.

"தரைத்தளம் விவேகானந்தர் மற்றும் ராமகிருஷ்ணர் தொடர்பான ஒலி ஒளி நிகழ்ச்சிகளுக்காக

ஒதுக்கப்பட்டுள்ளது. மூன்று தளங்களிலும் கண்காட்சி உண்டு. என்றாலும் இப்போதைக்கு முதல் தளத்தில் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறோம். இங்கு 45 ஓவியங்களை வைக்கப் போகிறோம். நம் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் வகையில் விளங்கவிருக்கும் இவற்றை வரைய, லலித் கலா அகடமியைச் சேர்ந்த புருஷோத்தம் கரந்த், டெல்லியைச் சேர்ந்த சித்ரம் ஆகியோர் வந்துள்ளனர். ஓவியர் மணியம் செல்வத்தின் பங்கும் உண்டு.

இந்தக் கண்காட்சியைக் காண்பவர்கள்- முக்கியமாக இளைஞர்கள் நம் பண்டைய கலாசார்ரம் மற்றும் ராமகிருஷ்ணர், விவேகானந்தர் ஆகியோரின் உபதேசங்கள் ஆகியவற்றின் பெருமையையும், அவை இன்றும் எவ்வளவு பயனுள்ளவை என்பதையும் உணரும்படி செய்யப் பாடுபடுகிறோம்.

"சென்ற ஆண்டு கோலாலம்பூர் சென்றிருந்தபோது ராமாயண நிகழ்ச்சி ஒன்றைக் கண்டேன். 138 கலைஞர்கள்

## விவேகானந்தர் இல்லம் – ஒரு பின்னணி

**சிகாகோவில் புகழ்பெற்ற அந்த உரையை ஆற்றிய விவேகானந்தர் அதைத் தொடர்ந்து சென்னை வந்தபோது, 1897ம் ஆண்டு பிப்ரவரி மாதம் எட்டு நாட்கள் தங்கியது இங்குதான். இவர் தங்கியது இரண்டாவது மாடியில். பிலகிரி ஐயங்கார் என்ற வழக்கறிஞருக்குச் சொந்தமாக இருந்தது இந்த வீடு.**



**விவேகானந்தரை சென்னையில் அவரது மையம் ஒன்றைத் தொடங்குமாறு வற்புறுத்த, அவரும் ஒப்புக் கொண்டார். கல்கத்தா சென்றவுடன் தமது பிரதிநிதியாக சுவாமி ராமகிருஷ்ணானந்தரை (பரமஹம்சர் அல்ல) சென்னைக்கு அனுப்பினார். அவரது தலைமையில் இங்கு அந்த வீட்டில் சுமார் பத்து வருடங்கள் ராமகிருஷ்ணா மடம் இயங்கியது. 1907ல் கொண்டையா செட்டி என்பவர் மயிலைக் குளத்திற்கு அருகிலுள்ள நிலத்தை அளிக்க, ராமகிருஷ்ணா மடம் விவேகானந்தர் இல்லத்திலிருந்து இங்கு மாறியது.**

**விவேகானந்தர் இல்லம் பல பல கைகள் மாறி தமிழக அரசின் வசம் வந்தது. அரசு மகளிர் பட்டமேற்படிப்புப் பயிற்சிக் கல்லூரி அங்கே இயங்கியது. 1997ல் ராமகிருஷ்ணா மடத்துக்கு மூன்று வருடக் குத்தகையாக இந்த இல்லத்தை அரசு அளித்தது.**

பிரபல உட்புற வடிவமைப்பாளர் ரவிவாட் பகூத் மற்றும் மும்பையிலிருந்து ஃபைபர் கண்ணாடி ஓவியங்கள் வரைவதில் திறமைபெற்ற ஷெட்டி ஆகியோரும் உற்சாகத்துடன் ஈடுபடப் போகிறார்கள்.

"மெரினா கடற்கரையில் இருப்பதன் காரணமாகவே, இங்கு ஆயிரக்கணக்கில் மக்கள் வந்து செல்ல வாய்ப்பு உண்டு. எனவே அதற்கேற்ற உறுதியோடு கட்டடம் இருக்க வேண்டுமே. அதற்காகத்தான் புதுப்பித்துக் கொண்டிருக்கிறோம்.

பங்கு கொள்ளும் இந்த நாடகம் அங்கு தினசரி நடத்தப்படுகிறது - அரசின் ஆதரவுடன்! கேட்டபோது 'இந்த மண்ணுக்கே உரித்தான கலாசார வேர்களை மறக்க நாங்கள் தயாரில்லை' என்றார்கள் அரசுப் பிரதிநிதிகள். அதுபோல் நம்நாட்டின் கலாசாரத்தையும் மக்கள் மனத்தில் பதிய வைக்க இந்தக் கண்காட்சி உதவும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு."

**— ஜி.எஸ்.எஸ்.**



# பி.ஜே.பி.யில் 'இருவர்'!

**கௌதமி, விஜயசாந்தி வரிசையில் இன்னும் இரண்டு பேர் பாரதீய ஜனதா கட்சியில் சேர்ந்திருக்கிறார்கள். பானுமதி ராமகிருஷ்ணா, சௌகார்ஜானகி!**

**ஏன் இந்த திடீர் அரசியல் பிரவேசம்? என்று இருவரையும் கேட்டபோது :**

**சௌகார் ஜானகி :**

''நன்றாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த பா.ஜ.க. ஆட்சியை அநியாயமாக, ஒரே ஒரு வோட்டில், எதிர்க்கட்சிகள் கவிழ்த்தது இந்த நாட்டின் பிரஜை என்ற முறையில் என்னை ரொம்பவே பாதித்தது. அதுவுமில்லாமல், இன்றுள்ள அரசியல் கட்சிகளில், சாதாரண குடிமக்களைப் பற்றி அக்கறை கொண்ட கட்சி என்றால் அது பா.ஜ.க். ஒன்றுதான். எனவேதான், பா.ஜ.க.வில் சேர்ந்தேன். நான் பா.ஜ.க.வில் சேர வேண்டும் என்று ரொம்ப நாட்களாகவே வெங்கையா நாயுடு கேட்டுக் கொண்டிருந்தார். அ.தி.மு.க.வுடன் பா.ஜ.க. கூட்டணி சேர்ந்தது எனக்குப் பிடிக்கவில்லை. எனவே அப்போது ஒப்புக் கொள்ளவில்லை.

"நான் எதையும் எதிர்பார்த்து, பா.ஜ.க.வில் சேரவில்லை. இந்த நாட்டை, நாட்டின் மீது அக்கறை கொண்ட பா.ஜ.க. ஆள வேண்டும் என்பது என் விருப்பம். அதற்காக நான் உழைப்பேன். தேர்தலில் நிற்க எனக்கு ஆசையில்லை. ஆனால் கட்சிக்காக, வரும் தேர்தலில் பிரசாரம் செய்வேன். குறிப்பாக, ஆந்திராவில் பெண்கள் மத்தியில் பா.ஜ.க.வுக்கு ஆதரவு திரட்டுவேன். அண்மையில் ஹைதராபாத்தில், சுமார் முப்பதாயிரம் பேர் திரண்டிருந்த பொதுக்கூட்டத்தில் நான் பேசிய போது, நல்ல ரெஸ்பான்ஸ்!''

"முன்னர் சிவாஜி கட்சி ஆரம்பித்தபோது, அதில் சேர்ந்தீர்களே?"

''நான் சிவாஜி கட்சிக்கு ஆதரவு தெரிவித்தேன்; அவ்வளவுதான். கட்சியில் உறுப்பினராகக் கூட நான் சேரவில்லை.''

**பானுமதி ராமகிருஷ்ணா :**

"எங்கள் வீட்டுக்கு எதிரே, பா.ஜ.க. அலுவலகம் ஆரம்பித்தது முதலே கட்சியுடனான என் தொடர்பு ஆரம்பமாகி விட்டது. அவர்களது நிகழ்ச்சிகளில் நான் நிறைய கலந்து கொண்டிருக்கிறேன். இன்று நாடு உள்ள நிலையில், வாஜ்பாய், அத்வானி போன்ற தலைவர்கள்தான் தேவை.

"பல வருடங்களுக்கு முன்பே, காங்கிரஸ் சார்பில் ஓங்கோல் எம்.பி. தொகுதியில் நான் போட்டியிட வேண்டும் என்று கேட்டார்கள். அப்போது சினிமாவில் நான் ரொம்ப பிஸி. என் கணவர் தேர்தலில் போட்டியிட வேண்டாம் என்று சொல்லி விட்டார்.

"சோனியா காந்திக்கு அரசியல் அனுபவம் இடையாது. அவர் பிரதமராக வருவது நாட்டுக்கு நல்லதில்லை.

"எனக்கு எழுபத்தி நாலு வயதாகி விட்டது. இந்த வயதில் பிரசாரத்துக்குப் போக முடியாது. எனக்குத் தேர்தலில் போட்டியிடவும் இஷ்டமில்லை. ஆனாலும் என் ஆதரவு பா.ஜ.க.வுக்குத் தான்."

— சி.எம்.

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

## கணிப்பு மட்டும் போதாது!

தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்களுக்கு கலைஞர் கொடுத்த ப்ரொக்ரஸ் ரிப்போர்ட்டை "லவ் லெட்டர்" என்கிறார் மாறன். "கலைஞர் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு லவ் லெட்டர் கொடுத்திருக்கிறார். அந்த "லவ் லெட்டரை" மற்ற யாருக்கும் தெரியாமல் படித்து குறைகளைத் திருத்திக் கொள்ள வேண்டும்" என்று ஒரு பொது நிகழ்ச்சியில் பேசினார் அவர். தி.மு.க. வட்டாரத்தில் இப்போது ப்ரொக்ரஸ் ரிப்போர்ட்டைப் பற்றித்தான் பேச்சு. "அந்த ஆளுக்கு என்ன எழுதியிருக்கலாம்" என்று ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது மூன்றாவது நபரைப் பற்றி விசாரித்துக் கொள்கிறார்கள். சந்தடிசாக்கில் வேண்டாதவர்களைப் பற்றி "ரொம்ப டேமேஜிங்கா ரிப்போர்ட் இருக்கு" என்று வதந்தியைக் கிளப்பி விடுகிறார்கள். "உங்களுக்கு ஏதாவது தெரியுமா ஸார்... இந்த ரிப்போர்ட்டை வைத்து என்ன தொடர் நடவடிக்கை எடுக்கப் போகிறார்களாம்" என்று பத்திரிகை நண்பர்களைக் கேட்கிறார்கள்.

எம்.எல்.ஏக்கள் கூட்டம் என்றதும், தேர்தலைப் பற்றிப் பேசுவார்கள் என்று எதிர்பார்த்துப் போன தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்களுக்கு கலைஞர் ப்ரொக்ரஸ் ரிப்போர்ட் கொடுத்ததும் அதிர்ச்சி. ஆர்வம் தாங்காமல் உள்ளே திறந்து பார்த்தபோது 75 சதவீதத்துக்கு மேற்பட்டோருக்கு அதிர்ச்சி, அதிரடியாக மாறி விட்டது. எம்.எல்.ஏக்களின் செயல்பாடுகளைப் பற்றி ஒரு கணிப்பு செய்ய வேண்டிய யோசனையைக் கலைஞருக்குக் கொடுத்தது யார்? பெரும்பாலோரது சந்தேகம் மாறன் மீதுதான். "இது போன்ற ஐடியாக்கள் எம்.பிக்கு (மாறன்) தான் வரும்" என்கிறார் காஞ்சிபுரம் மாவட்ட எம்.எல்.ஏ. ஒருவர்.

ஆனால் கடந்த சில மாதங்களாகவே எம்.எல்.ஏக்களைப் பற்றி முதலமைச்சர் அலுவலகத்துக்கு ஏகப்பட்ட புகார்கள் வந்த வண்ணம் இருப்பதுதான் முதல்வருக்கு மிகுந்த கவலையை உண்டாக்கியதாம். கட்சிக்காரர்களிடமே லஞ்சம் வாங்கிக் கொண்டு காரியங்கள் ஆற்றும் இரு அமைச்சர்களைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டபோது கலைஞர் நொந்தே போனார். பெண் அமைச்சர்கள் என்றால் லஞ்சம் வாங்கக் கொஞ்சம் யோசிப்பார்கள் என்ற எதிர்பார்ப்பும் அடிபட்டுப் போனது. சென்னையைச் சேர்ந்த பெண் அமைச்சர் தமது மகன்களையே கமிஷன் ஏஜெண்டாக நியமித்து வசூல் வேட்டையில் இறங்கியிருக்கிறார். முதல்வர் குடும்பத்தோடு தமக்கு நெருங்கிய தொடர்பு என்று மிக தைரியமாகவே செயல்பட்டிருக்கிறார் இவர். இனி முதல்வர் வீட்டுக் கதவு அந்த அமைச்சருக்காகத் திறக்காது என்கிறார்கள்.

இன்னொரு அமைச்சர், தமது மனைவியை வசூல் வேட்டைக்காக நியமித்திருந்தார். "அம்மாவைப் பார்த்துட்டு போயிடுங்க" என்று அவர் கொஞ்சம் அசடு வழிய கட்சிக்காரர்களிடம் சொன்னால், "வெட்டினால்தான் காரியம்" என்று பொருளாம். இது போன்ற சங்கதிகள் கலைஞரின் காதுக்கு வர, அதன் விளைவே இந்த அதிர்ச்சி வைத்தியம்.

எம்.எல்.ஏக்களைப் பற்றிய கணிப்பைச் செய்தது யார்? ஒரு தனிப்பட்ட சுதந்தரமான ஏஜென்ஸியா அல்லது இப்போது பொறுப்பில் இருக்கும் போலீஸ் அதிகாரிகளா? "இது பற்றிய தெளிவான விவரம் வெளியே வராது ஸார்" என்கிறார் ஒரு மூத்த போலீஸ் அதிகாரி.

இப்போது பொறுப்பில் உள்ள ஸ்பெஷல் பிரான்ச், மற்றும் ரகசியப் புலனாய்வுப் போலீஸைத்தான் இந்தப் பணிக்குப் பயன்படுத்தியிருப்பார்கள்; ஆனால் இது போன்ற வேலைகளுக்கு போலீஸைப் பயன்படுத்தியது பற்றி வெளிப்படையாகச் சொல்ல முடியாது. அப்புறம் கட்சிப் பணிக்கு போலீஸைப் பயன்படுத்துகிறார்கள் என்ற விமர்சனம் வரும். எனவேதான் ஓய்வு பெற்ற போலீஸ் மற்றும் அரசு அதிகாரிகளை வைத்து செய்த பணி இது என்று செய்தி வெளியிட்டிருக்கிறார்களாம். பொறுப்பிலுள்ள ஆளும் கட்சி இது போன்ற evaluation பணிக்கு போலீஸைப் பயன்படுத்துவது புதிதல்லவாம். பல வருடங்களாக இது போன்று நடந்து கொண்டிருக்கிறதாம். ஆனால் புதுமை என்னவென்றால், அவரவர் பற்றிய ரிப்போர்ட்டை சம்பந்தப்பட்டவர்களுக்கே கொடுத்ததுதானாம்.

ரிப்போர்ட்டில் என்ன இருக்கிறது? ரிப்போர்ட் ஆறு பகுதிகளாக இருக்கிறது. மேலே தொகுதியின் பெயர், முதலில் சட்டமன்ற உறுப்பினர் பெயர், மற்றும் கட்சி, இரண்டாவதாக கணிப்பைச் செய்தவர்கள் அந்தத் தொகுதியில் சந்தித்த நபர்கள், மூன்றாவது பகுதியில்

# சாட்டையைக் கையிலெடுக்க



• எம்.எஸ். உதயமூர்த்தி

எம்.எல்.ஏக்களைப் பற்றியும் கணிப்பு செய்யப் பட்டிருக்கிறது என்பது புரிந்தது. காரணம், முதல் பகுதியில் உறுப்பினர் பெயர், கட்சி என்று இருக்கிறது. ஆளும் கட்சி உறுப்பினர் களைப் பற்றிய கணிப்பு மட்டுமென்றால் கட்சி யைக் குறிப்பிட வேண்டிய அவசியம் இல்லையே! ரிப்போர்ட்டில் யாருடைய கையெழுத்தோ, முத் திரையோ, அல்லது வேறு எந்தத் தலைப்போ இல்லை. கணிப்புக்காக சந்தித்த நபர்களைப் பற்றிய விவரங்களும் தெரிவிக்கப்படவில்லை.

யாரைப் பற்றி சிறப்பாகச் சொல்லப்பட்டிருக் கிறது? திருவாரூர் மாவட்டத்தைச் சேர்ந்த இளைஞர் அணி எம்.எல்.ஏ ஒருவர் தம்மைப் பற்றி மிகச் சிறப்பாக எழுதியிருப்பதாக அவரே தம்பட்டம் அடித்துக் கொண் டிருக்கிறார். "குறை சொல்ல வந்த பெண்மணி ஒருவரை அடித்து விட்டதாக அவர் மீது புகார் உண்டே" என்கிறார் மற்றொரு எம்.எல்.ஏ. "பலருக்கு அவர்கள் தொகுதிக்கு சம்பந்தப்படாத ஏரியாக்களைப் பற்றிய குறைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஸ்டாலினுக்கும் கொஞ்சம் குறைகள் சொல்லும் ரிப்போர்ட் தானாம்.

அமைச்சர்களில் 90 சதவீதம் பேருக்கு மிக மோசமான ரிப்போர்ட். கோ.சி. மணி, பொன்முடி, துரைமுருகன் போன் றோர் பாஸிடிவ்வான கருத்துக்களைப் பெற்றிருக்கிறார்களாம். சென்னையைச் சேர்ந்த சீனியர் அமைச்சர் ஒருவரைப் பற்றி "செயல்படாதவர்" என்று 'ஷாக்' அடிக்க வைக்கிறதாம் ரிப்போர்ட்.

"முதல்வர் எம்.எல்.ஏக்களுக்குக் கொடுத்திருக்கும் இந்த அதிர்ச்சி வைத்தியம் பாராட்டத்தக்கது. கட்சியைக் கட்டுப் பாட்டில் வைத்துக் கொள்ளவும் அதிகார துஷ்பிரயோகங் களைத் தவிர்க்கவும் உதவும். ஒரு சுதந்தரமான ஏஜென்ஸி இதைச் செய்திருக்கக் கூடும். எப்படியிருந்தாலும் ஊழலில் சம் பந்தப்பட்டிருப்பதாக ரிப்போர்ட் பெற்றவர்களுக்கு அடுத்த முறை கலைஞர் ஸீட் கொடுக்கக் கூடாது" என்று சொல்கிறார் "மக்கள் சக்தி இயக்கம்" உதயமூர்த்தி.

# வேண்டும் கலைஞர்!

அரசு அந்தத் தொகுதியில் செய்த பணிகள், நான்காவ தாக, தொகுதியில் கணிப்புச் செய்தவர்கள் கண்ட குறை கள், அடுத்து மக்கள் சொன்ன குறைகள். கடைசியாக சட்ட மன்ற உறுப்பினரைப் பற்றிய மக்கள் கருத்து. அந்த ரிப் போர்ட்டைப் பார்க்கும் போது, ஆளும் கட்சி எம்.எல். ஏக்களைப் பற்றி மட்டும் இல் லாமல் எல்லா கட்சி

பொதுவாகவே தி.மு.க.வினர், கலைஞரின் இந்த அதிரடியை விமர்சனம் செய்ய யோசிக் கிறார்கள். "நல்ல விஷயம்தான். ஆனால் ஒரு விஷயம்தான் புரியலை. எந்த எந்த அமைச்சர்கள் ஊழல் செய்திருக்கிறார்கள் என்பது முதல்வருக்குத் தெரிந்திருக்கிறது. அவர்களை அமைச்சரவையை விட்டுத் தூக்கியெறியும் அதிகாரம் அவரிடம் உண்டே! ஏன் அவர்களை வைத்துக் கொண்டிருக்கிறார்! ஊழல் அமைச்சர்களை நீக்கினால் தேர்தலில் நடுநிலை மக்களிடையே தி.மு.க.வுக்கு ஆதரவு பெருகும்" என்று சொல்கிறார் கோவை யைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர் ஒருவர். நல்ல யோசனை தான்!

— ப்ரியன்

# சோனியாவைத் திட்டாதே!

— கலைஞர் கட்டளை



● சமீபத்தில் நடந்த தி.மு.க. பேச்சாளர்கள் கூட்டத்தில், பேச்சாளர்களுக்குப் பல டிப்ஸ்கள் கொடுத்தார் கலைஞர். அதில் முக்கியமானது: "சோனியாவைத் தேர்தல் பிரசாரக் கூட்டங்களின்போது திட்டக் கூடாது" என்பதுதான்!

"நீங்கள் நேரடியாக சோனியாவை விமர்சனம் செய்ய வேண்டாம். கடந்த காலத்தில் ஜெயலலிதா, சோனியாவைத் திட்டியதை மட்டும் எடுத்து மக்களுக்குச் சொல்லுங்கள்" என்பதுதான் பேச்சாளர்களுக்குக் கலைஞரின் அட்வைஸ். முஸ்லீம் தீவிரவாதம் பற்றியும் கவலைப்பட்டுப் பேசினாராம் கலைஞர்.

"கிறிஸ்துவர்கள் வோட்டு, பா.ஜ.க.வுக்கு எதிராக மொத்தமாகத் திரளும் வாய்ப்பு இந்தத் தேர்தலில் இருக்கிறது. ஆனால் கழகம் அவர்களுக்கு ஒரு பாதுகாப்பு அரணாக இருக்கும் என்பதைத் தெளிவுபடுத்துங்கள். கன்னிமேரியாகத் தங்களைப் போஸ்டரில் போட்டுக் கொண்டவர்களின் முகமூடிகளை அம்பலப்படுத்துங்கள்" என்றாராம் கலைஞர்.

● அல்உம்மா பாஷாவுக்கு, இப்போதைய ஆலோசகர் ஜெயலலிதாவா? முஸ்லீம் அமைப்புகளுடன் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்திக் கொண்டு அவர்களின் பாதுகாவலராக மாறிவிட்ட ஜெயலலிதா, தமது தற்போதைய நிலையால் ஹிந்துக்கள் வோட்டை இழக்க வேண்டியிருக்கும் என்பதால் அந்த அமைப்புகளுக்குச் சில யோசனைகள் சொல்லியிருக்கிறாராம். அதில் முதலாவது,

**காதில் விழுந்தவை :**

வெடிகுண்டு கலாசாரத்திற்குத் துணை போக மாட்டோம்" என்று பகிரங்கமாக அறிவிக்க வேண்டும் என்பதாம். அவர் சொல்படிதான் அல்-உம்மா பாஷா "தமிழகம் இனி அமைதிப் பூங்காவாக இருக்கும்" என்று கோர்ட்டில் சொன்னாராம். இந்தச் சூழ்நிலையில் நாட்டுப்பற்றைத் தெரிவிக்கவும், முஸ்லீம்கள் மற்ற யாருக்கும் குறைந்தவர்களல்ல என்று நிரூபிக்கவும், முஸ்லீம் இயக்கங்கள் அம்மா ஆலோசனைபடி ரத்ததான முகாம், பாதுகாப்பு நிதி என்று பல நடவடிக்கைகளில் இறங்க இருக்கிறார்களாம்! இதற்கிடையில் முஸ்லீம் அமைப்புகளின் வாழ்வுரிமை மாநாட்டுக்குத் தடைவிதிக்க வேண்டும் என்று ஒருசில போலீஸ் அதிகாரிகள் கருத்துத் தெரிவிக்கிறார்களாம்.

"அப்படியெல்லாம் செய்து பரபரப்பை உண்டாக்க வேண்டாம். அவர்கள் என்ன பேசப் போகிறார்கள் என்று தெரியாத சூழலில் நாம் எதுவும் செய்ய வேண்டாம்! அவர்கள் மாநாடு நடத்தட்டும்" என்று சொல்லி விட்டாராம் முதல்வர்.

● தமிழக ஜனதா தளத் தலைவர் வடிவேலுவுக்கு கிருஷ்ணகிரி தொகுதியிலிருந்து போட்டியிட ஆசை. சென்னை வந்திருந்த தேவேகௌடா மூலம் அம்மாவிடம் தூது விட்டாராம் வடிவேலு. 'பார்க்கலாம்' என்று சொல்லியிருக்கிறாராம் அம்மா. "கிருஷ்ணகிரி தொகுதியில் ஜனதா தளத்துக்கு வெற்றி நிச்சயம்" என்று நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாராம் வடிவேலு. இதில் முக்கியமான சங்கதி என்னவென்றால், தேர்தல் செலவை கவுடாஜி பார்த்துக் கொள்கிறேன் என்று சொல்லி விட்டாராம்!

— சஞ்சயன்




# ஆஸ்துமாவா? ஈஸ்னோபிலியாவா? சைனஸா? காசநோயா?

# இனி கவலையே வேண்டாம்

மூக்கில் நீர் வடிதல், சளி, தும்மல், மூக்கடைப்பு, இருமல், மூச்சுத்திணறல், உடல்மெலிதல், மலச்சிக்கல், பசியின்மை, உடல் நடுக்கம், நரம்பு தளர்ச்சி இவைகளை ஆரம்ப காலத்தில் கவனிக்காவிட்டால் மேலே கூறிய நோய்கள் ஏற்படும். இவைகள் ஏற்பட காரணம், நம் உடலிலுள்ள சிறுநீரகங்கள் இரத்தத்திலுள்ள கழிவு நீரைப் பிரித்து வெளியேற்றுகின்றன. சிறுநீரகங்களில் வடிகட்டும் பகுதியில் உப்புப் படிவங்களால் ஏற்படும் குளிர்ச்சித் தன்மையால் சுருக்கம் ஏற்படுவதினாலோ, கழிவு நீர் முறைப்படி முழுவதும் இரத்தத்திலிருந்து பிரிக்கப்பட முடியாமல் இரத்தத்திலேயே ஓரளவு கலந்து இருந்து விடுகிறது. அடுத்தாற் போல் இரத்தம் மார்புப் பகுதியில் உள்ள நுரையீரலில் சுரக்கும் நீருடன் கலந்து சுத்தப்படுத்தப்படுகிறது. சுத்தப்படுத்தப்படும் போது பிரிக்கப்படும் கழிவுநீர், தும்மல் மூலம் மூக்கில் நீராக வெளியேறுகின்றது. இந்நீர் இறுகி மூக்கடைப்பு ஏற்படுகிறது. மூக்குச்சிந்தும் போது இது மூக்குச்சளியாக வெளியேறுகின்றது. இம்முறைகளில் வெளியேற்றப்படாத எஞ்சிய கழிவு நீரே நுரையீரலில் படிந்து விடும் கபம் எனப்படுவதாகும். மேலும் உடலில் தூய்மையான இரத்த உற்பத்தியும், சீரான இரத்த ஓட்டமும் இருந்தால்தான் உடலில் உள்ள அனைத்து உறுப்புகளும் பழுதடையாமல் நல்ல நிலைமையில் இருக்கும். வேப்பிலை, துளசி, அத்தி, அருகம்புல், வில்வம் போன்ற தெய்வீக மூலிகைகளுடன், அற்புத மருத்துவ குணம் கொண்ட ஆடாதொடை, கற்பூரவல்லி, தூதுவளை, கீழாநெல்லி போன்ற மூலிகைகளை உட்கொள்வதால் உடலில் தூய்மையான இரத்த உற்பத்தியும், சீரானதடையற்ற இரத்த ஓட்டமும், நோய் எதிர்ப்பு சக்தியும், ஒவ்வாமை (Allergy)யால் ஏற்படும் நோய்களையும் பக்க விளைவு, பின் விளைவு இன்றி குணப்படுத்துவது உறுதி! மேலும் ஆலோசனைக்கு -



**தெய்வீக மூலிகை வைத்தியர்கள்**

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A) 635 601 ✆ : 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 | ✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065-5621218

**1999 ஜனவரியில் நேரில் ஆலோசனை/மருந்துகள் பெற முகாம் விபரம்.**
**(முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)**

| | | |
|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | : பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (லக்கா), 16, ஆஃபீசர்ஸ் லைன். ✆ : 0416 / 223060. |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | : மாலை 5 to 6 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு. ✆ : 04112 / 22519. |
| 1,3,5,10,21,27,28,29,30ந்தேதி | - சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில். ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.D.) | : காலை 9 to 11 ஆற்காடு பட்லண்ட்ஸ் ஹோட்டல். ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில். ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | : மாலை 5 to 6 ராஜா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | : காலை 11 to 12.30 ஹோட்டல் பிரசிடெ, கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட். ✆ : 2266374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | : மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட். ✆ : 04344 / 22899. |
| 12-ந் தேதி | - சேலம் | : காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில். ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | : மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில். ✆:0424 / 226611 / 12 / 13 / 14 /15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | : காலை 9.30 to 12.30 சேரன் டேவல் லாட்ஜ் சாந்தி தியேட்டர் பின்புறம் ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | : காலை 9 to 11 ஹோட்டல் கிரான்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு. ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | : மாலை 5 to 6 அசோகா லாட்ஜ். ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | : காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில். ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | - நாமக்கல் | : பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா. ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | : காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ். ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | : பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ். ✆ : 0421 / 740416. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | : மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | : காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ✆:421056. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | : மாலை 5 to 6 ஹோட்டல் ஆஃபின், தேவர் புரம் ரோடு. ✆ : 0461 / 327780 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | : காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு. ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம். ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் | : காலை 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு. ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | - கரூர் | : பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவஹர் பஜார். ✆ : 63763. |




தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga (CR) Ph : 4011589

18 & 19-ந் தேதி - புது டெல்லி காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Pandam Singh Road, Ajmal Khan Road, ... 5722051

பணம்

# 'தஞ்சாவூரு மண்ணு' கொடுத்த ரூ.1000!

படிக்கிற காலத்தில் நான் பணத்துக்கு ரொம்பவுமே கஷ்டப்பட்டிருக்கிறேன். நான் சொல்லுவது சென்னையில் இசை பட்டப் படிப்பு படிக்கிறபோது! கையிலே இரண்டு ரூபாய் தான் இருக்கும். அதை வைத்துக் கொண்டு நான் முழுக்க ஓட்டியாக வேண்டும். எல்லா மாணவர்களும் காலையில் இட்லி சாப்பிட்டு விட்டு, டீ குடிப்பார்கள். ஆனால், நான் டீ குடிக்க மாட்டேன். அந்தக் காசுக்கும் சேர்த்து இட்லி வாங்கிச் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொள்ளுவேன். டீக்கு பதிலாக வெறும் தண்ணீர் மட்டும் குடிப்பேன். மத்தியான நேரம் சாப்பாட்டுக்கு வழி இருக்காது. வெறும் தண்ணீரைக் குடித்து வயிற்றை நிரப்பிக் கொள்ளுவேன்.

பலரையும் நான் நண்பர்களாக வைத்துக் கொள்வேன். காரணம், வெறும் கலகலப்புக்காக இல்லை. நண்பர்கள் அதிகமிருந்தால், அவ்வப்போது அவர்கள் புண்ணியத்தில் வயிறு நிரம்புமில்லையா?

பணமில்லை என்றாலும்கூட எனக்குள் இருந்த ஈகோவுக்குக் குறைவில்லை. காலையில் சாப்பிடுகிற இட்லியைக்கூட ஓட்டலில் போய்ச் சாப்பிட்டால் விலை அதிகம் என்று பிளாட்பாரக் கடை ஆயாக்களிடம் வாங்குவேன். ஆனால் பேண்ட் ஷர்ட் போட்ட வாலிபன் பிளாட்பாரத்தில் வைத்துச் சாப்பிட்டால் நாலு பேர் என்ன நினைப்பார்கள் என்று, அதை பார்சல் கட்டி ரூமுக்கு எடுத்துக் கொண்டு வந்து அங்கே சாப்பிடுவேன்!

அப்போதெல்லாம், என் மனத்தில் தோன்றியது இதுதான். ஒருவேளை சாப்பாட்டை மட்டுமே சாப்பிட்டு விட்டு, மிகுந்த சிரமங்களுக்கிடையில், இந்த இசையை நாம் கற்றுக் கொள்கிறோம். பின்னாளில், இதே இசையை வைத்துக் கொண்டு நாம் கடுமையாய் உழைத்துச் சம்பாதிக்க வேண்டும்; நம்மால் பத்து பேருக்கு வேலை கிடைக்க வேண்டும்.

இப்போதுகூட ஒரு டிரைவருக்குப் பத்து ரூபாய் கொடுக்க வேண்டிய இடத்தில் நான் தயங்காமல் இருபது ரூபாயை எடுத்துக் கொடுக்கிறேன். பணம் இருப்பதால், இஷ்டத்துக்கு செலவு செய்கிறேன் என்று அர்த்தம் இல்லை. ஒருவேளை சாப்பாட்டுக்கு நான் பட்ட திண்டாட்டம் என்ன என்பது எனக்குத் தெரியும். அந்தக் கஷ்டத்தை நாம் இந்த டிரைவருக்குத் தர வேண்டாம். அவனாவது வயிறார சாப்பிடட்டும் என்கிற எண்ணத்தில் செய்யும் காரியம்தான் அது.

சென்னைக்கு வந்த புதிதில், பத்து காசு இல்லாத காரணத்துக்காக, ஐந்து கிலோ மீட்டர் தூரம் நான் நடந்தே போயிருக்கிறேன்.

ஒரு நண்பரைப் பார்ப்பதற்காகப் போயிருந்தேன். திரும்பி வருகிறபோது, கையில் வெறும் அறுபது காசுதான் இருந்தது. வழியில் ஒரு பிச்சைக்காரன் கை நீட்டினான். "நல்ல ஆள் பார்த்தியே பிச்சை கேட்க" என்றபடியே என் பாக்கெட்டுக்குள் கையை விட்டபோது, ஒரு பத்து காசு நாணயம் கையில் தட்டுப்பட்டது. உடனே எதைப் பற்றியும் யோசிக்காமல், அந்தப் பத்து காசை அந்தப் பிச்சைக்காரனிடம் கொடுத்து விட்டேன். பஸ் ஸ்டாப்பை நெருங்கியபோதுதான், நான் தங்கியிருந்த கோடம்பாக்கம் செல்ல பஸ் கட்டணம்

அறுபது காசு என்பது நினைவுக்கு வந்தது. பத்து காசைப் பிச்சை போட்டு விட்டோமே; இப்போது என்ன செய்வது என்ற கேள்விக்குறி எழுந்தது. ஐம்பது காசு டிக்கெட்டில் எதுவரை பயணம் செய்யலாம் என்று எனக்கும் தெரியாது. அதைக் கண்டக்டரிடம் கேட்கவும் தயக்கம். எனவே, சட்டென்று முடிவு செய்து, விடு விடுவென்று கோடம்பாக்கம் நோக்கி நடக்க ஆரம்பித்தேன். பத்து காசு இல்லாது போனதால் ஐந்து கிலோமீட்டர் தூரம் நடந்தே வீடு வந்து சேர்ந்தேன்!




புஷ்பவனம் குப்புசாமி

சென்னைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது, நம்மிடம்தான், ஏராளமான நாட்டுப் புறப் பாடல்கள் இருக்கின்றனவே, அவற்றைப் பாட சென்னை தொலைக்காட்சியில் வாய்ப்புக் கேட்டால் என்ன என்கிற எண்ணத்தில், தொலைக்காட்சி நிலையத்துக்குப் போனேன். கிராமப்புறக் கலைகள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிப் பொறுப்பாளராக இருந்தவர் யு.எம். கண்ணன். அவரிடம், என் ரேடியோ அனுபவங்களைச் சொல்லி, டி.வி.யில் பாட வாய்ப்புக் கேட்டேன். அவர் கொஞ்சம் பிஸியாக இருப்பதால் அடுத்த வாரம் வந்து பாருங்கள் என்று சொன்னார். சட்டென்று யாரும் எதிர்பாராத நிலையில் உரத்த குரலில், 'தஞ்சாவூரு மண்ணை எடுத்து, தாலி ஒண்ணு செய்ய சொன்னேன்' என்று பாடினேன். அடுத்த அறைகளில் இருந்தவர்கள், என் குரலைக் கேட்டு, அங்கே வந்து கூடி விட்டார்கள். ''இவ்வளவு நல்லா பாடறீங்களே! உங்களுக்கு சான்ஸ் தராமல் இருக்கலாமா?'' என்று சொல்லி, உடனடியாக வாய்ப்புக் கொடுத்தார். அரைமணி நேர நிகழ்ச்சி. வெளுத்து வாங்கினேன்! ஆயிரம் ரூபாய் கொடுத்தார்கள்!

அந்த ஆயிரம் ரூபாய், எனக்கு லட்சம் ரூபாய் போல இருந்தது. நண்பர்களிடம் ஏற்கெனவே அவ்வப்போது வாங்கியிருந்த பணத்தையெல்லாம் சந்தோஷமாகத் திருப்பிக் கொடுத்தேன். 'எதற்காக இப்போது திருப்பிக் கொடுக்கிறாய்?' என்று கேட்டபோது, ''என்னிடம் இல்லாத போது நீங்கள் உதவினீர்கள். இப்போது, எனக்குப் பணம் கிடைத்திருக்கிறது. அதைத் திருப்பித் தருவதுதான் நியாயம் என்று சொன்னேன்.

இன்றுகூட அந்த ஆயிரம் ரூபாயுடன் கொடுத்த தொலைக்காட்சி நிலையக் கடிதத்தை பத்திரமாக வைத்துக்கொண்டிருக்கிறேன்.

சந்திப்பு: **கௌதம்**



# நம்பிக்கைக்குரிய நம் வீரர்!

கேப்டன் எஸ். அசோக். வயது இருபத்தி ஐந்து. இந்திய ராணுவத்தின் நாகா ரெஜிமெண்ட்டைச் சேர்ந்தவர். டேராடூன் இந்திய மிலிடரி அகடமியில் 1995-ம் ஆண்டு, பயிற்சியை முடித்தவர். கடந்த ஒரு வருட காலமாக, ஸ்ரீநகரில் ஊடுருவல் தடுப்புப் பிரிவில் இவருக்குப் போஸ்டிங்.

கார்கில் பகுதியில் பாகிஸ்தான் தீவிரவாதிகள் ஊடுருவியதைத் தொடர்ந்து, கடந்த மே மாதம் பதினோராம் தேதி சுமார் அறுபது இராணுவத்தினர் அடங்கிய பிரிவுக்குத் தலைமைதாங்கி, திராஸ் பகுதிக்குச் செல்ல இவருக்கு உத்தரவு வந்தது.

எதிரிப் படையின் பீரங்கித் தாக்குதலில் எழுந்த வெடிகுண்டுச் சிதறல்கள், கேப்டன் அசோக்கைப் படுகாயப்படுத்தின. ஸ்ரீநகரில் ஆபரேஷன் முடிந்து, சென்னைக்கு வந்து, ஆபரேஷனுக்குப் பிந்தைய சிகிச்சை + ஓய்வில் இருக்கும் கேப்டன் அசோக்கைச் சந்தித்தோம். புகைப்படத்துக்கு மறுத்துவிட்டு நம்முடன் பேசினார்:

கார்கில், திராஸ், பாடாலிங்க் பகுதிகளில் குளிர் பகலிலேயே மைனஸ் இருபது டிகிரி இருக்கும். ஸ்ரீநகரிலிருந்து புறப்பட்டு, கார்கில் வந்து சேர்ந்தவுடனேயே, பிரத்யேகக் குளிர் பாதுகாப்பு உடைகள் வழங்கி விட்டது ராணுவம்.

'5140' என்ற பகுதியை மீட்கும் பொறுப்பு எங்களுக்குத் தரப்பட்டது. இமயமலையில் 5140 மீட்டர் உயரத்தில் உள்ள மலைப்பகுதி அது. அந்தப் பகுதியை நோக்கி முன்னேறிய முதல் ராணுவப் பிரிவு எங்களுடையதுதான். ஊடுருவல்காரர்கள் எங்கெங்கே இருக்கிறார்கள், எத்தனை பேர், அவர்களிடம் எவ்வளவு ஆயுதங்கள் இருக்கின்றன என்று கண்டறிந்து சொன்னால், இந்திய ராணுவம் அதற்கேற்பப் படைகளை அனுப்பி வைக்கலாம் என்பது திட்டம். ஆயுதங்கள், வெடிகுண்டு, உணவு ஆகியவற்றை எடுத்துக் கொண்டு புறப்பட்டோம்.

மலைப்பகுதியில் முன்னேறுவது ரொம்ப சிரமமாகத்தான் இருந்தது. ஆங்காங்கே இருக்கும் பாறைகளின் பின்னால் பாதுகாப்பாக ஒளிந்து கொண்டு, அவசியமானபோது, ஆயுதங்களைப் பிரயோகித்து, எதிரிகளின் தாக்குதலையும் சமாளித்துக் கொண்டு அங்குலம், அங்குலமாகத்தான் முன்னேற வேண்டியிருந்தது.

ஒரு கட்டத்தில் என் அணியை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து, ஒரு அணியை வேறு பாதையில் செல்லும்படி உத்தரவிட்டேன்.

சுமார் முப்பது பேர்கள் அடங்கிய என் அணியுடன் முன்னேறிக் கொண்டிருந்தபோது, எதிரிகளிடமிருந்து வந்த குண்டு வெடித்து, இரண்டு பேருக்குப் படுகாயம். ஒருவருக்குக் கையில், இன்னொருவருக்குக் காலில் எலும்பு முறிவு ஏற்பட்டு விட்டது. அவர்களுடன் வேறு இரு வீரர்களை உதவிக்கு அனுப்பி, கீழே முகாமுக்குத் திரும்பச் சொன்னேன்.

மே மாதம் இருபதாம் தேதி இரவு முழுக்க, தாக்குதல் நடத்திக் கொண்டே இருந்ததால் தொடர்ந்து குண்டு மழை. ரொம்ப முன்னேற முடியவில்லை. அடுத்த நாற்பத்து எட்டு மணி நேரத்தில், சுமார் இருபது கிலோ மீட்டர் முன்னேறியிருப்போம். அவ்வளவுதான். நாங்கள் பதினைந்தாயிரம் அடி உயரத்தில் இருந்தோம்.

இருபத்தி இரண்டாம் தேதி மாலை. 5140 பகுதிக்கு ஐநூறு மீட்டர் வரை நெருங்கி விட்டோம். எங்கள் மூவ்மெண்ட்டைத் தெரிந்து கொண்ட எதிரிகள் தாக்குதலை அதிகரித்தார்கள்.

செங்குத்தான மலைப்பகுதி. நேரடியாக முன்னேற முடியாது. உச்சியிலே எதிரிகள் சௌகரியமாக ஆக்கிரமித்துக் கொண்டு சுட்டுத் தள்ளிக் கொண்டிருந்தனர். நேர் செங்குத்தான அடிப்பகுதியில் நாங்கள் இருந்ததால் அவர்களால் எங்களைத் தாக்க முடியவில்லை. அந்த இடத்தை விட்டு அகலாமல் நின்றோம்.

இரவு முழுக்க, இரண்டு மணி நேரத்துக்கு நாலு பேர் வீதம் கண் விழித்துக் காவல் காக்க, மற்றவர்கள் உட்கார்ந்த நிலையிலேயே லேசாகக் கண் அயர்ந்தார்கள். எங்கள் வசம் நாலு ஸ்டவ்கள் இருந்தன. ஒன்றை ஏற்றி, அதிலே கைகளைக் காட்டி சூடேற்றிக் கொண்டோம். இருட்டில் ஸ்டவ் வெளிச்சத்தை எதிரிகள் பார்த்து விட்டால், அதைக் குறிவைத்துத் தாக்குவார்கள். எனவே, ஸ்டவ்வையும் அவர்கள் பார்வையிலிருந்து துணி மூடி மறைத்தோம். இரவு முழுக்க அப்படியே கழிந்தது!

காலையிலும் தாக்குதல் தொடர்ந்து கொண்டேயிருந்தது. எங்களுடைய ரேடியோ சாதனங்கள் மூலம், கீழே இருந்த நிர்வாக அலுவலகத்துடன் தொடர்பு கொள்வதில் சிரமம் இல்லை. ஆனால், கடுமையான தாக்குதல் தொடர்ந்து கொண்டே இருந்ததால், எங்களுக்குப் பின்னால் புறப்பட்டு, உணவு, ஆயுத சப்ளையோடு எங்களுடன் வந்து சேர்ந்து கொள்ள வேண்டியவர்களால், வர முடியாது போய் விட்டது.

உணவு ஏதுமில்லாததால், வெறும் டீதான். அறுபது பேர் கொண்ட குழுவாகப் புறப்பட்ட நாங்கள், பிரிந்து, பிரிந்து, இப்போது பத்து பேர் மட்டுமே இருந்தோம்.

நாங்கள் மிக மிக மெதுவாக முன்னேறிக் கொண்டிருந்த நேரத்தில், எதிரியுடைய பதுங்குகுழி ஒன்று கண்ணில் பட்டது. அதைக் குறிவைத்துச் சுட்டோம். மூன்று எதிரி

**• கேப்டன் அசோக்கின் பெற்றோர் சுப்பிரமணியம் - சந்திரா : எப்போது மகனை உயிருடன் பார்ப்போம் என்று தவித்து, மகன் வந்ததும் சோகம் மறைந்து, மகனின் தீரம் பற்றிய பெருமை மிகுந்ததாகக் குறிப்பிட்டார்கள்.**



வீரர்கள் இறந்தனர். அதற்குப் பின்புறமிருந்து தாக்குதல் வந்து கொண்டிருந்ததால், மேலும் முன்னேற முடியவில்லை. தாக்குதல் அதிகரித்தது. ராக்கெட் லாஞ்சர் ஒன்று வந்து எங்களுக்கு மிக அருகில் விழுந்தது. எங்கள் அணியில் இருந்த உ.பி.யைச் சேர்ந்த ஒருவர் அடிபட்டு அந்த இடத்திலேயே இறந்தார். இன்னொருவருக்குக் கையில் பலமான அடி. எலும்பு முறிவு. நான் உட்பட ஐந்து பேருக்கு குண்டு சிதறல்களால் பலத்த அடி. எனக்கு வயிற்றுப் பகுதியில் சிதறல்கள் புகுந்தன. கைகால்களிலும் காயம். காயமின்றித் தப்பித்தவர்கள் மூன்று பேர் மட்டுமே.

நிலைமை சீரியஸ் என்று நிர்வாக ஸ்தலத்துக்குத் தகவல் அனுப்பியவுடன், உடனே அந்த இடத்திலிருந்து பின்வாங்கி, கீழே வந்து விடுங்கள் என்று உத்தரவு வந்தது.

எலும்பு முறிவுக்குள்ளானவருக்கு, இன்னொருவர் உதவி முழுமையாகத் தேவைப்பட்டது. அவரை கவனித்துக் கொள்ள ஒருவரை ஒதுக்கினேன். மற்ற இரண்டு பேரும், மற்றவர்களுடைய அத்தனை துப்பாக்கிகளையும் சுமந்து எடுத்துவர வேண்டிய கட்டாயம். பத்து பேருடையதை, இரண்டு பேர் தூக்கிக் கொண்டு வர வேண்டுமானால் எவ்வளவு சிரமம்? எனவே, இறந்தவரின் உடலை எடுத்து வர முடியாத சூழ்நிலை. காரணம், இறந்த வீரரின் உடலை விட, ஆயுதங்களை விட்டு விட்டு வருவது பேராபத்து. அதுவுமில்லாமல், அந்தக் குளிர் சூழலில் இறந்த உடல் பாதிக்கப்படாது.

பனிப்பகுதியில் மெதுவாக சறுக்கிய படியே கீழே இறங்கினோம். அப்புறம் ஐந்து கிலோ மீட்டருக்கு நடை களைத்துப் போக, நிர்வாக அலுவலகத்தை அடைந்தோம்.

அங்கே, முதலுதவி அளித்தார்கள். மறுநாள் ஹெலிகாப்டர் மூலம் எங்கள் அனைவரையும் ஸ்ரீநகர் மிலிடரி ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து, சிகிச்சையளித்தார்கள். எனக்கு வயிற்றில் ஆபரேஷன். வயிற்றின் மற்றப் பகுதிகளிலிருந்து குண்டுச் சிதறல்களை எடுத்து விட்டாலும், கணையத்தினுள் சென்று விட்டதை, எடுக்காமல் விடுவதே உசிதம் என்று டாக்டர்கள் சொல்லி விட்டார்கள்.

அதன்பின் டெல்லி அழைத்து வரப்பட்டேன். அப்புறம் சென்னை. இரண்டு மாதம் ஓய்வெடுக்க வேண்டும். பிறகு மீண்டும் புறப்பட வேண்டியதுதான்!

சந்திப்பு : **பாரதி**

## AN APPEAL

As all music lovers will know that **NATHA JOTHI SRI MUTHUSWAMI DIKSHIDAR** was one of the Trinity whose compositions in Carnatic Music are widely sung. A native of Thiruvarur, he travelled widely and attained Samadhi at Ettayapuram, Kovilpatti Taluk, Tuticorin District. The place where Sri Muthuswami Dikshidar, attained SAMADHI in this town was kept at a sorry state of affairs, prior to 1973.

In 1973, a Committee was formed under the Presidentship of Prof. A. Srinivasa Raghavan and in the same year foundation for the Memorial was laid by Sri. R. Shunmughasigamani, I.A.S. the then District Collector, Tirunelveli. The Memorial is located in 75 cents adjacent to the central bus stand, Ettayapuram. As the entire Ettayapuram Samasthanam was under the control of the Raja of Ettayapuram, this area of 75 cents was allotted to the committee for erecting the Memorial.

From November 1975, Sri Dikshidar Jayanthi is being celebrated regularly in the Memorial at Ettayapuram.

It is proposed to raise RCC roofing and give a facelift to the Memorial building besides increasing the Corpus fund, taking into account future maintenance etc. It is estimated that the cost for the above work will be about Rs. 7 Lakhs.

I appeal to all the philanthropists to contribute generously to this noble cause. Cheques/DDs may be sent to

**SRI NATHA JOTHI MUTHUSWAMI DIKSHIDAR**
**MEMORIAL COMMITTEE,**
**Abcoy Gardens,**
**Sankarnagar - 627 357**
**TIRUNELVELI DISTRICT.**

***

**K.S. RAMAN**
**SECRETARY & TREASURER**

***

**"DONATIONS WILL QUALIFY FOR DEDUCTION UNDER SEC 80 G OF THE INCOME TAX ACT 1961, vide Commissioner of Income tax Madurai No : C 464/7/96-97 dated 26.4.1999."**

**ஆர்**-டிஎக்ஸ். ஏந்தியிருந்தது போல் வெடவெடத்துக் கொண்டிருந்தார்கள் அந்த மாணவர்கள். இத்தனைக்கும், கையில் இருந்தது +2 மார்க் ஷீட்தான்!

தருண் தனக்குத் தெரிந்த தெய்வங்களையும், குங்குமப் பிரசாதம், செப்புத்தகடு இத்யாதிகளுடன் 'அருள் மிகு' பத்திரிகைகளால் அறிமுகப்படுத்தப்பட்ட

# முகமூடி மனிதர்கள்

தெய்வங்களையும் பிரார்த்தித்துக் கொண்டு, படபடக்கும் இதயத்துடன் ஷீட்டைத் திறந்தான். பாம் வெடித்தது! பி.ஸி.எம். பர்ஸண்டேஜின் முதல் டிஜிட்டே எட்டுதான்; அவனுக்கு அடுத்த எண்ணைப் பார்க்கவே கசந்தது.

எப்படியும் இன்ஜினியரிங்கில் 'ஃப்ரீ ஸீட்' கிடைக்கப் போவதில்லை! பக்கத்தில், 93% வாங்கிவிட்டு, பங்கஜ் மலர்ச்சியற்றிருந்தான். பச்... ஊருக்கு வெளியே இருக்கும் காலேஜில் கூட இரண்டு லட்சம் கேட்கிறார்களாமே?

இனி...? வீட்டுக்குப் போவதில் அர்த்தமில்லை; அங்கே அப்பா ருத்ர தாண்டவமாடிக் கொண்டிருப்பார். ''ஒழுங்காப் படின்னு படிச்சு படிச்சு சொன்னேனே...'' என்பதில் ஆரம்பித்து, "நமக்கு அவமானத்தைத் தேடித் தரத்தானே இவன் பொறந்திருக்கான்? இன்னும் எத்தனை நாளைக்கு தண்டச் சோறு போடணுமோ..." என்பதற்குத் தாவி, கடைசியில் எழுத முடியாத அசிங்கமான வார்த்தைகளால் அர்ச்சிப்பார்.

மனிதரா அவர்? மிருகம்.. இல்லை இல்லை... மிருகங்களுக்குக் கூடத் தன் குட்டிகளிடம் பாசமிருக்குமாமே? தருணைப் பொறுத்தவரை அவர் சாப்பிட்டு, ஆபீஸ் போய், தூங்கும் நேரம் தவிர, மற்ற நேரத்தில் தருணைக் கன்னா பின்னாவென்று திட்டவென்றே ப்ரோக்ராம் செய்யப்பட்ட ஒரு யந்திரம்!

"முகரக் கட்டைக்கு முதல் ஷோ ரஜினி படம் பாக்கலேன்னு அழுறதாக்கும்; முதல் ராங்க் வாங்கணும்னு தோணறதா?"- என்பதாக இவன் முகத்தைப் பார்த்துப் பேசிய பேச்சுக்கள்; "ஸாருக்கு ஆட்டோல பறக்கறது தண்ணிபட்ட பாடா இருக்கே? ரெண்டு காசு சம்பாதிக்கறது எவ்வளவு கஷ்டம்னு தெரிஞ்சாப் புரியும்... அப்பன்காரன் பணம்தானே?"

''ஒழுங்கா மார்க் வாங்கினா கவர்மெண்ட் காலேஜுல இஞ்ஜினியரிங்; இல்லேன்னா 'அண்ணா காபி' தான்னு உன் புத்ர சிகாமணிகிட்ட சொல்லி வை...'' என்பதாக மனைவியைப் பாலமாக்கிய ஏச்சுக்கள்! நடுநடுவே தன்னைப் பற்றிய 'ஸ்பீக்கர்' தகவல்கள். தருணுக்குப்



பற்றிக் கொண்டு வரும்; "ஆமாம்... நீங்க படிச்ச காலத்துல ஒரு காம்படீஷனும் கிடையாது; அறுபது மார்க் வாங்கிட்டு அட்மிஷன் வாங்கிடுவீங்க; படிபடின்னு உங்க அப்பா அம்மா பிரஷர் குடுக்க மாட்டாங்க..."- எல்லாம் முணுமுணுப்பாகத்தான் சொல்வான். உரக்கப் பேசினால் போயிற்று. "எதிர்த்துப் பேசறியா நாயே" என குரல் வளையை நெரித்து விடுவார்.

அதுவும் மூத்தவள் கிரிஜா சென்ற வருடம் திருமணமாகிச் சென்ற பிறகு, அவர் தாக்குதல்களை இவன் தனியொருவனாய் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. +2வில் அடி எடுத்து வைத்த முதலே நக்கலும் குத்தலும் உச்சஸ்தாயியை அடைந்திருந்தன. இப்போது இவன் 90% மேல் வாங்கவில்லை என்று தெரிந்தால், வீட்டில் ஒரு போக்ரனே வெடிக்கும்.

வேண்டாம்... அதில் எரிந்து சாம்பலாக வேண்டாம்; அதற்கு பீச், தண்டவாளம், இவை எவ்வளவோ மேல்; ஏன்... ஒரு முழம் கயிறு, எலிப்பாஷாணம், தூக்க மாத்



ஜெயஸ்ரீ ராஜ்

திரை... எதுவோ ஒன்று... இல்லாவிட்டால் அதுதான் ஆங்காங்கே 'ஹெல்ப்லைன்', 'ஹாட்லைட்', 'கோல்ட்லைன்'... என்று நூறு லைன்கள் வைத்திருக்கிறார்களே? யாரையாவது அழைத்து உதவி கேட்கலாம்; ஏதாவது ஒரு ஸ்வீப்பர் வேலை கிடைத்தால் கூடப் போதும்... எங்கேயோ கண்காணாத இடத்தில் இந்த யந்திரத்தின் முன் நிற்காமல், அந்த தூஷணைகளைக் கேட்காமல், வாழ நினைத்தால் வாழலாம்.

போவதற்கு முன்பு ஒரே ஒரு முறை அம்மாவின் முகத்தைப் பார்க்க வேண்டும் போலிருந்தது; தன்னைக் காணாமல் அவள் ஏதாவது ஒன்றுக்கொன்று செய்து கொண்டு விட்டால்...?

தயங்கித் தயங்கி கொல்லைப்புறமாக உள்ளே நுழைந்தவனுக்கு உள்ளே நடந்து கொண்டிருந்த யுத்தம், ஜன்னல் வழி ஒலிச் சித்திரமாகியது. கதவை மெதுவாகத் திறந்து, ஒலியைக் கூட்டினான்.

“கொறச்ச மார்க்குன்னா ஏதானா ஒரு பீகாமோ பிஎஸ்ஸியோ சேர்த்து விடுங்களேன்; சூழ் நன்னா இருந்தா முன்னுக்கு வரான்”... அம்மா குரல் சமாதானமாக ஒலித்தது.

"எனக்கு என் பிள்ளையை இன்ஜினியராத்தான் பாக்கணும்" ஆக்ரோஷமாகக் கத்தியவர், "ஏன் இத்தனை நேரமாறது! கண்ணா பின்னா ரிசல்ட் வந்து, ஏடாகூடமா ஏதானா பண்ணிக்கப் போயிருக்க மாட்டானே.." என்றார். கவலையா! நக்கலா? தருணுக்குப் புரியவில்லை. "ஆமாம்... ரொம்பக் கவலையாக்கும்; அவனை வாய்க்கு வந்தபடி திட்டினதுல ஒண்ணும் குறைச்சலில்லை"... அம்மா சமயம் பார்த்து இடித்தாள்.

"அதெல்லாம் ஒரு ரோஷம் வந்து அவன் நன்னாப் படிச்சு மெரிட்ல வந்தா நமக்கு கையைக் கடிக்காம இருக்குமேன்னு தான்... என்கிட்டப் பணம் இல்லையேம்மா... எல்லாத்தையும் போன வருஷம்தானே கிரிஜா கல்யாணத்துல போட்டேன்? அந்தக் கடனே பாக்கி நிக்கறது; மேல மேல கடன் வாங்கறதுல அர்த்தமில்லை..." அப்பாவின் குரல் உடைந்தது... "பேசாம இந்த வீட்டை வித்துடலாமான்னு நினைக்கிறேன்..." அப்பாவா பேசுகிறார்?

"உங்களுக்கென்ன பைத்தியமா? நமக்குன்னு இருக்கறது இந்த வீடுதான்; இதையும் வித்துட்டா, நாளைக்கு வர்ற மருமகள் நம்மை எங்கே சிந்துவா?"

அம்மாவா இது?

"எவளோ ஊர் பேர் தெரியாத மருமகளைப் பத்தி இப்ப பிடிச்சு என்ன கவலை? 'நம்ம அப்பா நம்மைக் கைவிடலை; அவரால குடுக்க முடிஞ்சது அத்தனையும் நமக்குக் குடுத்திருக்கார்'ன்ற நினைப்பு நம்ம பிள்ளைக்கு இருந்தா, நாளைக்கு எந்த மருமகளாலும் நம்மை ஒண்ணும் பண்ணிட முடியாது; நல்லாப் படிக்க வைச்சா, நல்ல உத்யோகம் கிடைச்சு, நம்ம பிள்ளையே ஒரு வீடு வாங்கிடுவான்..."

அப்பாவா இப்படிப் பேசுகிறார்? தருணால் தன் செவிகளையே நம்ப முடியவில்லையே!

"அதெல்லாம் இந்தக் காலத்துல யாரையும் நம்ப முடியாது; நம்ம காலத்துக்கப்புறம் தான் சொத்து பிள்ளைக்குப் போய்ச் சேரணும்"

– தனக்கென்று உயிரையே கொடுப்பாள் என்று நினைத்திருந்த அம்மாவா வீட்டைக் கொடுக்கவே தயங்குகிறாள்? தருணுக்குத் தலைசுற்றியது.

"நம்ம கண்ணை மூடினப்புறம்தான் நம்ம சொத்து அவனுக்குப் பயன்படும்னா, நம்ம கண்ணை மூடினப்புறம்தான் நம்ம பிள்ளையும் நமக்கு உபயோகப்படுவான்- கொள்ளி போடவும், திவசம் பண்ணவும்! பொண்ணோட வாழ்க்கையை நன்னா அமைச்சிக் குடுக்கணும்னு கடன்பட்டாவது எவ்வளவு செலவு பண்றோம்? அப்போ பிள்ளையோட எதிர்காலமும் நன்னா இருக்கணும்னு செலவு பண்றதுதானே நியாயம்?" அவர் பேசப் பேச, தருணுக்குள் ஒரு பெரும்பாறை உடைந்து, உருகி, கண்வழி நீராய்ப் பெருகிற்று.

ஒரு முடிவுடன் வாசல் கேட் வழியாக நுழைந்தான்.

"என்ன சார்... வாங்க... என்ன மார்க்? டென் மார்க்கா? ஜெர்மன் மார்க்கா?..." அப்பாவின் குரலில் பழைய உக்கிரமும் நக்கலும் எங்கிருந்து வந்தன?

தருண் நிமிர்ந்தான்- "ம்...ம்... அம்மார்க்தான்! இந்த மார்க்குக்கு டிப்ளமா இன்ஜினியரிங் ஈஸியாக் கிடைக்கும்; அதுல சேர்ந்து படிப்பை முடிச்சு, ஒரு வேலையைத் தேடிப்பேன்; நான் சம்பாதிக்கறதை வைச்சுண்டே அப்றமா இன்ஜினியரிங் டிகிரி முடிச்சாப் போச்சு; டிப்ளமா முடிச்சவாளுக்கு செகண்ட் இயர்ல அட்மிஷன் கிடைச்சுடும்; எனக்கு யார் தயவும் வேண்டாம்..."

"என்னைத் திமிர் பிடித்தவன் என்று நினைத்தால் நினைத்துக் கொள்ளுங்கள்; உங்கள் இயலாமையை நான் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளப் போவதில்லை" என மனதுக்குள் சொல்லிக் கொண்டான் தருண். ●

● என் தந்தை நெசவுத் தொழிலில் 'கூலி வேலை செய்து வருகிறார். வருமானம் வீட்டில் உணவுச் செலவுகளுக்கே போது மானதாக இல்லை. எனவே நானும் கூலி வேலையில் சேரவே முடிவெடுத்தேன். ஆனால் எனது பத்தாம் வகுப்பு மதிப்பெண் களைப் பார்த்து சுவாமி சிவானந்தா மேல் நிலைப் பள்ளியில் சேர்த்துக் கொண்டனர். தங்கள் அறக்கட்டளை எனக்கு உதவுமா?

**பெரியநாயகன்பாளையம், எஸ். பார்த்திபன்.**



இம்மாதிரி ஆயிரக்கணக்கான கடிதங்கள் ஆண்டுதோறும் கல்வி ஆண்டின் தொடக்கத்தில் வந்து குவிகின்றன. படிப்பில் சிறந்தவர்களாக இருந்தபோதிலும் பொருளாதாரத்தில் பின்தங்கியுள்ள மாணவமணிகளுக்கு உதவும் வகையில் தொடக்கத்தில் ரூ. 10,000/- கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை விநியோகித்தது. இது பன்னிரண்டு மடங்கு உயர்ந்து அமரர் கல்கியின் நூற்றாண்டு சமயத்தில் தற்போது ரூ. 1,25,000 விநியோகமாக உள்ளது எனில், இந்த முன்னேற்றத்தில் கல்கி வாசகர்களின் பங்கு கணிசமானது. அவர்கள் அனுப்பும் நன்கொடைகளில் ரூ. 1000க்கு

# படிப்பிலே நாட்டம்: வறுமையால் வாட்டம்!

● தமிழ் நாடு பாலிடெக்னிக்கில் இரண்டாம் ஆண்டு கணிப்பொறித் துறை படிக்கிறேன். என் தந்தை வேலையில்லாமல் கஷ்டப்படுவதால் என்னைப் படிக்க வைக்க முடியாமல் தவிக்கிறார். என் படிப்பை இடையில் நிறுத்திவிடாமல் தொடர, கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை மூலம் உதவும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**மதுரை, எம். பரணிஸ்ரீ.**



மேற்பட்டவை மூலதன நிதியில் சேர்க்கப்படுகின்றன. முதலீடாகி, அதிலிருந்து கிடைக்கும் வருவாய், உதவித் தொகைகள் வழங்க நிரந்தரமாகப் பயனாகின்றன. தக்க சான்றிதழ்களுடன் வரும் மாணவ மாணவியரின் விண்ணப்பங்கள் அறங்காவலர்களால் கவனமுடன் பரிசீலிக்கப்பட்டு உதவித் தொகை பெறத் தகுதியுடைய மாணவ மாணவியர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

நன்கொடைகளுக்கு 80G வருமான வரி விலக்கு உண்டு. வாசகர்கள் தங்களால் இயன்ற அளவில் செக், டி.டி. அல்லது எம்.ஓ. அனுப்ப முகவரி :

**நிர்வாக அறங்காவலர், கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,**
**நெ. 1, ஐந்தாவது தெரு, ஏரிவட்டம், நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.**

# ஞாபக மறதியா?

## இதோ... உங்கள் பிரச்சினைக்கு தீர்வு!

க்ரௌன்

# வல்லாரை (பிரம்மி)




* சமீபத்திய விஞ்ஞான ஆராய்ச்சிகளில் பிரம்மி-வல்லாரையில் உள்ள நினைவாற்றலை அதிகப்படுத்தும் செயல்திறன் மிக்க அணுக்கள் இருப்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.
* பண்டைய சித்தர் முதல் நவீன விஞ்ஞானிகள் வரையிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.
* குறைந்த செலவில் நிறைந்த நலம்.

## உங்களது மூளையின் அபார செயல்திறனுக்கு

**க்ரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**

78, அஷ்டபுஜம் ரோடு, சூளை, சென்னை – 600 112.

போன்: 8280155, 8240166, 5321515

---

# கோலம் முதல் கட்டு சாதம் வரை

தங்கள் அன்பு மகள் திருமணத்திற்கு
சுவையான உயர்தர
சாப்பாடு டிபன்
வேளாவேளைக்கு காபி,
வைதீக ஏற்பாடுகள், பூ மாலை,
நாதஸ்வரம், பச்சபுடி
சாமான்கள்,
சீர் பக்ஷணங்கள்,
தாம்பூல வகையறா,
நிச்சயதார்த்தம் பழ தட்டுகள்,
சபைக்கு தேவையான அனைத்தும்
காண்டிராக்ட் முறையில்
செய்து தர அணுகவும்

S.R. RAGAVAN
SRI SAI MARRIAGE SERVICES
35, TAYLOR ESTATE II ST, KODAMBAKKAM
CHENNAI 600 024 Ph: 4840914 4721679
email: ragavan@rocketmail.Com

***We undertake Catering for smaller function also***

---

ஸ்ரீ ராம ஜெயம்

# வடமாநில புனித யாத்திரை

## 25 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவம்

6.9.99 இது 22 நாட்கள் கொண்டது. பூரி ஜெகந்நாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்தகயா, அலகாபாத், அயோத்தியா, காசி, சாரநாத், ஹரித்துவார், ரிஷிகேஷம், கேதார்நாத், பத்ரிநாத், நியூடெல்லி, ஆக்ரா, மதுரா, பிருந்தாவன். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ.5550/-

15.9.99 இது 14 நாட்கள் கொண்டது. ஹரித்துவார், ரிஷிகேஷம், பத்ரிநாத், கேதார்நாத், நியூ டெல்லி, ஆக்ரா, மதுரா, பிருந்தாவன். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 3600/-

4.10.99 இது 8 நாட்கள் கொண்டது. பெங்களூர், மைசூர், ஸ்ரீரங்கபட்டினம், சிருங்கேரி, அன்னபூர்ணா, கப்ர மண்யம், தர்மஸ்தலம், கொல்லூர் மூகாம்பிகை, உடுப்பி, முருடேஸ்வர், கோமடேஸ்வரர், ஸ்ரவண பெலகுளா, பேலூர், ஹலபேடு, கோகர்ணம், ஜோக்பால்ஸ். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 2100/-

30.10.99 இது 12 நாட்கள் கொண்டது. பூரி ஜெகந்நாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்த கயா, அலகாபாத், அயோத்தியா, காசி. நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 3600/-

30.10.99 இது 17 நாட்கள் கொண்டது. பூரி ஜெகந்நாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்த கயா, அலகாபாத், அயோத்தியா, காசி, சாரநாத், ஹரித்துவார், ரிஷிகேஷம், நியூடெல்லி, ஆக்ரா, மதுரா பிருந்தாவன். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 5000/-

ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராமணர்களைக் கொண்டு காலை காப்பி, டிஃபன், மதியம், இரவு உணவளிப்பதுடன் இங்கு குறிப்பிட்ட அனைத்து செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.

மேலும் விபரங்களுக்கு:



## ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்

நெ. 4, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005. ✆: 8572144.



# ஜப்பானில் டூப்ளிகேட் முத்து!

முத்து படத்தின் தில்லானா தில்லானா பாடல் காட்சி நினைவிருக்கிறதா? அதில், டான்ஸ் பின்னணியில் செயற்கையாகப் போடப்பட்ட சினிமா செட்டுக்குப் பதிலாக, பிரும்மாண்டமான வெள்ளை வெனேர் மைசூர் லலிதமகால் அரண்மனையை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். சினிமா போலவே துணை நடிக, நடிகையர் நடனம். பாட்டு டியூன் கூட ஏறத்தாழ அதுவே. காஸ்ட்டியூமும் அச்சாக அதே போல. சூப்பர் ஸ்டாருக்கு பதிலாக, 'வெள்ளெரிக்கா... பிஞ்சு வெள்ளெரிக்கா' பாடல் நடனப் புகழ் ராம்ஜி. மீனாவுக்கு பதிலாக சங்கவி.

எதற்காக இந்த மாற்றம்?

அப்படித்தானே கேட்கிறார்கள் ஜப்பானியர்கள். ஆம்! மேற்கூறியது, ஜப்பானின் புகழ்பெற்ற 'ஹைபாய்' என்ற பீர் விளம்பரம் என்றால் ஆச்சரியப்படுவீர்கள். ஆனால் அதுதான் உண்மை.

ரஜினியின் முத்து (அங்கே படத்தின் டைட்டில் 'டான்சிங் மகாராஜா'), ஜப்பானில் சக்கைபோடு போட்டதும், டைடானிக் படத்துக்கு அடுத்தபடியாக வசூலில் சாதனை படைத்ததும் பழைய கதை.

விளைவு? ஜப்பானின் பிரபல விளம்பர நிறுவனமான டென்சூ, 'ஹைபாய்' என்ற ஐந்து சதவீத ஆல்கஹால் கொண்ட குளிர்பானத்துக்காக, ஜப்பானிய டெலிவிஷனில் ஒளிபரப்ப, புதிதாக விளம்பரம் ஒன்றைத் தயாரிக்க எண்ணிய போது, உடனே நினைவுக்கு வந்தது முத்து தான்!

"உடனே இந்தியாவுக்கு வந்து, முத்து படத்தைத் தயாரித்த கவிதாலயாவை அணுகினார்கள். அந்தப் படத்தில் இடம்பெற்ற தில்லானா தில்லானா ஸ்டைலில் விளம்பரம் தயாரித்துத் தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.



''வீட்டிலிருந்தே மாதம் பத்தாயிரம் சம்பாதிக்க வேண்டுமா என்ற புத்தகத்தை எழுதின முனுசாமி வீடு இதுதானே?''

''ஆமா... அவர் மொட்டை மாடில கள்ளச் சாராயம் காய்ச்சிக்கிட்டிருக்கார்!''

— அம்பை தேவா



''என்னங்க, சினிமாவுக்குப் போகலாமான்னு யோசிக்கறேன்...''

''நீ இப்படிச் சொல்லுவேன்னு தெரிஞ்சிதான் ஆபீஸ்லேர்ந்து வரப்பவே ரெண்டு டிக்கெட் வாங்கிட்டு வந்துட்டேன் மாலா!''

''அட, எவ்வளவு முன் யோசனை! என் ஃபிரெண்டுக்கும் சேர்த்து டிக்கெட் எடுத்திருக்கீங்களே, தாங்க்ஸ்!''

— சீத்தாதம்பி

"ரஜினி, விளம்பரப் படத்தில் நடிக்க மாட்டார் என்பதால், வேறு யாரை இடம்பெறச் செய்யலாம் என்று யோசித்தோம். ரஜினி போல ஸ்டைல் பண்ணும், நன்றாக நடனமாடும் ராம்ஜியை முடிவு செய்தோம். மீனாவுக்குப் பதிலாக சங்கவி. முத்து படத்தின் சில காட்சிகளை எடுத்திருந்த மைசூர் லலித மஹால் அரண்மனைதான் லொக்கேஷன். வழக்கமாக ஜப்பானியப் பொருட்களின் விளம்பரங்களை ஜப்பானிலேயே எடுப்பார்கள். இல்லையெனில் சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து போய் எடுப்பார்கள். அமெரிக்கா போவதும் உண்டு. ஆனால், முழுக்க முழுக்க இந்தியாவில் எடுக்கப்பட்ட முதல் விளம்பரம் இதுதான்'' என்கிறார் கவிதாலயாவின் நிர்வாகத் தயாரிப்பாளரான கந்தசாமி.

''ரமணி பரத்வாஜ் இசையமைத்துக் கொடுக்க, பழனி பாரதி பாடல் எழுதியுள்ளார். ஜப்பானிய பீர் விளம்பரம் என்றாலும் கூட அதில் இடம்பெற்றிருப்பது தமிழ்ப் பாடல்தான் என்பது குறிப்பிடத்தக்க விஷயம். பாடலில் இரண்டே இரண்டு ஜப்பானியச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. முப்பது விநாடிகள் ஓடும் இந்த விளம்பரம் ஜப்பான் முழுக்க இப்போது பிரபலம்.

''இயக்கம் ஜப்பானிய விளம்பரப் பட இயக்குனரான ஓபூசி. நம் தரப்பில் வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து கொடுத்தவர் டைரக்டர் வசந்த். மொத்த ஷூட்டிங்கும் மூன்றே நாளில் முடிந்து விட்டதில் ஜப்பா



னியர்களுக்கு பெரும் ஆச்சரியம். அவர்களது பட்ஜெட் அறுபது லட்சம். ஆனால் இங்கே அத்தனை செலவாகவில்லை என்பது அவர்களுக்கு இன்னும் ஒரு ஆச்சரியம்.''

பி.கு : முத்துவைத் தொடர்ந்து ஜப்பானில் வெளியான, வெளியாகவிருக்கும் படப் பட்டியல் - ரோஜா, பம்பாய், அருணாசலம், எஜமான், ஜீன்ஸ், பொற்காலம்!

தமிழ்ச் சினிமாவுக்குக் கூட இது ஒரு பொற்காலம்தான்.

— கௌதம்

படங்கள் : சுரேஷ்குமார்

# முதல்வர் மகள்

"எப்படியிருந்தான் பார்க்கறதுக்கு...?"

வாசுகியும் இந்திராவும் திரும்பவும் பெரிய விசும்பல்களைப் பதிலாகத் தந்தபோது சப்-இன்ஸ்பெக்டர் பொறுமையிழந்தார்.

"ஏன்மா! கொஞ்சமாவது அறிவிருந்தா அழறதை நிறுத்திட்டுப் பதில் சொல்லுவீங்க... சி.எம்மோட பொண்ணைக் கடத்திட்டுப் போயிட்டான்ங்கறீங்க... அவங்க இங்க வரப்போறதா எங்களுக்கொண்ணும் தகவல் இல்லை... கேக்கற கேள்விக்குப் பதிலும் சொல்லாம இப்படி அளுதுகிட்டு நின்னா நான் என்ன செய்ய முடியும்...?"

"ஐயோ! பயம்மாயிருக்கு...!" வாசுகி முகத்தை இரண்டு கைகளாலும் மூடிக் கொண்டாள்.

"ஞாபகமேயில்லீங்க... ஒரு வினாடி அந்தாளு தெரிஞ்சான். அடுத்த செகன்ட் தமிழோட கையைப் பிடிச்சு ஒரு இழு இழுத்தான். நாங்க எந்திரிக்கறதுக்குள்ள தரதரன்னு இழுத்துட்டு மேலே போய்ட்டான். ஒரு பத்தடி மேலே போனப்பறம் இடுப்பை வளைச்சு அவளைத் தூக்கின மாதிரி இருந்தது. முகமே நினைவில்லீங்க.... அந்தப் பயம் தான் நினைவிருக்கு."

கொடைக்கானலின் ஒற்றை போலீஸ் ஸ்டேஷன் தூக்கத்தில் எழுப்பி கன்னத்தில் அறையப்பட்ட அதிர்ச்சியிலிருந்தது. மலங்க மலங்க விழித்தது.

"சார்... கேள்வியெல்லாம் அப்புறம் வைச்சுக்கலாமே. முதல்ல மதுரைக்கு மெஸேஜ் குடுங்க..." பதற்றத்தில் வியர்த்

**சீதா ரவி**

திருந்த பத்மா நினைவூட்டினாள்.

"ஏன்மா, எனக்கு வேலை கத்துத் தர்றீங்களா...? நீங்க டீச்சரு. புள்ளைங்களை ஒழுங்கா கவனிக்காம விட்டுட்டீங்க. இப்போ இங்க வந்து எனக்கு மார்க்கு போடப் பாக்கறீங்க.."

"ஐயா! உங்களை வேண்டிக் கேட்டுக்கறேன். தாமதிக்காம நடவடிக்கை எடுத்திங்கன்னா கண்டுபிடிச்சுடலாம். இந்தக் கொடைக்கானல் கையகலத்து ஊரு. ரொம்பக் காலம் ஒளிஞ்சிருக்க முடியாது. கடத்தினவன் இங்கேயிருந்து தப்பிச்சுப் போகத்தான் பார்ப்பான். மலையிலேயிருந்து இறங்கற பாதை மூணுதான் இருக்கு. ஒண்ணு நாங்க வந்த கொடைக்கானல் ரோட் ரூட்; மத்தது பழனி ரோடு; மூணாவது பேரிஜம் வழியா மூணார் போகற ரோடு. மூணுத்தலயும் உடனடியா எதிர்ப்பக்கத்திலேருந்து போலீஸ் ஏறி வர்றதுக்கு ஏற்பாடு பண்ணுங்க..."

"மூணார் ரோடு சரியில்லாம மூடியிருக்கு தெரியுமில்லே...? அதிலே போக முயற்சி பண்ணினா வேற இடத்துக்குப் போனாலும் போய்டுவாங்க..." – அவர் மேல் நோக்கிக் கை காண்பித்ததைப் பார்த்து,

"ஐயோ! மேடம்" என்று வாசுகி கேவ ஆரம்பித்தாள்.

"சந்திரிகா! ப்ளீஸ், இவங்களை வெளியே அழைச்சுட்டுப் போயிடு. யாரும் ஸ்டேஷன் காம்பவுண்டைத் தாண்டி வெளியே போகக் கூடாது."

பதற்றத்தை மறைத்துக் கொண்டு சப்-இன்ஸ்பெக்டர் எதிரில் உட்கார்ந்தாள் பத்மா.

"ஸார், கொஞ்சம் யோசிங்க. அந்தப் பொண்ணு ஏறிக்கிட்டிருந்த பாதை, அருவி விழுற பாறை. உச்சிக்குப் போகற ஒத்தையடிப் பாதை. நாங்க பேர்ஷோலா போய்ச் சேர்ந்த அஞ்சாறு நிமிஷத்துக்குள்ளேயே இந்த இரண்டு பொண்ணுங்களும் தமிழ்ச் செல்வியை ஒரு முரடன் தூக்கிட்டுப் போய்ட்டான்னு அழுதுகிட்டு ஓடி வந்திருக்காங்க. அதனால அவங்க ரொம்ப தூரம் ஏறியிருக்க முடியாதுன்றது உறுதி. உடனே அந்தப் பாதையிலே நான் ஏறி ஓடிப்போய்ப் பார்த்தேன். அஞ்சு நிமிஷம் வரை ஏறின பிறகும் யாருமே, எதுவுமே கண்ணுல படலை. எந்த சுவடுமேயில்லே... நாற்பத்தஞ்சு கிலோ எடை இருப்பா தமிழ். அஞ்சடி நாலங்குலம் உயரம். அவளைத் தூக்கிக்

கிட்டு எத்தனை தூரம் ஒருத்தன் மலை யேறிட முடியும்...? அந்தப் பொண்ணும் அவனோட ஒத்துழைச்சிருப்பான்னு தோணுது."

"தேங்க்யூ ஃபார் தி கோஆபரேஷன்." தமிழ்ச் செல்வியை நேருக்கு நேர் பார்க் காமல் பேசினான் மணிமாறன்.

"ஒத்துழைப்புக்கு நன்றி"ன்னு தமிழ்லே சொல்லுங்க, இல்லைன்னா நம்ம ரெண்டு பேரோட அப்பாவும் கோபப்படுவாங்க..."

அவன் மகிழ்ச்சியோடு சிரித்தபோது அவன் எதிரொலிக்கவில்லை.

''என்ன 'உம்'முனு இருக்கீங்க...? உங் களைப் பார்த்ததும் நான் ஆச்சர்யப்பட லியே; கடிச்சுக் குதறிடற மாதிரி நீங்க முறைச்சப்போ கூட பயப்படலியே, கையைப் புடிச்சு இழுத்ததும் கூட வந் துட்டேனே? தூக்க முடியாம திணறி கீழே சரியவிட்டப்போ ஓடிப்போகாம இப்படி நாய்க்குட்டி மாதிரி ஜீப்புல வந்து பக்கத்துல உட்கார்ந்திருக்கேனே...? இப்படியெல்லாம் ஏன் செஞ்சேன்னு கேட்க மாட்டீங்களா?"

டாடா சுமோவை ஓரங்கட்டிவிட்டான் மணிமாறன். இக்னிஷனை அணைத்து விட்டு மிக மெதுவாக, பக்கத்து இருக்கை யிலிருந்த தமிழ்ச் செல்வி பக்கம் திரும்பி னான்.

"பதில் தெரியும்ன்றபோது கேள்வியை எதுக்குக் கேக்கணும்?"- அவன் பார்வை அவள் கண்களின் ஆழத்தை அளந்தது. தமிழ்ச் செல்வி சிலிர்த்துக் கொண்டாள்.

"கேள்விகள் கேட்கப் படாமலே இருக்கறதால சில பதில்கள் ஏங் கிப் போகறதுண்டு தெரியுமா...?"

மிக மிருதுவாக வெளிப்பட்ட அவள் சொற்கள் அவனுக்குள் ஓர் உணர்வு பூகம் பத்தைத் தூண்டிவிட்டன. மார்புக்குக் குறுக் காகக் கைகளை இறுக்கிக் கட்டிக் கொண் டான்.

அவன் தத்தளிப்பு அவளுக்கு ஒரு கணம் கர்வமூட்டியது. அடுத்தக் கணமே அது விலகி ஆதுரத்துக்கு வழிவிட்டது.



"மலை ஏறி வர்றப்போவே உங்க ஜீப்பைப் பார்த்துட்டேன். அப்பவே தெரிஞ்சு போச்சு; இந்தக் கொடைக்கானல் பயணம் எங்கே போய் முடியும்னு..."

நெடிய பெருமூச்சு வெளிப்பட்டது அவளிடத்திலிருந்து.

"எனக்கெப்படித் தெரிஞ்சதுன்னு நீ கேட்க மாட்டியா...?"

"முதல்ல ஆச்சர்யமாயிருந்தது. அப்புறம் நீங்க வராம இருந்திருந்தாத்தான் ஏன்னு யோசிச்சிருப்பேனோன்னு இப்போ தோணுது."

அவன் மெள்ள தலையசைத்தான்.

"தமிழ்! தமிழ்! இப்படி நீ காலேஜ் டூர் வரப்போறே, காவலில்லாம வரப்போறே என்கிறது எஸ்.பி. ரவீந்திரனுக்கு மட்டும் தெரிஞ்சுருக்கறதா உங்கப்பா நினைச்சுக்கிட்டிருக்கார். இதோ பார்..."

அவன் பின் சீட்டிலிருந்து எடுத்துக் காட்டிய ஓவியத்தில் தமிழ்ச்செல்வி அருணாசலத்தை ஆசையோடு முத்தமிட்டுக் கொண்டிருந்தாள்.

"ஐயோ!"

"எஸ்.பி. ரவீந்திரனோட மனைவி செண்பகம் வரைஞ்சது. அவங்க தம்பி சதீஷ் எனக்கு ரொம்ப நெருக்கம். 'அக்கா இதை வரைஞ்சு வைச்சிருந்தாங்க. என்னக்கான்னு ஆச்சர்யப்பட்டப்போ மழுப்பப்பார்த்தாங்க. தமிழ்ச் செல்வி கொடைக்கானல் போறாடா மணிமாறா...' அப்படின்னு நாலு நாள் முன்னால இதைக் கொண்டாந்து கொடுத்தான். பயத்துலயே சதீஷ்கிட்டே விஷயத்தை உளறிட்டிருக்காங்க அந்தம்மா. மாண்புமிகு முதலமைச்சர் அருணாசலத்தோட ஆட்சியில காவல் துறை இயங்கற லட்சணம் இதுதான்!"

"அடாடா! காவல் துறையின் லட்சணம் வேற விதமாயிருந்தா மாண்புமிகு எதிர்க்கட்சித் தலைவரின் துணிவுமிகு தவப்புல்வர் இப்படி தன் மனங்கவர்ந்த முதல்வர் மகளுடன் அன்னியோன்னியம் கொண்டாட முடியுமா...?"

"முடியாது! முடியவே முடியாது! ஒரு காலத்திலே ஒரே இலையில சாப்ட்டு போட்டோவுக்குப் போஸ் கொடுத்த நம்ம இரண்டு பேரோட அப்பாவும் விட்டுடுவாங்களா... இப்போ மட்டும் என்ன... விஷயம் வெளிய தெரிஞ்சதும் இரண்டு பேரையும் பொலி போட்டுறப் போறாங்க..."

"அத்தனையும் வறட்டு கௌரவம். கிடக்குது விடுங்க. என்ன தைரியத்துல என்னைக் கடத்தத் துணிஞ்சீங்க...?"

**"தலைவர் ரொம்ப கோபமா இருக்காரே, ஏன்?"**

**"எப்படியும் உபயோகப்படும்னு பிறந்த நாள் பரிசா யாரோ ஒரு தொண்டர் எல்லா கட்சி கரை வேட்டியும் துண்டும் அனுப்பி வச்சிருக்கிறாராம்."**

**– பி. நிர்மலா தேவி**

---

"பிரிஞ்சு போயி தனிக்கட்சி ஆரம்பிக்கறதுன்னு முடிவு செய்யறதுக்கு ஒரு வாரம் முன்னால அப்பாவோட உங்க வீட்டுக்கு வந்திருந்தேன் ஞாபகமிருக்கா...?"

"ம்..."

"உங்க வீட்டுல சுவர், கர்டனெல்லாம் கூட எங்களை விரோதத்தோட பார்த்துச்சு..."

"ப்ளீஸ்..." தமிழ்ச்செல்விக்குத் துக்கமாயிருந்தது.

"அவ்வளவு விரோதத்தையும் அன்பா மாத்திடக்கூடிய ஒரு ஆதரவுப் பார்வை உன்கிட்டே மட்டும் வெளிப்பட்டுதே தமிழ்... ஜீப்பில் ஏறி, கடத்தவும் துணிவோம்னு அந்தக் கடைக்கண் பார்வையை நம்பித்தான் இவ்வளவு தூரம் வந்தேன்..."

அவனைப் போலவே தன் கரங்களைக் குறுக்காகக் கோத்தபடி கிண்டலுடன் கேட்டாள்.

"இப்போ கைகட்டிச் சேவகம் பண்ணத் தயார்ன்றீங்களா?"

"இல்ல... விளைவுகளைச் சந்திக்கத் தயார்னு சொல்றேன்..."

சடாரெனக் கைகளை அகற்றியவன் நிதானித்தான். திரும்பி ஸ்டீயரிங்கைப் பற்றி ஜீப்பைக் கிளப்பினான்.

"நானும் தயார்தான்" என்றாள்.

ஆளரவமற்ற ஆப்ஸர்வேடரி சாலையில் ஜீப் விரைந்தது. தமிழ்ச் செல்வி போராடாமல் தன் திட்டத்துக்கு உடன் படுகிறாள் என்பது வெகு விரைவிலேயே புரிந்து போனவன், அந்த ஒற்றையடிப்பாதையை விட்டகன்று சோலை வனத்தினுள்ளே அவளுடன் நடந்து வந்து இந்தச் சாலையை அடைந்திருந்தான். நிறுத்தி வைத்திருந்த ஜீப்பில் ஏறியமர்ந்தபோது ஏற்பட்ட படபடப்பு இப்போது அடங்கியிருந்தது.

"அங்கே பார் தமிழ்...." ஒரு வளைவு தாண்டி வலப்புறத்தில் சமதளக் காட்சி விரிந்தது.

மேக மூட்டத் திரை விலகி நீலத் திட்டுகளும் பச்சைப் பரப்புகளும், பழுப்புக் கம்பளமும், செம்மை படர்ந்த ஈர நிலங்களு



மாக ஓர் உலகம் தென்பட்டது.

"அதோ தெரியுதே அது பெரியகுளம். அங்கே தூரத்துல வைகை அணை. வத்ல குண்டு அந்த திசையிலே எங்கயாவது இருக் கும்".... அவன் ஒவ்வொன்றாகச் சுட்டிக் காட்ட,

"பொம்மைக் கொலு மாதிரியிருக் கில்லே... ஆனா ஒவ்வொரு துளியிலயும் உயிரோட்டம்... அதுதான் வித்தியாசம்..."

"ஆமாம்! ஒவ்வொரு ஊரிலேருந்து நம்மைத் தேடிக்கிட்டு இந்நேரம் போலீஸ் புறப்பட்டிருக்கும்..." என்றான்.

ஜீப்கள் சீறிப் பாய்ந்து கொண்டிருந் தன. கொடைரோடு, வத்லகுண்டு, மதுரை, தேனி, திண்டுக்கல், பழனி, போடிநாயக்க னூர் காவல் நிலையங்கள் அலறிப்புடைத் துக் கொண்டு செயல்பட்டன.

கொடைக்கானலிலிருந்து வெளியேறிய அத்தனை வாகனங்களையும் நிறுத்திச் சோதித்ததில் மலைப் பாதையில் போக்கு வரத்து தேங்கி, ஸ்தம்பித்து விட்டது.

"சௌரி! என்னாச்சு...?"

"சி.எம். மகளைக் கடத்திட்டாங்களா மில்லே. சோதனை போடறாங்கண்ணே..."

"இப்படியே இரண்டு நாள் சோதனை போட்டாங்கன்னா ஊரு சுன்னத்துக்காகற தாம்...?"

"ஆமாண்ணே. தபால் கட்டெல்லாம் லேட்டாவும். இங்கிட்டிருந்து கிழங்கு லாரி யும் போகாது. அங்கிட்டிருந்து காய்கறியும் வராது."

"ஹோட்டல்காரங்க பிழைப்புல மண்ணு..."

"டேய்! எவன்டாவன்? முதலமைச்சர் மகளைக் காணோமேன்னு தேடுனா உன் பிழைப்பையா பார்த்துக்கிட்டுத் தேடும் போலீசு...?"

"சும்மாயிருங்கண்ணே... இப்படி வி.ஐ.பிங்க நம்மூருக்கு வரவும் வேணாம். நம்ம பிழைப்பைக் கெடுக்கவும் வேணாம்..."

கொடைக்கானல் ஏரியையொட்டிய பாலத்தில் நின்றபடி போக்குவரத்து நெரிசலைப் பார்வையால் சலித்தாள் பத்மா. அவள் காதுகளை எட்டிய இந்த உரையா டல் புதிய கிலியைக் கிளப்பியது.

பிழைப்பு...? உத்யோகத்தை இழக்க நேர்ந் தாலும் ஆச்சர்யமில்லை. கவனக்குறைவாக யிருந்ததற்குக் கிடைக்கக் கூடிய வெகுமதி!

ஆனால் ஏதோவொரு உள்ளுணர்வு சொல்கிறது. தமிழ்செல்வி திட்டமிட்டுத் தப்பியிருக்கிறாள். கண்டுபிடித்துவிடலாம்.

அந்த நம்பிக்கையில்தான் மாணவி களைச் சிறிய குழுக்களாகப் பிரித்து முக்கிய மான சாலைகளில் நிறுத்தியிருந்தாள்.

காலை பதினொரு மணிக்கு இரைக்க இரைக்க போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடிப் போய்ப் புகார் தந்து, நம்ப வைத்து, வசந்தா மேடமை போட் கிளப்பில் பிடித்து, ஹோட் டலில் சரோஜாவுக்கு போன் செய்து, மாரி யையும் அவர் அண்ணனையும் வர வழைத்து எல்லோரையும் ஒன்றுசேர்த்து, பதற்றம் போக்கி, கண்ணீர் துடைத்து, தைரியமூட்டி, பிரித்தனுப்பி... மாலை ஆறு மணிக்கு மீண்டும் இங்கு வந்து சந்திக்க வேண்டும் என்று திட்டம்.

களைத்து, கண்ணீருடன் திரும்பிக் கொண்டிருந்தனர் மாணவிகள்.

உதட்டைப் பிதுக்கியபடி தலையை ஓயா மல் ஆட்டினார் புரபசர் வசந்தா.

"ச்சுச்சு! பத்மா ரொம்ப கேர்லஸா இருந் துட்டே நீ...." என்றார் முந்நூறாவது முறை யாக. "யாருக்கு என்ன பதில் சொல்லு வோம் இப்போ. ப்ரின்ஸிபல் ஒரு பக்கம். சி.எம். ஒரு பக்கம். பேப்பர்லயெல்லாம் நம்ம பேரு அடிபடும். ரொம்ப அவமானம்!"

சுருண்டுபோய் சாலையோரத்தில் உட் கார்ந்துவிட்டாள் பத்மா. இயலாமை கோபத்துக்கு உரமிட்டு அதை முத்துக்குமார் பேரில் திருப்பியது.

'ஏன்...? ஏன் என்னை இப்படி நிர்க் கதியா விட்டுட்டுப் போனீங்க...? சுயநலப் பிசாசு! இப்படியா ஒரு மனுஷியைத் தூள் தூளாக்கறது?' தலையில் ஓங்கி அறைந்து கொள்ள வேண்டும்போல் எழுந்த ஆத் திரத்தை அடக்க முடிந்தாலும் முட்டிக் கொண்டு அழுகை வந்தது.

"மேடம்! மேடம்! அங்கே... அங்கே அதைப் பார்த்தோம்." தடதடக்க ஓடி வந்த கஸ்தூரி நெஞ்சைப் பிடித்துக் கொண்டு இரைத்தாள். ஆமாம் ஆமாம் என்று தலையாட் டினர் அவளுடன் வந்த மற்ற இரு மாணவி களும்.

(தொடரும்)

## 23

**சா**க்ஷாத் தமது தந்தையான பிரும்மா விடமே போய் நாரதர் சொன்னார்:

"தாங்களல்லவோ ஆச்சர்யம்? தாங்களல்லவோ தன்யாத்மா?" என்றார்.

அதற்கு பிரும்மா சொன்னார்: "நானல்ல! என்னைக் காட்டிலும் ஆச்சர்யமானது, தன்யாத்மா அந்த நான்மறைகள்தான். வேதங்கள்தான். வேதம் என்கிற பிரமாணத்தை வைத்துக் கொண்டேதான் நான் சிருஷ்டி பண்ணுகிறேன்."

எல்லாவற்றுக்கும் வேதத்தைப் பார்த்துப் பார்த்துப் பண்ணுகிறாராம் பிரும்மா.

"வேதம் இல்லையென்றால் நான் அறிவீனன். அந்த வேதங்கள்தான் எல்லாவற்றுக்கும் மூல காரணம்" என்றார்.

உடனே அங்கிருந்து வேதங்களிடம் போனார் நாரதர். மீதி



# குறையொன்றுமில்லை

இதிஹாஸ புராணங்கள், தர்ம சாஸ்திரங்கள், உலகத்திலிருக்கிற மற்ற பிரமாணங்கள் அனைத்துமே வேதத்தை நாம் தெரிந்து கொள்வதற்காக ஏற்பட்டதே யொழிய வேதங்கள்தான் பரம பிரமாணம்.

வேதங்களிடம் போய்க் கேட்கிறார் நாரதர்.

கேட்டவுடனே, வேதங்கள் அனைத்தும் சொல்கின்றன. என்ன அழகாகச் சொல்கின்றன பாருங்கள்! நான்மறைகளும் பேசுகின்றன:

"நாங்கள் எல்லோருமே யக்ஞத்துக்காக ஏற்பட்டவர்கள். யக்ஞம்தான் உயர்ந்தது."

வேதத்துக்கு விநியோகம் எங்கே என்றால் யக்ஞத்திலே.

அந்த மந்திரம் வெளியிலே தெரிய வேண்டுமானால் யக்ஞம் பண்ணினால்தான் தெரியும். இல்லையானால் வேதத்தைக் காதால்தான் கேட்க முடியும். கண்ணால் பார்க்க வேண்டுமென்றால் யக்ஞத்தில்தான் பார்க்கலாம்.

"யக்ஞத்தினால் நாங்களெல்லாம் பிரகாசிக்கிறோம். யக்ஞத்துக்கு நாங்கள் காரணமல்ல; யக்ஞம்தான் எங்களுக்குக் காரணம். ஒவ்வொரு யக்ஞத்திலும் இப்படி இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும்; இந்த மாதிரி ஹோமம் பண்ண வேண்டும் என்றெல்லாம் இருக்கிறது. ஆகையினாலே யக்ஞம்தான் எங்களுக்குப் பிரகாசம்" என்றன வேதங்கள்.

உடனே யக்ஞங்களிடம் போய்க் கேட்டார் நாரதர்:

"நீங்களல்லவோ தன்யாத்மா? நீங்களல்லவோ ஆச்சர்யம்?"

யக்ஞம் சொல்கிறது: "நாங்கள் அல்ல! நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள் நாரதரே! யக்ஞங்களெல்லாம் உயர்ந்தவை அல்ல. யக்ஞங்களில் நன்கு பிரதிஷ்டாபனம் ஆகி, பலனைக் கொடுக்கக் கூடிய யக்ஞ ரூபியான பகவான் விஷ்ணுதான் எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன். எனவே யக்ஞங்களில் இருக்கக்கூடியவனான விஷ்ணுதான் தன்யாத்மா."

இவ்வளவையும் சொன்ன நாரதர் அந்த துரியோதனாதிகளைப் பார்த்து மேலும் பேசலானார். 'தக்ஷிணையுடன் கூடிய தன்யாத்மா நான்' என்று கிருஷ்ணன் அவரிடம் சொன்னானல்லவா. அதற்கு துரியோதனாதிகளிடம் விளக்கமளித்து வந்த நாரதர் சொன்னார்:

"யக்ஞங்கள் சொன்னதைக் கேட்டுக் கொண்டு இங்கே வந்தேன். இப்போது விஷ்ணுவையே நேரே பார்த்துவிட்டேன்."

நாரதர் பாக்யவான். இப்போது நாம் இதையெல்லாம் வெறுமே காதால் கேட்கிறோம். அவ்வளவுதான். ஆனால் நாரதர் விஷ்ணுவாகிற பகவானை நேரில் பார்த்தவர்.

"இங்கே வந்து 'ஆச்சர்யமானவனே' என்று ஸ்தோத்திரம் பண்ணினேன். ஆனால், பகவான் தான் மட்டும் ஆச்சர்யம் அல்ல; தான் மட்டும் தன்யாத்மா அல்ல; **தக்ஷிணையுடன்** என்று சொன்னான். என்னுடைய கேள்விக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. எனக்குத் திருப்தி ஏற்பட்டுப் போய்விட்டது. நான் போய்விட்டு வருகிறேன் என்று புறப்பட்டு விட்டேன். அப்படியானால் எதுவுமே விஷ்ணுவோடு முடியவில்லை; தக்ஷிணையோடு முடிகிறது என்று பகவானே சொன்னதாகிறது.

"ஒரு பெரிய யக்ஞம் நடக்கிறது. தக்ஷிணை இல்லாமல் யக்ஞம் நடக்கிறது. அப்போது அந்த யக்ஞத்துக்குப் பெருமை உண்டா என்று கேட்டால், யக்ஞமே கெட்டுப் போய் விடுகிறது," என்றார் நாரதர்.

ஆபஸ்தம்ப சூத்திரம் எழுதுகிற போதே அந்த உயர்ந்த சூத்திரத்திலே



முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# அருள்வாக்கு

ஈச்வரன் வேணுமா? அதற்கு, அவனைத்தான் நேரில் உபாஸிக்கணுமென்றில்லை. அவனைப் பிடித்துக் கொண்டு வர நம்முடைய உபாஸனா சக்தி போதவே போதாது. அதனால் ஒரு குருவைப் பிடித்துக்கொண்டு விட்டால் போதும். நமக்காக அவர் ப்ரார்த்தித்தோ சண்டை போட்டோ அவனை இழுத்துக் கொண்டு வந்து விடுவார்.



இப்படி, தனக்குக் கிடைத்த ஈச்வர தர்சனம் தன்னுடைய சிஷ்யர்களுக்கு, அல்லது தன்னைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் கிடைக்கும்படியாகப் பல மஹான்கள் பண்ணியிருக்கிறார்கள்.

ஸோமாசி மாற நாயனார் கதையில் இப்படித்தான் பார்க்கிறோம். அவர் தம்மால் நேராக ஈச்வரனை வருவித்துக் கொள்ள முடியாதென்று ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளிடம் போய் வேண்டிக் கொள்ள, ஸுந்தரமூர்த்தி அப்படியே வரவழைத்து விட்டாரென்று கதை. இவர்களை குரு சிஷ்யர்களென்று சொல்ல முடியாது. ஆனாலும் இதிலிருந்தே ஈச்வரனோடு நெருங்கியிருக்கிற குரு, அவனை சிஷ்யனுக்கும் நெருக்கமாகக் கொண்டு வந்து விட முடியுமென்று தெரிகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

எழுதுகிறார்:

ஒரு யக்ஞம் நடக்கிறது ஒரு கிராமத்திலே என்றால், அந்த கிராமத்திலே போய் வேத வித்துக்களையெல்லாம் பிரார்த்திக்க வேண்டுமாம். ஒவ்வொரு வேதத்தையும் அத்யயனம் பண்ணியவர்களிடம் போய்க் கேட்க வேண்டுமாம்: "நீங்களெல்லாம் வந்து யக்ஞம் நடத்தி வைக்க வேண்டும். ஒரு மண்டலமோ, ஒரு மாதமோ இருந்து நடத்தி வைக்க வேண்டும்."

உடனே அந்த வேத வித்துக்கள் என்ன கேட்கிறார்கள்...?

"மங்களமான நிறைந்த தக்ஷிணை உண்டா யக்ஞத்துக்கு?"

உடனே இவர்களெல்லாம், "தக்ஷிணையா...? யக்ஞம் முடிந்த பிற்பாடு என்ன...? இப்போதே தருகிறோம் கொஞ்சம்" என்று யக்ஞத்துக்கு முன்பாகவே கொஞ்சம் தக்ஷிணையைக் கொடுத்து விடுவார்களாம்!

எதெது வைதிகத்திலே இருக்கிறதோ அது தான் லௌகிகத்திலே இருக்கிறது. எதைச் சொன்னாலும் அதற்கு மூலம் வேதத்திலே இருப்பதைப் பார்க்கலாம்.

யக்ஞ பிரகரணத்திலே பாருங்கள். முதலிலேயே யக்ஞம் நடத்தி வைப்பதற்குக் கொஞ்சம் தக்ஷிணையைக் கொடுக்கிறது.

லௌகிக பாஷையிலே சொன்னோமானால், முதலில் இப்படிக் கொடுக்கப்படுவதற்கு ஒரு பெயர் இருக்கிறது இப்போது: 'அட்வான்ஸ்!' என்று சொல்கிறார்கள் பாருங்கள்.

அட்வான்ஸ் கொடுத்தாகி விட்டது என்றால் ஒப்புதல் கிடைத்து விட்டது. இந்த அட்வான்ஸ் எங்கேயிருந்து வந்தது...? யக்ஞத்திலேயிருந்து வந்ததுதான்.

வேதம் சொல்கிறது. தக்ஷிணை கொடுத்தால்தான் பூரண ஆயுளானது விருத்தி அடைகிறது. ஆகையினாலே நிறைய கொடுக்க வேண்டும். வாரிக் கொடுத்தல் வேண்டும். அப்போதுதான் போகிறவர்கள் சந்துஷ்டியுடன் போவார்கள். அவ்வாறு சந்துஷ்டியுடன் அவர்கள் போகாவிட்டால் யக்ஞத்துக்கு நஷ்டம் ஏற்பட்டு விடுமாம்.

ஆகையினால்தான் பகவான் சொன்னான். "நான் யக்ஞம்தான். ஆனால், நான் எப்போது பிரகாசிக்கிறேன் என்றால் தக்ஷிணையோடு சேரும்போது பிரகாசிக்கிறேன்" என்றான் பரமாத்மா.

ஆகையினாலே, விஷ்ணு இல்லாமல் யக்ஞம் கிடையாது. யக்ஞம் சிறக்க வேண்டுமானால் தக்ஷிணையுடன் சேர்ந்துதான் பிரகாசிக்கும்.

இவ்வாறு வேதமானது விஷ்ணுவை வேதமாகவும் யக்ஞமாகவும் யக்ஞ பலனாகவும் யக்ஞ ரக்ஷகனாகவும் நமக்கெல்லாம் பலனைத் தரக் கூடியவனாகவும் தேவதைகளையெல்லாம் தாங்கக் கூடியவனாகவும் சமஸ்த லோகங்களையும் தாங்கக் கூடியவனாகவும் கொண்டாடுகிறது.

சிபிவிஷ்ட: என்று வேதம் அவனைக்

கொண்டாடுகிறது.

அவன் என்ன பண்ணுகிறான்...? லோகத்தையெல்லாம் தாங்குகிறான். சர்வ ஆதார சக்தி அவன்தான். யக்ஞத்தையும் தாங்குகிறான். யக்ஞ பலனையும் எல்லோருக்கும் கொடுக்கிறான்.

பிராத: காலத்திலே பண்ணக்கூடிய யக்ஞம்; அதே மாதிரி மத்யானம் பண்ணக் கூடிய யக்ஞங்கள்; சாயங்காலத்திலே பண்ண வேண்டிய யக்ஞங்கள் எல்லாம் உள்ளன.

பிரவசனம்கூட யக்ஞம்தான். இங்கே ஹோம குண்டத்தைக் காணுமே, ரித்விக்குகளைக் காணுமே என்றாலும் இதுவும் ஒரு யக்ஞம்தான். இரண்டு யக்ஞங்கள் ஒரு பிரவசனத்திலே சேர்ந்தாற்போல் நடக்கின்றன. இந்த இரண்டு யக்ஞங்களும் நன்றாக நடந்தால்தான் மற்ற யக்ஞங்கள் நடக்கும்.

அந்த இரண்டு யக்ஞங்கள் என்ன...?

ஒன்று கீர்த்தன யக்ஞம். மற்றது சிரவண யக்ஞம்.

அடியேன் பெரியோர்களால் நியமிக்கப்பட்டு இங்கே வந்து பகவானுடைய திருக்கல்யாண குணங்களைச் சொல்லுகிறேன். இது கீர்த்தன யக்ஞம். பாகவதோத்தமர்களான, மகான்களான எல்லோரும் நான் சொல்லக் கூடிய விஷயங்களை விசேஷமாகக் கேட்டு அனுபவிக்கிறீர்கள். அப்போது என்ன யக்ஞம் நடக்கிறது என்றால் சிரவணம்!

ஹிரண்ய கசிபுவினுடைய இடத்திலே பிரஹலாதன் ஒன்பது விதமான பக்தியை எடுத்துக்காட்டினான். இதிலே ஏதேனும் ஒன்று நமக்கு அமைந்தாலும் போதும்; அவனுடைய அருளுக்குப் பாத்திரமாகி உயர்ந்த கதியை அடையலாமே!

அதிலே முதன் முதலில் பிரஹலாதன் சொல்கிறபோது சிரவண பக்தியைத்தான் சொல்கிறான். சொல்வது சுலபம், கேட்பதுதான் கஷ்டம்.

கேட்கிறதுக்கு எத்தனையோ தடங்கல்கள் வரும். ஆகையினாலேயே கேட்பது ரொம்ப சிரமம்.

பகவான் நம் இந்த்ரியங்களையெல்லாம் எப்படி வைத்திருக்கிறான் என்று பார்க்க வேண்டும்.

'ஓரிடத்தைப் பார்' என்று சுட்டிக் காட்டினால், கண்ணை மூடிக்கொண்டே நாம் பார்க்க முடியாது. கண்ணைத் திறந்துதான் பார்க்க வேண்டும். ஏனென்றால் கண்ணுக்கு அழகாக மூடி போட்டிருக்கிறான்.

ஏதாவது சாப்பிட வேண்டுமானால் வாயைத் திறக்க வேண்டும். அதற்கும் மூடி போட்டிருக்கிறான். ஆனால், ஏதாவது கேட்க வேண்டுமானால் காதுக்கு மூடி போட்டிருக்கிறானா என்றால், இல்லை!

இதனால், பகவானுடைய கொள்கை என்ன...? அவன் என்ன நினைக்கிறான் என்றால், பார்க்காவிட்டாலும் பரவாயில்லை; சாப்பிடாவிட்டாலும் பரவாயில்லை; கேட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். மகான்கள் பலரிடத்தில் கேட்க வேண்டும்.

ஆறு கால்களையுடைய அந்த வண்டானது பல புஷ்பங்களில் போய் அமர்ந்து தேனை எடுத்துச் சேர்த்து வைக்கிறது. அந்த மாதிரி மகான்களிடத்திலே கேட்டு பல விஷயங்களைச் சேர்த்து வைக்க வேண்டும்.

பிருஹதாரண்யக உபநிஷத் சொல்கிறது:

நன்றாக விஷயங்களைக் கேள். கேட்ட விஷயங்களை மனத்திலேயே திருப்பித் திருப்பிப் பார்த்து நினைத்துக் கொண்டேயிரு... அப்படியே உள்ளே இருத்தி வைத்துக்கொள் என்றது.

கேட்பது எப்படி ஒரு விசேஷமான யக்ஞமென்கிறது என்று நிறைய சொல்லலாம். அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)



**"அடுத்த தெருவில் வித்தியாசமான தலைப்பில் பட்டிமன்றம் நடக்குது! போவோமா?"**

**"தலைப்பு என்னடா?"**

**"கவுண்டமணியின் புகழுக்குக் காரணம் உழைப்பா? உதைப்பா?"**

**— உ. ராஜாஜி**

அதிகாலை தொடங்கிவிடும்
அடுப்படியில் அல்லல்கள்
குயிலோடு துயிலெழுந்தும்
குமுறல்கள் அடக்கி வைத்தேன்

கடிகாரம் தொலைபேசி
கம்ப்யூட்டர் கேபிள் செய்தி
கவனித்து இயங்க வேண்டும்
கண்ணீர்விடப் பொழுதில்லை

அலுவலக இடைவேளை
ஆட்டோவுக்குக் காத்திருத்தல்
அடிக்கடி அழைத்துக் கொள்ளும்
அஞ்சுகம் பாலிகிளினிக்
அத்தனை இடங்களிலும்
அலையலையாய் மனிதர்கள்
ஆர்வக் குறுகுறுப்பு
அலைகின்ற பார்வைகள்
எப்படித்தான் நான் அழுவேன்
எங்குமே தனிமையில்லை.

குளியலறை சுவர்களுக்குள்
கேட்பார் யார்? அழுதிடலாம்
ஆரம்பிக்க கதவிடிக்கும்
'அரை மணியாய் ஆளைக்காணோம்?
ஆயிற்றா...!' குரலொலிக்கும்!

அம்மா மட்டுமிருக்கும்
அரிதான வேளையிலே
சேர்த்து வைத்த கண்ணீர்
சுமையிறக்கத் தோன்றும்
அதற்குமுன் அவள் கண்ணில்
அரும்பிவரும் நீர் கண்டு
அடங்கிவிடும் என் துக்கம்
ஆறுதலாய் அணைத்துக் கொள்வேன்.

ஆண்டவனே எனக்கொருநாள்
அழுவதற்கு ஒதுக்கிக்கொடு
அவசியமாய் இந்தவரம்
அவசரமாய்த் தந்துவிடு
குருதியெல்லாம் கண்ணீராய்
மாறிடுமுன் வழங்கிவிடு

ஏன்வேண்டும் இந்தவரம்
என்று மட்டும் கேட்காதே!
சொல்ல மட்டும் முடிந்திருந்தால்
எப்போதோ அழுதிருப்பேன்.

— மலர்

## வி.ஐ.பியைத் தெரிஞ்சுக்கங்க!

"அரசியல் போராட்டத்தில் இறங்கி விட்டால் கோர்ட் கொடுக்கும் தண்டனையை முழுமையாக அனுபவித்த பின்னரே வெளியில் வர வேண்டும். புரிகிறதா?" என்று கண்டிப்பும் ஆலோசனையுமாக மகனிடம் சொன்னார் அப்பா. அது மட்டுமல்லாமல், கழகத்தவர்களுக்கு ஜாமீன் வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்த வழக்குரைஞர்களிடம் 'அவனுக்கு ஜாமீன் வாங்கித் தர வேண்டாம்' என்றும் சொல்லிவிட்டுப் போய் விட்டார்.

"இந்தச் சம்பவம் நடந்து இருபது வருடங்களுக்கு மேலாகிறது. அதன்பிறகு கழகம் சார்பாக நடந்த பல போராட்டங்களில் கலந்து கொண்டு ஜெயிலுக்குப் போயிருக்கிறேன். ஒருமுறை தொடர்ச்சியாக 78 நாட்கள் சிறையில் இருந்தேன். தீபாவளி, புத்தாண்டு, பொங்கல் என்று பண்டிகைகள் வந்து போயின. அப்பா முதலில் சொன்னபடியே இதுவரை நடந்து கொண்டிருக்கிறேன்" என்கிறார் துணை சபாநாயகர் பரிதி இளம்வழுதி.

'சென்னை கழகத்தின் கோட்டை' என்று இன்று தி.மு.க.வினர் பெருமையாகப் பேசுகிறார்கள் என்றால் அதற்கு அடித்தளம் போட்டதில் முக்கியப் பங்கு இவரது தந்தை இளம்பரிதிக்கு உண்டு. மாவட்டச் செயலாளராக இருந்து கொண்டு திருவான்மியூரிலிருந்து திருவொற்றியூர் வரை சைக்கிளில் அலைந்து சிங்கிள் டீயை மட்டுமே உணவாகக் கொண்டு கட்சி வளர்ச்சியில் கவனம் செலுத்தியவர் அவர்.

சென்னை கடற்கரையில் உள்ள காவல் துறைத் தலைவர் அலுவலகத்துக்குப் பின்புறம் உள்ள குடிசைப் பகுதிக்குக் கைலாசபுரம் என்று பெயர். பரிதி பிறந்து, வளர்ந்தது எல்லாம் அந்தப் பகுதியில் தான்.

"உடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்கள், மூன்று சகோதரிகள். நான் ராயப்பேட்டை வெஸ்லி பள்ளியில்தான் படித்தேன்" என்கிறார் பரிதி.

பள்ளி இறுதி வகுப்பு முடிந்த பின்னர் படிப்பின் மீது கவனம் செல்லவில்லை. அப்பாவின் அரசியல் காற்று அவர் மீதும் வீசத் துவங்கி விட்டது. அது எமர்ஜென்ஸி காலம். திருமணங்களே, கலைஞருக்கு அரசியல் மாநாடுகளாக மாறிவிட்ட சூழ்நிலை. கலைஞர் கலந்து கொள்ளும் திருமணங்கள் எங்கிருந்தாலும் அங்கு ஆஜரானார் பரிதி.

"அதன் பின் சிறிது காலம் என் தந்தையுடன் அவர் பேசும் கூட்டங்களுக்குச் சென்று வந்தேன். அவர் பேச்சில் எரிமலையும் வெடிக்கும்.' இடுப்பொடிய சிரிக்க வைக்கும் நகைச்சுவையும் இருக்கும். என் பேச்சில் என் தந்தையின் ஸ்டைல் ஓரளவு இருக்கும்" என்கிறார் பரிதி.

1980களின் தொடக்கத்தில் தி.மு.கவில் இளைஞர் அணி என்ற அமைப்பு பரவலாகத் தோன்றத் துவங்கியது. சென்னை மாவட்டத்தில் இளைஞர் அணியின் முக்கியப் பங்கு வகித்தார் பரிதி. கரைகளில்லாத காட்டாற்று வெள்ளத்தைப் போல்,



செல்வாக்குப் பெற்று வந்த இளைஞர் அணியின் செயல்பாடுகளை ஒழுங்கு படுத்த நிர்வாகிகள் இல்லாத நிலை. அந்தச் சமயத்தில் திருச்சியில் இளைஞர் அணியின் சார்பாகக் கலந்துரையாடல் ஒன்று கலைஞர் மற்றும் கழக முன்னணியினர் முன்னால் நடந்தது. அந்தக் கலந்துரையாடலில் பரிதி பேசியது எல்லோரையும் நிமிர்ந்து உட்கார வைத்தது.

"கழகத்தின் பலமான தூண்களில் ஒன்று தான் இளைஞர் அணி. இதற்குப் பொறுப்பாக ஸ்டாலின் அவர்களை நியமிக்க வேண்டும். தலைவர் மகன் என்ற ஒரே காரணத்திற்காக அவரைப் புறக்கணிக்கக் கூடாது."

கூட்டம் ஏகோபித்த ஆதரவு தெரிவித்து

# சட்டசபையும் சஃபாரி சூட்டும்!

கரகோஷம் எழுப்பியது.

''அன்று நான் பேசியது யாரோ சொல்லிக் கொடுத்துப் பேசியதல்ல! முதன் முறையாக சிறைக்குச் சென்றபோது எங்களுடன் ஸ்டாலினும் இருந்தார். அப்போது அவரை மிகக் குளோசாகப் பார்த்த அனுபவத்தில்தான் 'இளைஞர் அணிக்கு அவர் தலைமை ஏற்கத் தகுதியானவர்' என்று மனத்தில் தோன்றியது. அதைத்தான் பேசினேன்'' என்கிறார் பரிதி.

அந்தக் கூட்டத்துக்கு பின்னர் இளைஞர் அமைப்பாளர்களாக ஸ்டாலின், பரிதி உட்பட சிலர் நியமிக்கப்




பட்டனர்.

1991-1996. தி.மு.க. வரலாற்றில் முக்கியமான கட்டம். பரிதியின் வாழ்க்கையிலும் தான்.

துறைமுகத்தில் நின்று வென்ற கலைஞர் ராஜினாமா செய்து விட்டார். பொதுத் தேர்தலுடன் நடக்காத எழும்பூர் தொகுதித் தேர்தல் அப்புறம் நடந்தபோது பரிதி வென்றார். துறைமுகத்தில் நடந்த இடைத் தேர்தலில் வென்ற செல்வராஜ், பின்னர் வைகோவுடன் சென்று விடவே, தி.மு.க. சார்பாக ஒற்றை ஆளாக நின்று சட்டசபையில் குரல் கொடுத்தார் பரிதி. ஒவ்வொரு முறை அவர் பேச எழுந்த போதும் அமைச்சர்கள் உட்பட ஆளும் கட்சி உறுப்பினர்கள் அவரைப் பேச விடாமல் செய்து சபையை விட்டு வெறியேற்றினார்கள்.

ஒருமுறை ராஜீவ் காந்தி மரணத்தைப் பற்றிய விவாதம் மிகவும் சூடாகி அ.தி.மு.க.- காங்கிரஸ் உறுப்பினர்கள் பரிதியின் மேல் பாய்ந்து அவரின் வேட்டியைப் பிடித்து அவிழ்த்து வெளியேற்றி விட்டனர். எனினும், வீரமுடன் போராடிய பரிதியை, அந்தக் காலகட்டத்தில் கலைஞரே முரசொலியில் கார்ட்டூன் போட்டுப் பாராட்டியது உண்டு. (காண்க-கார்ட்டூன்)

''அந்த 'வேட்டி' சம்பவத்துக்குப் பிறகு அ.தி.மு.க. ஆட்சி முடியும் வரை சட்டமன்றத்துக்கு சஃபாரி அணிந்து சென்று வந்தேன்'' என்று சிரித்தபடி சொல்கிறார்.

1996-ல் கழகம் பொறுப்புக்கு வந்தபோது பரிதி கட்டாயம் அமைச்சராவார் என்று கழகத்தில் எல்லோரும் கருதினார்கள். ஆனால் எந்த சட்டமன்றத்தில் அவர் அவமானப்படுத்தப்பட்டாரோ அதே சட்டமன்றத்தில் எல்லோரும் மதிக்கும் விதமாகத் துணை சபாநாயகர் பதவியைக் கொடுத்தார் கலைஞர். ஆனாலும் கடந்த மூன்று வருட காலத்தில் ''பரிதி அமைச்சராகிறார்'' என்ற செய்தி தொடர்ந்து அடிபட்டு வருகின்றன.

''உங்களுக்கு அமைச்சர் பதவி கிடைக்கவில்லையே என்ற வருத்தம் உண்டா?''

''சட்டப் பேரவையில் எனது ஜனநாயகக் கடைமையைப் பாராட்டும் விதமாகத் தலைவர் முரசொலியில் பலமுறை எழுதியிருக்கிறார். ஒரே எம்.எல்.ஏவாக இருந்த என்னை விலை கொடுத்து வாங்கிவிட்டால் கழகத்தின் சின்னத்தையே பறித்து விடலாம் என்று தூது விட்டுப் பார்த்தவர்கள் உண்டு. எந்தவித சபலத்துக்கும் ஆளாகாமல் எஃகு போன்ற மன உறுதி எனக்கிருப்பதற்குக் காரணம் கலைஞரின் தம்பி என்பதால்தான். அந்த ஒரு தகுதி-பதவி எனக்குப் போதும்!'' என்று உணர்ச்சி வசப்பட்டுச் சொல்கிறார்.

— ஸ்ரீநிவாசன்

படம்: ராஜன்

